# தாயுமானவர் வாழ்வும் வழியும்



THIS BOOK IS

PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF

TIRUMALA TIRUPATI DEVASTHANAMS

UNDER THEIR SCHEME

"AID TO PUBLISH RELIGIOUS BOOKS".

பேராசிரியர் பொன். சௌரிராஜன் எம்.ஏ., பிஎச்.டி.,

## குருவாகி வந்தது

இந்திரசா லம்கனவு, கானல்நீர்
எனஉலகம் எமக்குத் தோன்றச்
சந்ததமும் சிற்பரத்தால் அழியாத
தற்பரத்தைச் சார்ந்து வாழ்க;
புந்திமகி ழுறநாளும் தடைஅறஆ
னந்தவெள்ளம் பொலிக, என்றே
வந்தருளும் குருமௌனி மலர்த்தாளை
அனுதினமும் வழுத்தல் செய்வாம்.[1]

## பெரிய பொருள்

அருமறையின் சிரப்பொருளாய், விண்ணவர்மா
முனிவர்சித்த ராதி வானோர்
தெரிவரிய பூரணமாய்க் காரணம்கற்
பனைகடந்த செல்வ மாகிக்
கருதரிய மலரின்மணம் எள்ளில்எண்ணெய்
உடல்உயிர்போற் கலந்தெந் நாளுந்
துரியநடு வூடிருந்த பெரியபொருள்
யாததனைத் தொழுதல் செய்வாம்[2]

---

1. தா. பா. பொருள் வணக்கம் - 6
2. ஷை ஷை—8

# தாயுமானவர் வாழ்வும் வழியும்

பேராசிரியர் டாக்டர் **பொன். சௌரிராசன்**
*எம்.ஏ., பிஎச்.டி*
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்
திருப்பதி—517 502 (ஆ. மா.)

*விற்பனை உரிமை :*
**பாரி நிலையம்**
184, பிரகாசம் சாலை
சென்னை-600,108

என்னை நன்றாக இறைவன் படைத்தான்;
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே

—திருமூலர் (திருமந்திரம்)



'அருங்கலைக்கோன்' 'ஸ்ரீ சடகோபன் பொன்னடி'
'தமிழ்ப்பேரவைச் செம்மல்'

பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்
எம்.ஏ., (B Sc., L.T., வித்துவான், பிஎச்.டி.)

பிறப்பு : 27-8-1916

## அன்புப் படையல்

புகழெனும் வான வீதியின் கண்ணே
பொருவிலா முயற்சியால் தோன்றி
மகிழ்வருள் குணமாம் குன்றினை யடைந்து
மாண்புறு கிளர்ச்சியால் சிலிர்த்து
பகலவன் ஆகி இலக்கியக் கதிரைப்
பாரெலாம் வியப்புற விரிக்கும்
தகவமை சுப்பு ரெட்டியார்க் கன்பு
ததும்புமிந் நூலுரித் தாமே.

# நூல் முகம்

நீச்சல் ஒரு கலை. தெரிந்து கற்றுக் கொண்டால் கடல், குளம், ஏரி இவற்றில் நீந்துவது, குளிப்பது, மிதப்பது எளிது; இன்பமானது. வாழ்வும் அப்படித்தான். வாழக் கற்றுக் கொள்ளாவிட்டால் குடும்பத்திலும், சமுதாயத்திலும் முக்கிமுட்டி மூச்சுத் திணறிப் போகிறது. இறைநெறி கண்டு, உணர்ந்து, நிற்றல் கலைகளில் எல்லாம் தலையாய வாழ்வுக் கலை. அதனை அறிந்து வாழ்வோர் பிறவிப் பெருங்கடலை எளிதில் நீந்துவர் என்பர் திருவள்ளுவர்.

'மனத்தை உன் கையில் வைத்துக்கொள். மனத்தின் கையில் நீ இருக்கும்வரை துன்பந்தான்' என்று அப்பா (பேராசிரியர் மு. வ), சொல்லிச் சொல்லி வழிகாட்டுவர்.

இவ்வாறு பிறவிப் பெருங்கடலை நீந்த, மனத்தைக் கையகப்படுத்த கற்றுத் தரும் சான்றோர்கள் பலர் நிறைந்தது, நூல்கள் பல கொண்டது இந்த உலகம்; நம் இந்தியா; சிறப்பாக நாம் வாழும் தமிழகம்; பேசும் தமிழ் மொழி.

உலகில், இந்திய நாட்டில், தமிழகத்தில் தோன்றிய வாழ்வியல் சிந்தனைகள் காலப் போக்கில் நெறிப்படுத்தப் பெற்றன; மக்கள் பின்பற்றி வாழப் பின்னர் சமயம்என்னும் பெயரில் வகைப்படுத்தப் பட்டது.

சாலை ஓரங்களில் சின்னஞ்சிறு ஆல், அரசு வகைக் கன்றுகளை நட்டுப் பாதுகாப்போடு அவை வளரஅவற்றைச் சுற்றி முள் வேலி, கல் மதில் வைப்பது போலச் சமயங்கள்; சமுதாயக் குழந்தைகள் முறையோடு, நெறியோடு வளர்ந்து உயரத் துணை செய்கின்றன. தடுமாறும் குழந்தைகட்கு நடைவண்டியால் நெறி பயிற்று விக்கப்பெறுகின்றன.

*இத்தகு சமயச் சிந்தனைகளை வழங்கிய சான்றோர்களில் பக்தி நெறியினர் பலர்; ஞான வழியினர் ஒரு சிலர். ஞானப் பக்திச் சான்றோர் மிகச் சிலர். தமிழைப் பொறுத்த வரையில் அத்தகு மிகச் சில உலகச் சான்றோருள் நம்மாழ்வாரும், மணிவாசகப் பெருமானும், தாயுமான அடிகளாரும் குறிப்பிடத்தக்க மூவர். 'நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே'' என ஞான, பக்தி வழிபாட்டை எளிய கண்ணிகளில் வழங்கியவர் தாயுமான அடிகளார்.*

**'பண்ணேன் உனக்கான பூசை ஒரு வடிவிலே**
**பாவித்து இறைஞ்ச ஆங்கே**
**பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி**
**பனிமலர் பறிக்க மனமும் நண்ணேன்'**

*எனக் காண்பனவற்றிலெல்லாம் கடவுட் காட்சியைக் கண்டவர் அவர்.*

**'கைதான் குவிக்க ஏனில் நாணும் என்**
**உளம் நிற்றி நீ'**

*என அகத்தும் அவனைக் கண்டு அநுபவித்தவர். இந்த கடவுள் அநுபவ அநுபூதியில் எண்ணுவன, பேசுவன, செய்வன எல்லாமே மோனமாய், சுத்தமோனமாய்க் கண்டு காட்டியவர் அவர்.*

*அந்த அருட்காட்சியை, அரிய அநுபூதியை அகிலமெலாம் பெற்றுப் பேரின்பம் உற,*

**'ஏக உருவாய்க் கிடக்குதையோ**
**இன்புற் றிடநாம் இனிஎடுத்த**
**தேகம் விழுமுன் புசிப்பதற்குச்**
**சேரவாரும் செகத் தீரே'**

*என்று கூவி அழைத்த மெஞ்ஞானக் குயில் அவர்.*

*இந்தக் குயிலை, தாயுமான அடிகளாரை முதன் முதல் எனக்குக் காட்டிக் கொடுத்த சிறப்பு திருவாரூர் தட்சிணா*

மூர்த்தி மடத்தைச் சாரும்; அவர் பாடல்களை எனக்கு அவ்வப்போது ஊட்டி வளர்த்த பெருமை அப்பா மு. வ. அவர்களுக்கு உரியது.

அந்தக் காட்சியும், இந்த மாட்சியும் என்னுள் கிடந்து படிந்துபோயின. அந்தப் படிவங்கள் சில அவ்வப்போது கட்டுரைகளாகப் புறத்தே எழுத்துரு பெற்றன. அவையே இந்த நூல்.

என் வாழ்வில் இதுவரை மூன்று திருப்பு முனைகள் அமைந்துள்ளன, முதலில் அமைந்தது சிதம்பரம் கீழ மூங்கிலடி காந்திக் குடில். அங்கே அமைந்த திருப்பம் அகவயமானது. அதற்கு உரியர் பலர். அவர்களுள் ம. ரா. பாலகணபதி குறிக்கத்தக்கவர். அடுத்தது சென்னை பச்சையப்பன் கல்லூரியிலும் பேராசிரியர் மு. வ. இல்லத்திலும் இந்தத் திருப்பம் அகப் புற வயத்தது. மூன்றாவது திருப்பம் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தது. இந்தத் திருப்பு முனைக்கு முழுக்க முழுக்கக் காரணமானர் அண்ணன், பேராசிரியர், டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் ஆவர். அவர் திருவடித் தாமரைகட்கு இந்த நூலைக் காணிக்கை ஆக்கும் பேறு பெற்றமைக்கு இறைவனை வாழ்த்தி வணங்குவன்.

இந்த நூல் வெளி வருவதற்கு நிதி உதவிய திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு என் நன்றி உரியது.

தேனகத் தார்க்கும் நன்றி; பாரிக்கு என்றும் உரியன்.

**பொன் சௌரிராசன்**

# 1. தாயுமானவர் வாழ்வு

*என்றும் இருக்க உளங்கொண்டாய்*
*இன்பத் தமிழுக் கிலக்கியமாய்*
*இன்றும் இருத்தல் செய்கின்றாய்!*
*இறவாய் தமிழோ டிருப்பாய்நீ!*
*ஒன்று பொருளஃ தின்பமென*
*உணர்ந்தாய் தாயு மானவனே!*
*நின்ற பரத்து மாத்திரமோ*
*நில்லா இகத்தும் நிற்பாய்நீ!*

*(பாரதியார்)*

**வேதா**ந்தம் கற்று, சித்தாந்தம் தெளிந்து வேதாந்த சித்தாந்த [1]சமரச சன்மார்க்க நெறிகண்டு சைவசமய பெருமைப்பாட்டையும் சிவாத்துவித ஒருமைப்பாட்டையும் உணர்த்திய சான்றோர் தாயுமான அடிகளார் ஆவர். சைவ சமயத்தவரே ஆயினும் பிற சமயங்கள் எல்லாம் இறைவனாகிய சமுத்திரத்தில் வந்து சேரும் நதிகளே[2] என்று துணிந்து உலகர் அனைவரையும் பேரின்பப் பெருக்கில் நீராட 'சேரவாரும் செகத்தீரே'[3] என்று அழைத்த 'எல்லோரும் இன்புற்றிருக்க'[4] நினைத்த பேருள்ளம் அடிகளாரது திருவுள்ளம். வடமொழி, தமிழ்மொழிப் புலமைகளோடு கவிபுனையும் திறனும் ஒருங்கே வாய்ப் பெற்றவர் அவர்.

---

1. தாயுமான சுவாமிகள் பாடல், தருமையாதீனப் பதிப்பு-தா. பா. 8.
2. தா. பா. 8, 11, 29, 39,
3. ஷை 553, 554, 555
4. ஷை 856.

தேவாரத் திருவாசகங்களை ஓதி உணர்ந்ததோடு [6] அருணகிரியார், [7]பட்டினத்தார். [8]பத்ரகிரியார் பாடல்களிலும் உளம் தோய்ந்தவர் அவர். இத்தகு தோத்திரப் பாக்களே அன்றிச் [9]சிவாஞான போதம் [10]சிவஞான சித்தியார், [11]சிவப்பிரகாசம் முதலிய பதினான்கு சைவ சமயச் சாத்திரங்களிலும் துறை போகியவர். கர்ம, பக்தி, யோக, ஞான மார்க்கங்களின் நெளிவு சுழிவுகளை எல்லாம் அனுபவித்துக் கண்டு அவை தளிர், பூ, காய், கனியாகும் என அகிலத்தார்க்கு உணர்த்திய பெரியார் அவர்.

இவ்வாறு சமய, தத்துவ வாழ்வில் நின்ற அவர்தம் பாடல்களால் தமிழ்மொழிக்குச் செய்துள்ள தொண்டும் எண்ணிப்பார்க்கத்தக்கதாம். வடமொழி தென்மொழிச் சொற்களை எழில்பெற இயைத்தும், வடமொழிச் சொற்களைத் தமிழுக்கேற்ப தற்பவச் சொற்களாக்கியும் வளம் செய்தவர். வெண்பா, ஆசிரியப்பா, விருத்தம் முதலியவற்றோடு [12]கண்ணி, [13]சிந்து, [14]வண்ணம் முதலிய நாட்டுப்புறப் பா வகைகளுக்கு இலக்கிய மேடையில் இடம் தந்து போற்றியவர்.

இச்சான்றோர் வாழ்க்கை வரலாற்றினை அறியத் துணை செய்யும் மூலங்கள் :

---

5. ஷை 102
6. ஷை 1114
7. ஷை 111
8. ஷை 111
9. ஷை 1097
10. ஷை 1098
11. ஷை 1099
12. பராபரக் கண்ணி, பைங்கிளிக் கண்ணி, எந்தாட் கண்ணி, காண்பேனோவென் கண்ணி, ஆனதோவென் கண்ணி இல்லையோவென் கண்ணி
13. ஆனந்தக் களிப்பு,
14. வண்ணம்

1. தாயுமானவர் பாடல்களில் வரும் அகச் சான்றுகள்.
2. தாயுமானவர் மாணவர்களாகிய கோடிக்கரை ஞானியார், அருளையர் ஆகியோர் இயற்றிய பாடல்களும், தாயுமானவர் குறித்துத் தோன்றிய பிறர் பாடல்களும்.
3. 'தாயுமானவர் பாடல்' பதிப்புகளில் காணப் பெறும் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள்,
4. தாயுமானவர் பற்றிய ஆராய்ச்சி, வரலாற்று நூல்கள் தரும் ஆய்வுரைகள்.
5. தருமபுர ஆதீனத்தார் வசம் உள்ள திருச்சி சார மாமுனிவர் மடத்தைச் சார்ந்துள்ள ஓலைச் சுவடியும் செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 12 பரல் 2 1933 ஆம் ஆண்டு செப்டம்பர் அக்டோபர் மாத ஆராய்ச்சிப் பகுதியுள் வந்துள்ள அதன் படியும்.
6. நாயக்கர் வரலாறு— பரந்தாமனார் அ. கி. ஆகிய இவற்றின் வழி தாயுமானவர் வாழ்வை நன்கு அறிய இயல்கிறது

பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் [15]திருமறைக் காட்டில் வாழ்ந்து வந்த வேளாள மரபினராகிய கேடிலியப்பப் பிள்ளைக்கும் கெஜவல்லியம்மைக்கும் திரிசிர புரம் தாயுமானேசுவரர் திருவருளால் தோன்றிய சான்றோரே தாயுமான சுவாமிகள் ஆவர். [16]தாயுமான வரின் அண்ணனாரும் கேடிலியப்பப் பிள்ளையின் முதல் மகனாரும் ஆகிய சிவசிதம்பரம் பிள்ளையைக் கேடிலியப்பப் பிள்ளை தம் தமையனாருக்குத் தத்தாக அளித்து விட்டமை யால் தாயுமானவரைக் கண்ணுங் கருத்துமாய்க் காத்துக் கல்வி அளித்தார்.

[17]தந்தையார் திருச்சி நாயக்கர் சமஸ்தானத்தில் பணி செய்தமையால் தாயுமானவர் வடமொழி தென்மொழி

15, 16, 17—பாடல் பதிப்புகள் தரும் வரலாறு

ஆகிய இருமொழியிலும் பயிலும் வாய்ப்புப் பெற்றார் எனக் கருதலாம். முதலாம் இராஜராஜன் காலத்தே தோற்று விக்கப் பெற்றுத் தொடர்ந்து வளர்த்து வந்த தேவார வேத பாடசாலைகளில் இவர் பயின்றிருக்கக் கூடும் என்பதை. [18]'வேத பாராயணப் பனுவல் மூவர் செய் பனு வலது பகரவோ இசையுமில்லை' என்று அவர் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. வடமொழிக் கல்வியும் வேத பாரா யணமும் வாய்த்த போதே வேந்தாந்தமும் பயின்றிருக்க வேண்டும்.

இவரது சைவ சாத்திரக் கல்வி, மௌன குருவை இவர் கண்ட காலந்தொட்டு முறையாக வளர்ந்திருக்க வேண்டும். [19]மௌன குருவின் கையில் விரித்தபடி இருந்த சிவஞான சித்தியாரின் எட்டாவது சூத்திரம் பற்றி அறிய எழுந்த இவரது வேட்கையிலிருந்து இதனை ஒருவாறு உணரலாம்.

அருணகிரியார், பட்டினத்தார், பத்ரகிரியார் ஆகியோர் பாடல்களை இவர் நன்கு பயின்றவர் என்பது ஆங்காங்கே இவர் பாடல்களில் காணப்பெறும் பாடல் தொடர் களாலும், கருத்தாலும், பற்பல இடங்களில் இவரே சுட்டிக் குறிப்பதாலும் உணரலாம். [20]'வேதம், ஆகமம், புராணம் இதிகாசம் இவற்றை இவர் கற்றுத் தேர்ந்தமை 'வேதமுடன் ஆகம புராணம் இதிகாச முதல் வேறுள்ள கலைகள் எல்லாம் பெரிதும் அத்துவித துவித மார்க்கத்தையே விரிவாக எடுத்துக் கூறும்' என்ற இவர் கருத்தால் விளங்குகிறது. [21]கருவி நூற்களும், [22]கலைஞான போதமும் பரஞானத் துக்குப் பயன்படா என்றும் [23]சொல்லில் பதர் களைந்து

18. தா.பா. 102
19. ஷை 1098
20. ஷை 91
21. ஷை 821
22. ஷை 822
23. ஷை 931

சொல்லின் முடிவைக் காண வேண்டும் என்றும் இவர் கூறும் கல்வி அனுபவக் கருத்துகள் எண்ணிப் போற்றத் தக்கன.

**தொழில் :** தாயுமான சுவாமிகள் பாடல் பதிப்புகள் பல[24] தந்தை கேடிலியப்பப்பிள்ளை மறைந்த பின் அவர் பார்த்து வந்த "பெரிய சம்பிரதி" (பெருங்கணக்கர்) பணியையே நாயக்கர் சமஸ்தானத்தில் தனயர் தாயுமான வரும் பார்த்து வந்ததாகக் குறிப்பிடுகின்றன.

**மௌன குரு சந்திப்பு:** தந்தை பார்த்து வந்த பெருங் கணக்கர் பதவியைச் சூழ்நிலையின் காரணமாக இவர் மேற் கொண்டிருந்தாலும் அகவாழ்வில் இவர் சமயதத்துவ ஞான வேட்கை உடையவராய்ப் பக்குவப்பட்டு வந்தார். அப்போது ஒருநாள் திருத்துறையூர் சிவராஜயோக சிதம்பர மௌன சுவாமிகள் திரிசிரபுரம் தட்சணாமூர்த்தி சந்நிதியில் நிட்டை கூடியிருந்ததை வழக்கம்போல் தாயுமானே சுவரரை வணங்கச் சென்ற தாயுமானஅடிகள் கண்டார். அவரை விடாது பற்றி அருள வேண்டினார். அவர் கையில் திறந்தபடி இருந்த சிவஞான சித்தியாரின் எட்டாஞ் சூத்திரம் குறித்துக் கேட்டார். அதனை விளக்கிக் கூறிய மௌனகுரு 'இல்லறத் தொழுகிய பின்' ஏற்றுக் கொள்வதாகக் கூறி அனுப்பியருளினார்

அதன் பின்னர் திரிசிரபுரத்தை விடுத்து இராமேசுவரத்தை அடிகளார் அடைந்தனர். இவர் திருச்சியை விடுத்ததற்கு பெண்வலையிலிருந்து விடுபட இவர் பாடிய பாடல்கள் பொதுவாயினவே தனிப்பட்ட ஒரு பெண்ணைத் துறந்ததாக அவர் பாடலில் சான்றில்லை.

---

24. (1) கலியாணசுந்தர முதலியார்: தாயுமானவர் மெய்கண்ட விருத்தியுரை பூவை
(2) ப. இராமநாதபிள்ளை: சித்தாந்தச் சிறப்புரை—
(3) பாலை பாட காசிமட வெளியீடு.
(4) சுப்பிரமணியபிள்ளை: தாயுமானவர் பாடல் ஆராய்ச்சியும் வாழ்க்கையும்

தாயுமானவர் பாடல் பதித்தவர் அனைவரும் கூறும் காரணம் விஜயரகுநாத நாயக்க மன்னனை இழந்த மீனாட்சி என்னும் அரசி இவர் பேரழகு கண்டு காதல் கொண்டதே ஆகும் என்றாலும் ஞானமார்க்க வேட்கையாலும் தத்துவ ஆராய்ச்சியில் இவர் கொண்ட ஈடுபாட்டாலுமே திரிசிரபுரத்தை விட்டு நீங்கினார் என்று எண்ணுதலே பொருத்தமுடையதாகும். ஏனெனில் அரசி மீனாட்சியின் ஆணைக்கு அஞ்சி இவர் திரிசிரபுரத்தை விடுத்திருப்பின் நேரே தாயும் தமையனாரும் வாழும் திருமறைக்காட்டை அடைந்திருப்பர். அவ்வாறு அடையாது அக்காலத்தில் தத்துவ விசாரணையில் ஈடுபாடு கொண்ட இந்தியச் சான்றோர் அனைவரும் தவறாது வந்து கூடும் இராமேசுவரத்தை நாடி அடைந்ததே தாயுமானவரது தத்துவவிசாரணை வேட்கையே திரிசிரபுர வாழ்வை விடுக்கக் காரணமாயிற்று என்று கூறப்போதுமானதாகும்.

திருமறைக்காட்டை அடையாது இராமேசுவரத்தை அடைந்ததற்கு வேறொரு காரணமும் [25]கூறப்பெறுகின்றது. திருச்சி நாயக்கர் ஆட்சி நிகழ்ந்த காலத்தில் அவர் ஆட்சிக்குக் கட்டுப்படாது உரிமை பெற்றிருந்தது இராமநாதபுரமே. எனவே தான் அரசியின் ஆட்சியிலிருந்து தப்ப வேண்டி தாயுமானவர் இராமநாதபுரத்தை அடைந்தார் என்பதே அந்தக் கூற்றாகும். அப்படி ஆயின் ஒருசில திங்களிலேயே அன்னையின் வேண்டுகோளைத் தமையனார் சிவசிதம்பரம் மூலமும் சிற்றன்னை மகனார் அருளையர் மூலமும் அறிந்த தாயுமானவர் இராமநாதபுரத்தை விடுத்துத் திருமறைக் காட்டுக்கு மீண்டுவந்திருக்க வழியில்லை. பல ஆண்டுகட்குப் பிறகு மனைவியை

25. இராமநாதபுரம், ஸ்ரீ தாயுமான சுவாமி சன்மார்க்க சங்கம், உறுப்பினர் திரு. காசிநாத துரை அவர்களிடம் நிகழ்த்திய நேர்முக உரையாடல்.

இழந்த பின் மீண்டும் அங்கேயே சென்றிருக்க வேண்டும். எனவே, தத்துவ ஆராய்ச்சி வேட்கையே தாயுமானவரை இராமேசுவரத்துக்குச் செல்லுமாறு தூண்டியிருக்க வேண்டும். அன்றியும், இவர் வாழ்நாளின் பிற்காலம் பல்லாண்டுகள் இராமேசுவரத்திலும் இராமநாதபுரத்திலும் கழிந்தற்கும் அதுவே காரணமாகும். ஏனெனில் அரசி மீனாட்சியின் [26]ஆட்சிக்காலம் நான்கு ஆண்டுகளே ஆயினமையின், இவர் பட்டும்படாமலும் தொழில் செய்தது மிகக் குறுகிய காலமாகவே இருத்தல் வேண்டும். இவர் பாடல்களில் அதற்கான அகச் சான்றுகள் இல்லை.

**இல்லறம் :** மௌன குருவின் ஆணையும் தாயின் வேண்டுகோளும் இவரை இல்லறம் ஏற்குமாறு செய்தன. தமையனார் சிவசிதம்பரம் பிள்ளையும் சிற்றன்னை மகனார் அருளையரும் வேதாரண்யத்திற்கு அழைத்து வந்த பின் [27]மட்டுவார் குழலி என்பவரை மணந்து கனகசபாபதி என்னும் மகவையும் பெற்றார். ஆயினும், அந்த அம்மை ஓரிரு ஆண்டுகளிலேயே இறந்துபோக இவர் மௌனகுரு வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தார். திரசிரபுரம் தட்சணாமூர்த்தி சந்நிதியில் கூறியதுபோல மௌனகுரு திருமறைக் காட்டிற்கு எழுந்தருளி இவரது அதி தீவிர பக்குவநிலை கண்டு திருவடி தீட்சை அருளினார். அந்நாள் தொட்டுத் துறவியாய்ப் பல புண்ணியத் தலங்களுக்குச் சென்று இறுதியில் மீண்டும் இராமநாதபுரம் அடைந்து ஊருக்குப் புறத்தே அமைந்த காட்டூரணிக் கரையில் புளிய மரப் பொந்திலே நிட்டைகூடி வாழ்ந்து வரலாயினர்.

---

26. மதுரை நாயக்கர் வரலாறு.
27. திரசிரபுரம் தாயுமானேசுவர கோயில்அம்மையின் பெயர் மட்டுவார் குழலி-அடிகள் பெயர்க்கும் மனைவியாய் வாய்த்த அம்மை பெயர்க்கும் இயற்கையில் அமைந்த பொருத்தம் வியப்பிற்குரியது.

பின்னர் இராமநாதபுரத்தை அடுத்த இலட்சுமிபுர பூங்கா ஒன்றிலே சில காலம் தங்கிப் பின் அங்கேயே சமாதி ஆயினர்.

**காலம்:** தாயுமானவர் காலம் இன்னும் முடிவு செய்ய இயலாத ஒன்றாக உள்ளது, விதலை மீனாட்சி அரசியின் காதலை உண்மை நிகழ்ச்சியாகக் கொண்டால் தாயுமான வரின் இளமைக் காலம் கி.பி.1732 ஐசார்ந்திருக்க வேண்டும். ஆனால், அடிகளாரோடு தொடர்புடைய பிற குறிப்புகள் எல்லாம் அவர் காலம் கி.பி. 1662ல் முடிவுற்றதாக கூறும் [28]அருளையர் பாடலை வலியுறுத்துவதாகவே உள்ளன.

தாயுமானவர் பாடல்களில் பலவற்றில் மௌன குருவை அவர் சந்தித்ததாகக் குறிப்புகள் பல உள்ளன. மௌன குரு திருச்சி சாரமா முனிவர் மடத்தின் தலைவராக இருந்த காலம் [29](சாலியவாகன சகாப்தம் 1501-1566; AD1579-1644) ஆக 65 ஆண்டுகள். அடிகள் மௌன குருவை [30]இருமுறையேனும் சந்தித்திருக்க வேண்டும். முதன் முறை சந்தித்த காலம் தந்தையிழந்த தனயராய் நாயக்கர் ஆட்சியில் தொழில் புரிந்த காலமாதலால் இவரது வயது ஏறக்குறைய இருபதாகக் கொள்ளலாம். ஓரிரு ஆண்டுகளில் இவர் மணம் புரிந்து கொள்கிறார். ஆகையால் ஏறக்குறைய இருபதாகக் ஊகித்தது சரியாகவே இருக்கக்கூடும். மௌன குரு மடத்தின் அதே ஏடு அவருக்கு அடுத்து பட்டத்துக்கு உரியவராகத் தாயுமானத் தம்பிரானைக் குறிப்பிடுகிறது. அவரது மடத்துத் தலைமைப் பதவிக்காலம்

---

28. துகளறுசாரி......
29. 'தருமபுர அதீனத்தார் படம் உள்ள திரசிரபுர மௌன சுவாமி மடத்து ஏடுகள்
    (2) செந்தமிழ்ச் செல்வி-சிலம்பு 12 பரல் 2 பக். 82.
30. திருமணத்துக்கு முன் பின்

சாலியவாகன சகாப்தம். 1566-1584 சோபகிருத வருடம் AD 1644 - 1662. இந்தக் குறிப்பில் இறுதியாகக் குறிக்கப் பெற்ற 1584-ஆம் ஆண்டும் தாயுமானவர் சமாதி அடைந்ததாக அருளையர் பாடல் குறிப்பிடும் ஆண்டும் ஒன்றாகவே இருப்பது எண்ணத் தக்கதாகும். இலட்சுமீபுர தாயுமானவர் சமாதிக் கருகில் உள்ள கல்வெட்டும் இதனை வலியுறுத்துகின்றது. எனவே, தாயுமானவர் இறையொடு கலந்த காலம் கி.பி. 1662(அதாவது சாலியவாகன சகாப்தம் 1584). அவர் மௌன சுவாமிக்குப் பின் மௌன மடத்தலைவராக இருந்த காலம் 18 ஆண்டுகள் (சாலி வாகன சகாப்தம். (1566-1584). தலைவர் பதவியில் இருந்தாலும் தாயுமானவர் இராமநாதபுரத்திலேயே நிட்டை கூடியிருந்தார் என்பதை மறக்கக் கூடாது. அவ்வாறே மௌனத் தம்பிரான் தாம் பட்டம் வகித்த 65 ஆண்டுகளில் பலநாள் புறத்தே போந்து பணி செய் திருந்தார்.

தாயுமானவர் மௌன குருவைச் சந்தித்த ஆண்டு அறிவதற்கு இயலாததாக உள்ளது. எனவே, அவர் பிறந்த நாளினைத் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை. ஆயின் இப்போது கிடைத்துள்ள ஆதாரங்களைக் கொண்டு தாயுமானவர் காலம் பதினேழாம் நூற்றாண்டின் இடைக்காலம் என ஒருவாறு வரையறுக்கலாம். இந்தக் காலக் கோட்பாடு [31]கலைக்களஞ்சியம் குறிப்பிடும் (1705-1742) காலத்திலிருந்தும் மீனாட்சியம்மை காதலைக் கருதும் வரலாற்று ஆசிரியர் கணிப்பிலிருந்தும் மாறுபடுகிறது.

31. கலைக்களஞ்சியம் தொகுதி. 5. பக்கம் 581.

# 2. கல்வி நலன்

''தென்சொற் கடந்தான் வடசொற்கு எல்லை தேர்ந்தான்'' என்ற கம்பன் கூற்று நம் அடிகளார்க்கும் மிகப்பொருத்தமாகவே தோன்றுகின்றது. தன் தாய்மொழியான தமிழில் தலைசிறந்த இலக்கிய, இலக்கண நூல்களையும் நன்கு கற்றுணர்ந்த தெளிவும், சமஸ்கிருதத்தில் உள்ள வேத—வேதாந்தங்களைப் பயின்று பெற்ற அறிவும் இவர் பாடல்களில் குமிழியிட்டுச் செல்கின்றன. அடிகளாரின் வடமொழிப் புலமைத் திறத்தை நன்கு உணர்ந்த அவர் மாணவர் அருளையர் என்பார், ''வடமொழி இயற்கையின் மகிமையை உணர்ந்து'' (அருள் வாக்கியர் அகவல். வரிகள் 145—148) எனப் பாராட்டுகின்றார். ''வல்லதமிழ் அறிஞர் வரின் அங்ஙனே வடமொழியின் வசனங்கள் சிறிது புகல்வேன்'' என்ற அடிகளார் பாடல் தொடரிலிருந்தும் அவர்தம் வடமொழிப் புலமை நன்கு தெளிவாகும்.

சமணர்களால் தோற்றுவிக்கப் பெற்று வைணவ உரையாசிரியர்களால் வளர்க்கப் பெற்று அருணகிரியாரால் போற்றப் பெற்ற 'மணிப்பிரவாள' நடை அடிகளார் பாடல்கள் சிலவற்றுள் 'பாலும் பழமும் போல்' இனிமையாய் இயல்பாய்க் கலந்து அமைந்துள்ளமை காணற்பாலது. எடுத்துக் காட்டாக ஒன்று:

''நித்தியமாய், நின்மலமாய், நிட்களமாய், நிராமயமாய்
நிறைவாய், நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிறை
சுடராய் எல்லாம்
வைத்திருந்த தாரகமாய் ஆனந்த மயமாகி
மனவாக் கெட்டாச்

சித்துருவாய் நின்றஒன்றைச் சுகாரம்பப் பெருவெளியைச்
சிந்தை செய்வாம்''

இவர் பாடல்களில் சில வேதத்தை மட்டும் குறிப்பிடு கின்றன; வேறுசில வேதாந்தத்தைச் சொல்லிச் செல் கின்றன; இன்னுஞ் சில'வேத வேதாந்தம்'என இணைத்துப் பேசுகின்றன; பின்னுஞ் சில 'வேதத்தையும் சைவாகமத்தை யும்' இயைத்து மொழிகின்றன.

''இருக்காதி வேதமெல்லாம்'' (H.49);
''வேத மொழி'' (H 33);
''இருக்காதி வேத முனிவர்'' (H.53);
''மறைவடியிட்ட அமுதப் பிழம்பு'' (H.54);
''சுருதியெல்லாம்'' (H.436);
''வேதத்திலே'' (H.451);
''வேதத் தொனி'' (H.47.);
''ஆரண நூல்'' (H.475);
''வேத முதலாய்'' (H.476);
''நால் வேதம்'' (H.564);
''வடியிட்ட மறை பேசு பச்சிளங்கிள்ளை'' (H.581);
''தெய்வச் சுருதி'' (H.8?4);

ஆகிய தொடர்கள் வேதத்தை மட்டும் சுட்டுகின்றன. பின்வரும் தொடர்கள் வேதாந்தத்தைக் குறிப்பனவாகக் கொள்ளலாம்.

''நூற்றெட்டாதி வேதம்'' (H.136);
''வேதாந்த வீடு'' (H.653);
''வீறிய வேதாந்தம்'' (H.1253);

வேத வேதாந்தத்தையும் வேதாகமத்தையும் பின்வரும் தொடர்கள் ஒன்றாக இணைத்துக் கூறுகின்றன.

"வேத வேதாந்த ஞானம்" (H.5);

"வேதமே வேதாந்தமே" (H.52):

"வேதாகமம் துணிபு" (H 38);

"வேதாகமத்தின் காட்சி" (H 39);

"ஆரண மார்கத்து ஆகமவாசி" (H.272);

"ஆரணம் ஆகமம் எல்லாம்" (H 425);

"ஆரணங்கள் ஆகமங்கள் யாவுமே" (H.470);

"வேத முதலான நல் ஆகமத் தன்மையை" (H.580)

"புகழ் பெற்ற வேதாந்த சித்தாத்தம்"(H.32);

இவ்வாறு வேதப் பொருளையும், வேதாந்தத் தெளிவையும், வேத மார்க்கத்தில் செல்லும் ஆகம இயல்பையும் வேதாந்த சித்தாந்த சாரத்தையும் தம் பாடல்களில் அழுத்தந்திருத்தமாக அவர் எடுத்துச் சொல்லும் போக்கிலிருந்தே அவருடைய வடமொழிப் புலமையை அறியலாம். வடசொற்களை எதிர் எதிராக நிறுத்தி ஒன்றிற்கு ஒன்று உபகாரமான சொற்களை அடுக்கிச் சொல்லுதல், சிலேடையாகச் சில சொற்களை வழங்குதல்,உபநிடதக் கருத்துகளை உரைத்தல் எனப் பல்வேறு கோணங்களில் அவருடைய வடமொழிப் புலமையை ஆயலாம்.

"சுத்த அசுத்த; துக்கசுக; தொந்தநிர்த்தொந்த;
தூலசூக்கும; ஆசைநிராசை: பெத்தம்முத்தி; பாவஅபாவ:
பேதஅபேத; நித்தம் அநித்தம்; அஞ்சன நிரஞ்சன;
நிட்களசகள; நீதி அநீதி; ஆதிஅனாதி; நிர்விடயவிடய;
"அண்டபகிரண்ட" (H 71); "அகிலநிகில" (H.179);
"பங்கன் அபங்கன்" (H.332); "கேவல சகல" (H.336);

ஆகிய இணைகள் ஒன்றுக்கு ஒன்று எதிராக அமைந்து அவர்தம் சொல்லாற்றலை வடமொழிப் புலமையைப் புலப்படுத்துகின்றன.

சொல்லுக்குச் சொல் பொருள் அழகு தோன்ற ஒன்றன் பின் ஒன்றாகச் சில வடசொற்றொடர்களை அவர் அடுக்கி வழங்கியிருக்கிறார்.

''சம்பு சிவ சங்கர'' (H.47)
''சீலமொடு தவவிரத'' (H.75)
என்ற தொடர்கள் பொருள் பொதிந்ததாகும்.

(சம்பு—மங்கலமூலம்; சிவம்—மங்கலம்; சங்கர் மங்களம் படைப்போன். சீலம்— மனநெறி; தவம்—உடல்நெறி)

''அகில நிகில''—(H.179) என்ற தொடரில் உள்ள இரு சொற்களும் (அகில—என்றும் சிதையுறாத; நூல்—பிரிக்க இயலாதது.) கூற வந்த பொருளின் தன்மையை ஒன்றோடு ஒன்று இணைந்து நின்று நிறைவு செய்கின்றன.

முன்பு குறித்ததுபோல உபநிடதக் கருத்துகள் பல, அவர் பாடல்களில் பயின்று வருகின்றன.

''பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி''— (H,52)

(ஒப்பீடுக: கடோபனிஷத்—3:12)

''சச்சிதானந்த சோதி ஓங்கி நிறைந்தது கண்டால்

அங்கு இங்கு என்று சொல்ல முடியுமோ'' (தாயு.1441)

''இங்கு எது உளதோ அதுவே அங்கும்; அது எங்குளதோ அதுவே இங்கும்,'' (கடோப ; 10)

''அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்'' (தாயு.1)

''ஈசாவாச்யம்'' (கடோ. 1:1)

''அவனன்றி ஓரணுவும் அசையாது''—(தாயு.89)

''தேன தியக்தேன''

(கேனோ உபநிடதத்தின்சாரம்—கதைக்குறிப்பு)

"நித்தியமாய், நின்மலமாய், நிட்களமாய், நிராமயமாய், நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய், தூரமுமாய், சமீபமுமாய், துரியநிறை சுடராய் எல்லாம்
வைத்திருந்த தாரகமாய், ஆனந்த மயமாகி மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றஒன்றைச் சுகாரம்பப் பெருவெளியை"
—தாயு.14

அந்த ஆத்மா எங்கும் வியாபித்தவன்...
ஈசா வாஸ்யோபநிஷத்—8

"சித்தம் அறியாதபடி சித்தத்தில் நின்றிலகு
திவ்ய தேசோமயம்" (தாயு. 3)

"எவன் இந்த ஜீவனுக்குள்..." (ஈ.சா. 16)
ஸோஹமஸ்மி (மகாவாக்கியம்)

"பாராதி விண் அனைத்தும் நீயாய்,சிந்தை பரியமடலாய்
எழுதிப் பார்த்துப் பார்த்து (தாயு 155)

"யஸ்து ஸர்வாணி பூதான்-யாத்மன- (ஈசா 6)
[எவன் இருப்புள்ள அனைத்தையும் ஆத்மாவிடம் காண்கின்றானோ]

"பந்தமறும் மெய்ஞ்ஞான மானமோனப்
பண்பொன்றை அருளி,அந்தப் பண்புக்கேதான்
சிந்தை இல்லை; நானென்னும் பான்மை இல்லை;
தேகம் இல்லை; காலம் இல்லை; திக்கும் இல்லை;
தொந்தம் இல்லை; நீக்கம் இல்லை; பிறிதும் இல்லை;
சொல்லும் இல்லை; இராப்பகலாம் தோற்றம் இல்லை;
அந்தம் இல்லை: ஆதிஇல்லை; நடுவும் இல்லை
அகமும் இல்லை; புறமும் இல்லை;
அனைத்தும் இல்லை"
—தாயு 151

மண்டூக்கியோ பநிஷத்— 1, 2, 3, 4, 5, 6, 7

"வந்தென்னுடல்......" (தாயு.149)

"ஐந்துபுலன் ஐம்பூதம் கரணம் ஆதி
அடுத்த குணம் அத்தனையும் அல்லைஅல்லை
இந்தஉடல் அறிவறியாமையும் நீஅல்லை" (தாயு. 149)

[எதற்கும் பிடிபடாத காரணத்தால் ஆத்மாவை
நேதி நேதி என்று அனைத்தையும் சுருதி நீக்கும்.]
மண்டூக்கிய உபநிஷத்—3:26

"சந்ததமும் எனது செயல் நினது செயல்
யான்எனுந் தன்னை நினையின்றி யில்லாத்தன்மையால்
வேறலேன்; வேதாந்த சித்தாந்த சமரச
சுபாவம் இதுவே" (தாயு 9)

மண்டூக்கிய உபநிஷத். காரிகை—3:13

[ஜீவப்பிரமம் ஒற்றுமையே அத்துவிதத்தால் பேசப்
படுகிறது; வேற்றுமை நிந்திக்கப்படுகிறது]

ஆகார புவனம் 20— "பந்தமறும்................." (151)
21—"இல்லை இல்லை........." (155)
22—"தானான தன்மயம்........ (153)

அதுவானால் அதுவாவார் அதுவே சொல்லும்.
மண்டூக்கிய உபநிஷத். காரிகை

"அருளுடைய பரம் என்றோ
அன்றுதானே யான் உளன்" (தாயு. 160)
"என்றுளநீ அன்றுளம் யாம்" (தாயு. 622)
"என்றுநீ அன்று நான்" (தாயு, 83)

[இந்த ஆத்மா எங்கிருந்தும் உண்டாக இல்லை:
இதிலிருந்து எதுவும் உண்டாக இல்லை; இது
பிறப்பற்றது. என்றும் உள்ளது; அழிவற்றது]

கேனோபநிஷத் — 2 : 18

''ஆறனைத்தும் புகுங்கடல் போல் சமய கோடி
அத்தனையும் தொடர்ந்து புகும் ஆதிநட்பே''
—(தாயு 134)

''ஆறு ஒத்து இலங்கு சமயங்கள், ஆறுக்கும் ஆழ்கடலாய்
வீறிப் பரந்த பரமானந்த வெள்ளம் ஒன்று''
(தாயு: 411)

''வேறுபடு சமயம் எல்லாம்
புகுந்து பார்க்கில்
விளங்கு பரம்பொருளே நின்
விளையாட் டல்லால்

மாறுபடு கருத்தில்லை
முடிவில் வான
வாரிதியில் நடுத்திரள்போல்
வயங்கிற் றம்மா'' —(தாயு. 630)

[எங்ஙனம் பெருகியோடும் நதிகள் நாமரூபங்களை இழந்து சமுத்திரத்தில் மறைகின்றனவோ...]

முண்டகோபநிஷத்— 2 : 8

[இந்த நதிகள் எங்ஙனம் சமுத்திரத்தை நோக்கிச் சென்று...... நாம ரூபங்களை இழந்து சமுத்திரம் எனப்படுகின்றனவோ...]

பிரச்னோபநிஷத்— 6 : 5

''வெறு வெளி''— (தாயு. 5)

''ஆகாச ஏவயஸ் யாயத நம
ஆகாச சரீரம் பிரம்ம'' (பிரகதாரண்யம்)

''பெரிய பொருள்'' (தாயு.2)
''மகதோம கீயாந்'' (கைவல்யோபநிஷத்)

'வேதம்'-நாயக்கர் அரண்மனையில் இவர் கற்றிருத்தல் வேண்டும். அப்போதே இல்லத்தில் தம் தந்தையார், தாயார் மரபுவழி தேவாரத், திருவாசகத், தமிழ்த் தெய்வப்பாடல்களை இசையுடன் ஓதி வந்திருத்தல் வேண்டும். இவர் வாழ்வை உணர்த்தும் ஆகார புவனப் பாடல்களில்

...புலைநா யேனைத் தொழும்பு கொளச் சீகாழித் துரையே! தூது சென்றிடவே பொருளை வைத்த நாவலோய் (பா. 161)

தேவர் தொழும் வாதவூர்த் தேவே!
பூ வுலகில் வளர் அருண கிரியே! மற்றைப்
புண்ணியர்காள்! (பா.162)

என்னும் தொடர்களால் தேவார மூவர்பாடல்கள், மணி வாசகப் பெருமானாரது திருவாசகம், மற்றும் அருணகிரி, பட்டினத்தார், பத்திரகிரி முதலான சைவ சமயத் தோத்திரப் பாடல்கள் எல்லாம் இவர் கேட்டுக் கற்று வல்லவராயிருத்தல் வேண்டும் என அறியலாம்

இவர் கல்வி வாழ்வில், சிறப்பாக நிகழ்ந்த நிகழ்ச்சி திருச்சி மலைக்கோட்டை தாயுமானவர் சந்நிதியில் இவர் மௌன குருவைச் சந்தித்து அவர்பால் சிவதீட்சை பெற்றது ஆகும்.

'எந்நாட் கண்ணி-குரு மரபின் வணக்கம்-இரண்டாவது பாடல்....இவர்க்கு மௌன குரு அளித்த வாக்குதீட்சையாகச் சிவஞான சித்தியார் கல்வி வாய்த்த நிலை மிக நுட்பமாகக் குறிப்பிடப் பெறுகிறது.

பதினான்கு சித்தாந்த சாத்திரங்களும் கற்றுணர்ந்த நிலையை அறியலாம்.

சத்திய ஞானக் காட்சியர், பரஞ்சோதியார்முதலியோர் தொடங்கி அனைவர் வழியும் இவர் சித்தாந்த உண்மை உணர்ந்த நிலையைச் சுட்டிக் கூறுகிறார்.

பொய் கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்ட நாதன்.

பாதி விருத்தத்தாலிப் பார்விருத்த மாகவுண்மை சாதித்த... அருணந்தி சிவாசாரியார் கொற்றங்குடி முதலாகிய மறை ஞான தேசிகர் முதலான சாத்திரச் சான்றோர்கள் அனைவர்க்கும் தாம் ஆளான நிலையை எந்நாட் கண்ணி குரு மரபின் வணக்கத்தில் எடுத்துரைப்பர்.

சிவஞான போத எட்டாஞ் சூத்திரம் குருவுமாய் உணர்த்தும் முறைக்கு விளக்கமாக அமைந்த சிவஞான சித்தியார் 'அறியாமை அறிவகற்றி...' என்னும்விருத்தத்தில் முதல் பாதியாகிய,

"அறியாமை அறிவகற்றி அறிவி னுள்ளே
அறிவுதனை அருளினான் அறியாதே அறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குறைந்திருப்பை..."

என் பதில்சிவஞான நிட்டையை மௌன சுவாமிகள் நம் அடிகளாருக்கு உணர்த்தியருளினார். அந்நாள் தொட்டு முறையான சாத்திரக் கல்வியில் தோய்ந்து கற்று உணர்ந்து வரலானார்.

இந்த மூன்று கட்ட கல்வியும் வைத்த போது, சமயத் தெளிவு வேண்டி இராமேசுவரம் சென்று இந்திய தத்துவ ஞானிகள் அனைவரோடும் உரையாடி, வாதிட்டு, உண்மை உணர்தல் போன்ற நிலை இவரது கல்வி வாழ்வில் நாலாவது கட்டமாகக் கருதலாம்.

தாயுமானவர் வாழ்ந்த காலத்தே ஞான மார்க்கம், கர்ம மார்க்கம் ஆகிய தத்துவ சிந்தனைகள் விவாதத்திற்கு

உரியனவாக இருந்தன. தாயுமானவர் இருமார்க்கங்களையும் நன்கு உணர்ந்து இரு மார்க்க வாதிகளுடனும் விவாதம் நிகழ்த்தியுள்ள குறிப்பு அவர் பாடல்

கைவல்ய ஞான நீதி
நல்லோர் உரைக்கிலோ, கன்மம்முக் கியம்என்று
நாட்டுவேன்; கன்மம் ஒருவன்
நாட்டினா லோ,பழைய ஞானம்முக் கியம்என்று
நவிலுவேன்... (பா. 66)

என இடம்பெறும் அடிகளின்வழி அறியலாம்.

'பூதலய மாகின்ற மாயை முதல் என்பார் சிலர்' எனத் தொடங்கும் பாடலில் நிரீச்சுவர சாங்கியம், பாடாண வாதம், சங்கிராந்த வாதம், நிகண்ட வாதம், சத்தப் பிரமவாதம், ஏகான்ம வாதம், சிவசமய வாதம், பாஞ்சராத்திரம், மாயாவாதம், பாற்கரியர்வாதம், ஐக்கிய வாதம் முதலாக அன்று இந்திய நாட்டில் நிலவிய பல வாத விவாத தத்துவ சிந்தனைகளில் அடிகளார் ஈடுபட்டுத் தெளிவு பெற்றமை புலப்படுகிறது.

அந்தத் தெளிவு முதலில் வைதிக சைவத்தின்பாலும், பின்னர் வேதாந்த சித்தாந்த சமரச சன்மார்க்கநெறியிலும் அடிகளாரை ஈர்த்துச் சென்றது.

'ஆரண மார்க்கத்தில் ஆகம வாரி
அற்புத மாய் நடந்தருளும்...'

என்ற அடிகளார் பாடல் வேதவழி நின்ற சைவாகம நெறியை வற்புறுத்தக் காணலாம்.

இதற்கு அடுத்த நிலை வேதாந்த சித்தாந்த சமரச நிலை.

வேதமுடன் ஆகம புராணம் இதி காசமுதல்
வேறுமுள கலைகளெல்லாம்

மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவாய் எடுத்து ரைக்கும் (ப

என வேதாந்த (கேவலாத்துவித) சித்தாந்த (த
மார்க்கங்களை எடுத்துக் காட்டி, அவை இர
வேறல்ல, இயல்பில் ஒன்றே என்பதனை,

சந்ததமும் எனதுசெயல் நினதுசெயல் யான்எனு
தன்மைநினை யன்றி யில்லாத்
தன்மையால் வேறலேன்; வேதாந்த சித்தாந்த
சமரச சுபாவமிதுவே...

என்ற பாடலால் உறுதிசெய்வர்.

இந்த நிலையும் கடந்த மோனநிலையே தாம் 
அநுபவத்தில் கண்ட முடிந்த முடிபாக
தெளிவு செய்வர். 'ஐவகை எனும் பூதம்...!' என்
'சின்மயானந்த குரு'...பதிகத்தில் இந்த உண
விளங்கும்... 'சமயம் கடந்த மோன சமரசம்!' அதில் 
பெறுகிறது,

இவ்வாறு வேதம் பயின்று சைவ தோத்தி சாத்
களில் தோய்ந்து, வேதாகமத்தில் ஈடுபட்டு, வேத
சித்தாந்தசமரசம் கண்டு சமயங்கடந்த மோனசமரசத்
தெளிந்து முடிந்த முடிபாம் மெய்ப் பொருள் உண்மை
உணர்ந்து உணர்த்தும் அளவு இவர் கல்வி வ
ஆழ்ந்ததாய், அகன்றதாய், வாழ்நாள்வரை அமைந்த
இருந்தமை காணலாம்.

# 3. ஆகார புவனம் அல்லது ஆன்மிக வாழ்வு

இதுவரைகண்டது தாயுமானவர் இம்மண்ணுலகில் தோன்றி மறைந்த பருவாழ்வு பற்றியது ஆகும். இதற்கு இதனைக் காண நாம் பெரிதும் புறச் சான்றுகளில் ஆழ்ந்து விட்டோம். ஆனால் அவரது அருள்வாழ்வு ஆன்மிக வாழ்வு குறித்து அவரே கூறும் சில கருத்துகளை இனிக் காண்போம்.

'பாரதி அறுபத்தாறு' போலத் தாயுமானவர் முப்பத்து மூன்று எனச் சொல்லுமாறு நம் ஆன்மிக வாழ்வை, அகப் போராட்டத்தை, தெய்விக ஏக்கத்தை இறையருள் வாய்ப்பை ஆகாரபுவனம் எனும் முப்பத்து மூன்று பாடல் களில் அடிகளார் தந்துள்ளார். அங்கே அவருடைய ஊர் பற்றியோ பேர் பற்றியோ, உறவு பற்றியோ, பகை பற்றியோ, பெற்றோர் பற்றியோ, உற்றார் பற்றியோ, குறிப்பொன்றும் இல்லை. அடிகளாரது உண்மையான இறைவாழ்வின் துவக்கமும், தவிப்பும், அருளும், வெற்றியும் அங்கு அழகாக உள்ளத்தை உருக்கும் செந்தமிழ்க் கவிதை வடிவில் பெய்து வைக்கப் பெற்றுள்ளன.

அந்தப் பகுதியில் இறையியல்பு, இறைவன் அருளுக்கு உரியார் இயல்பு, வைதிக சமயத்தின் மேன்மை, பதி பசு பாச நிலைகள், குருவருள் வாய்ப்பு, குரு உபதேசம், மோனச் சிறப்பு, இறையருள் வேட்கை, வாழ்த்து என்று

இவ்வாறு அமைந்துள்ளது. இவற்றுள் பதி பசு பாச நிலை என்ற பகுதி துவங்கி தொடர்ந்து வரும் பகுதிகளில் இவரது ஆன்ம வாழ்க்கை விளக்கம் தெளிவாகிறது. அப்பகுதிக்கு முன்னர் உள்ள பன்னிரண்டு பாடல்களுள் ஏழு பாடல்களில் இறையியல்பையும் மிகுந்த ஐந்து பாடல்களில் சைவ சமய சிறப்பினையும் எடுத்துரைக்கின்றார்.

இங்கு அடிகளார் வாழ்க்கையையே நாம் பெரிதும் நினைவதால் முதலில் அவர் ஆன்மிகவாழ்வின் துவக்கமாகக் கூறும் பதி பசு பாச நிலைகளிலிருந்து ஆகார புவனக் கருத்துக்களை ஒருவாறு தொகுத்துக் காணலாம். "இறைவா காலம் கடந்து இடம் கடந்து நிறை பரிபூரண அறிவாய் மனோவாக்கு காயங்களால் காண இயலாதவாறு எல்லாச் சக்திகளும் கூடி ஒன்றாகி இன்பமயமாய் நீ உயிர்க்குயிராய் ஓங்கியுள்ளாய். அவ்வாறிருக்க ஆணவம் கன்மம் மாயை ஆகிய மலங்கள் எவ்வாறு மொய்த்துள்ளன? இந்த மலக் கூட்டத்திலிருந்து விடுபட உபகார முயற்சியாக அருள்புரிய சக்தி ஒன்று வந்து பதிந்தது எவ்வாறு? 'நான்' என்னும் மூலமலத்தின் தன்மைதான் என்ன? நான் என்னும் அகந்தை உயிரைப் பற்றியவுடன் உலக மாயை எண்ணற்ற வடிவத்தில் வந்து உயிரைத் தொடர்வதெவ்வாறு? இதனால் தோன்றி வளரும் துன்பப் பெருக்கை அளவிட வல்லவர் யார்? ஊன் என்று, உடல் என்று, கரணங்கள் என்று, அகம் என்று, புறம் என்று, வான் என்று, காற்று என்று, தீ நீர் என்று, மண் என்று, மலை என்று, காடு என்று அலை அலையாய்க் கண்ணில் காண்பனவும் காணாமையுமாகிய பொருள்கள் எத்தனை எத்தனை? இன்னும் மறப்பு நினைப்பு என்று மாயைக் கடலிலிருந்து தோன்றி ஒன்றன்பின் ஒன்றாய்த் தோன்றிவரும் அலைகள் போல இன்ப துன்பம் என்றும், நல்வினை தீவினை என்றும், அவற்றை அழிக்க சமயங்கள் என்றும், தெய்வங்கள் என்றும், சாதகர்கள் என்றும் அவர்க்குச் சான்றாக நெறிபல காட்டும் நூல்கள் என்றும், அவற்றில் தெளிவு பெறுவதற்குரிய தருக்கம் என்றும்,

அப்பப்பா! எண்ணிக் காண்பதற்கரிய கடல் மணல் போல எத்தனை எத்தனை காட்சிகள்! எத்தனை எத்தனை குழப்பங்கள்.

இந்த அல்லலெல்லாம் கட்டோடு அழிய கர்ப்பூர மலை தீ பற்றி அடியோடு அழிந்தாற்போல எனக்கு விவேக ஞானம் முண்டாக்க இறைவன் அருள்கோட்டி 'மான்காட்டி' மானை இழுக்கும்மாண்பென ஊன் உறக்கமில்லான ஊணுறக்கமோடு, இன்பதுன்பமில்லான் இன்பதுன்பத்தோடு பேருரில்லான் பெயரொடு ஊரொடு எனைப் போல மானிட உருக்கொண்டுமௌன குருவாய் வந்தான். வந்து என் உடல் பொருள் ஆவி எல்லாம் தன் வயமாக்கிக் கொண்டு மந்திரம் பதம்முதலிய ஆறு அத்துவா நெறியைக் காட்டி நீ ஐந்து புலனல்லை; ஐந்து பூதமல்லை; மனம் புத்தி சித்தம் முதலான கரணங்களல்லை; இந்த உடலல்லை; இந்த உடலால் அறியும் அறிவு அறியாமையும் அல்லை; நீயல்லை; பதியைப் பற்றின் பதி இயல்பாய், பாசத்தைப் பற்றின் பாச இயல்பாய் இருந்து எந்தத் தொடர்புமற்ற பளிங்கனைய சித்து நீ. உன் பரிபக்குவ நிலை கண்டு உன்னை உனக்கு உணர்த்தும் இயல்புடையோம் யாம்.

அறிவாகி இன்பமயமாய் என்றும் அழியாததாய் அனைத்திலும் கலந்து குளிர்ந்த அருளையே தன் குடிலாகக் கொண்டு விளங்குகின்ற பெரிய பரம் பொருளே, நீ பெற வேண்டியது பதியாகும். அதனைப் பெறுவதற்குரிய நெறி களைக் கூறுகிறேன் கேள். முதலில் என்றும் உன் உள்ளத்தில் நிர்க்குணம் வாய்க்குமாக. நிறைந்து நெருக்கும் அறியாமை எல்லாம் நீங்கி உண்மை ஞானத்தை உறுவாயாக. அதனால் பற்றற்று நிற்பாயாக என்று கூறிப் பற்றினை அறுக்கும் மெய்ஞ்ஞானமான மோனப் பண்பொன்றினை அருளினான்.

அந்த மோனப் பண்பில் நிற்கும் போது சிந்தையில்லை. நானென்னும் உணர்வு இல்லை. உடலில்லை. காலநியதி

இல்லை. திக்குகளில்லை. தொடர்போ பிரிவோ இல்லை. சொல்லில்லை. இரவு பகல் காட்சிகள் இல்லை. துவக்க மில்லை. இறுதி இல்லை. நடுவுமில்லை. அகம் புறம் அனைத்துமில்லை. இப்படி எதுவும் இல்லாத மோன நிலையில் இல்லாதது எதுவும் இல்லை. இயல்பானது அது. என்றுமுள்ளது அது. சொலற்கரியது அது. யான் தான் என்னும் அகங்கார மமகாரமாகிய செருக்கொன்றும் தோன்றாது அனைத்தையும் விழுங்கும் இயல்பற்றது அது. இருளை உண்ட பகல்போல அஞ்ஞானத்தை அடியோடு உண்டு உன் அறிவையும் உண்டு உன்னைத் தானாகக் கொண்டு மறையாக நின்று போசனமயை விளக்க வல்லது அது. தானான தன்மயமே அல்லாது எதனையும் தலை எடுக்க வொட்டாது. தலையெடுக்கும் அவித்தைகளெல் லாம் கர்ப்பூரச் சுடர் போலத் தோன்றி மறைவதல்லாக் இருக்குமிடமன்றாம். காணப்படுபொருள் காட்சி அற்று காண்பானும் நழுவிப் போவான். அடடா இந்த மோனத் தின் பெருமையினை எவர்க்குச் சொல்ல முடியும்? யாரால் சொல்ல முடியும்? அந்த மோன நிலை அடைந்தார் அதுவே யாவார். அந்த மோனம் என்றால் எந்த மோனம் என்று எழும். அதனால் அந்த என்ற சுட்டும் அறவேயற்று மதுவுண்ட வண்டினைப் போல நிற்விகற்பத்தால் உயர் பேரின்ப நிலை கண்டு கொள்ள அருள்வாயாக. இந்நிலை அடையும்வரை உறங்கேன். மேலொன்றும் செய்யேன்.

மண்முதல் விண்வரை நிறைந்துள்ள அனைத்தும் நீயாகவே கருதி என் நெஞ்சமாகிய ஏட்டில் நின்னை எழுதி எழுதிபார்த்து என்னுயிர்த் தலைவனே! வந்து அருளாயோ? என்னை ஈர்த்து ஈர்த்து நீயாக வைத்துக் கொண்டு வேறொன்றும் அறியாது கண்ணீர் ததும்பி பெரு மூச்செறிந்து என்னை மறந்து நிற்பேன். உன்னைக் கண்டறிந்து பிறியாதவாறு நின்னோடு இணைந்து இன்புற்று அடியார் திருக்கூட்டம் ஐயோ!? என்று வருந்த கொலைநெறி ஒழுகும் கொடிய சமயத்திடை குழம்பிய

என் நெஞ்சு செல்லும். பின்னர் தெளிவு பெற்று அதனை அமைதி படுத்தும். உயிர் தரித்திருக்கும் பொருட்டுக் காயிலை சருகுதின்று காடு கடல் மலை எங்கே உள்ளன என்று கவலை கொண்டேன். வாயற்ற குடத்தைப் போலக் கடந்து உருளுவேன்.

நிலவையும் கதிரையும் விளித்து இரவு பகல் தவறாமல் நாள் தோறும் வருமாறு உங்களை இவ்வாறு நிலை பெறுத்தி வைத்தவர்தாம் யாவர்? அவர் பெருமைதான் என்னே! வீசுகின்ற காற்றே! நீ எவருடைய கட்டளையி னால் இடைவிடாமல் சுழல்கின்றாய் என்று கேட்பேன். வந்து வந்து மழைபொழியும் மேகங்காள்! எம் தலைவன் உங்களைப் போல அருள் மழை பொழிய நான் செய்ய வேண்டுவது என்ன? கொஞ்சம் எண்ணிப் பார்த்து எனக்குச் சொல்லுங்களேன் என்று வினவுவேன். எண்ணுதற்கு இயலாத விண்ணே! நீ எங்கும் கலந்து நிற்கின்றாய். உன் முடிவில் காணப்படும் பொருள் எவ்வாறு இருக்கும். சொல்வாயாக. மண்ணே! நீ வழிந்து ஒழிகின்ற காலத்தில் எப்பொருள் மிஞ்சி நின்று ஒளிரும்? ஆங்குள்ள அறிஞனாகிய ஆதிசேடன் இறுதி பற்றிய உண்மையைச் சொல்ல மாட்டானா? வேதமே! நீ அனைவர்க்கும் உண்மையை உரைக்க வல்லாயல்லவோ! முடிவான பொருளைச் சொல்லுவாயாக. பேச்சற்று பெருமை பெற்று அலைக்கை களை நீட்டி ஒலமிடும் கடலே! கரையின்றி இவ்வுலகத்தைச் சூழ உன்னை வைத்தவர் யார்? காட்டில் வாழும் பச்சைக் கிளிகளே! தாமரையில் தேனுண்ணும் வண்டுக் கூட்டங் களே! அன்னப் பறவைகளே! நீங்களெல்லாம் சிறந்த தூதர்களல்லவா? நீங்கள் இதுவரை என்றேனும் நீக்கமில் நிறைபொருளாகிய தலைவனைக் கண்டு பேசியதுண்டோ? எனக்கு எடுத்துச் சொல்லுங்களே என்று கேட்பேன். கண் முன்னே ஓங்கியுயர்ந்த தன் யானை காணாமற் போக கலங்கிய ஒருவன்குடத்தினுள்ளே கையையிட்டுத் துழாவி அதனைத் தேடுவது போலப் பேதையாகிய யான் நீரினில்

உப்பிட்டுக் கலந்தும், கர்ப்பூரத்தைத் தீயிட்டுச்சுடராக்கியும் சிவபோத அருள்போத ஐக்கியத்தை எண்ணி வருந்தி நிற்பேன். தலைவா! நீ என்றே அன்றே யானுமுளேன் என்றும் என்பால் அவை முதலான மதங்கள் பெருகுவதற்குக் காரணங்கள் வினைக் கட்டுக்களே என்றும் முக்திக்குரிய நூல்கள் சொல்லிச் சென்றுள்ளன. அன்று படைப்புக் காலந்தொடங்கி இந்நாள் வரையில் எடுத்த பிறப்புகள் எத்தனை எத்தனையோ? இந்த உலகில் தோன்றித் தோன்றி அழிந்ததல்லாமல் இன்றுவரை வீட்டுப் பேற்றினை எய்தினேன் அல்லேன். வினையால் எடுக்கப் பட்ட இந்த உடம்பு விடுப்பது எப்போது? இந்தக் கவலை இந்தவினாடியே அறிய இழிந்தோனாகிய என்னைத் தொண்டு கொள்ள சீகாழித்துறையாகிய ஞான சம்பந்தப் பெருமானே! திருநாவலூரானே! அப்பர்பெருமானே! வாதவூர்த்தேவாகிய மணி வாசகப் பெருமானே! திருமூல தேவனே! சிவவாக்கிய செம்மலே! அருணகிரி வள்ளலே! புண்ணியர்காள்! என்றுஓவென்று கதறுவேன். ஓவியம்போல் அசையாது நிற்பேன்.

இவ்வாறு தாயுமானவர்தம் ஆன்மிக வாழ்வின் இயல்பை 'ஆகாரபுவனம்' தெள்ளத் தெளியக் காட்டும் பகுதியாக அமைந்துள்ளது.

# 4. அடிகளாரின் பாடல்கள்-பாவகை

...........ஞானத்
தண்ணுறுதண் டமிழ்மாலை யைந்நூற்றெண்
பத்தேழுந் தாயு மானோன்
எண்ணுறுங்கண் ணிகளெண்ணூற் றறுபத்தைந்
தகவல் வண்ணம் இரண்டும் பாடி......

என்ற தனிப்பாடல்[1] தொடர்கள் தாயுமானவர் பாடல்களைக் கண்ணிகள் என்றும் தமிழ்மாலை என்றும் இரு பெரும்பகுதியாகப் பிரித்துக் கணக்கிடுகின்றது. இறுதியில் அமைந்துள்ள அகவல், வண்ணம் ஆகியன இரண்டு என்றும் 'தமிழ் மாலை' 587 பாடல்கள் என்றும் கண்ணிகள் 865 என்றும் அத்தனிப்பாடல் கணக்கிட்டுக் கூறுகின்றது. அக்கணக்கின் படி தாயுமானவர் பாடிய பாடல்களின் மொத்த எண்ணிக்கை $(587+865+2)=1454$—பாடல்கள் ஆகும்.

ஆனால், சித்தாந்தாரம்-அஷ்டாவதானம் பூவை கலியாண சுந்தரமுதலியார் இயற்றிய மெய்கண்டவிருத்தியுரைப்பதிப்பில்[2] மட்டும் 1451 பாடல்களே காணப்பெறுகின்றன.

பிற பதிப்புகளில் எல்லாம் 1452 பாடல்கள் உள்ளன.

---

1. பூவை கலியாண சுந்தரமுதலியார் பதிப்பு பக்கம் 15+16

2. ,, 57 ஆம் ஆண்டு,

அவற்றில் எல்லாம் 'உடல் பொய்யுறவு' என்ற தலைப்பில் 83 பாடல்கள் அமைந்திருக்க பூவையார் உரை எழுதிய பதிப்பில் மட்டும் 82 பாடல்களே உள்ளன. பிற பதிப்புகளில் 522ஆம் பாடலாகவும் 'உடல் பொய்யுறவு' என்ற பகுதியில் 63ஆம் பாடலாகவும் அமைந்துள்ள

அவனே பரமு மவனே குருவு
மவனே யகில மனைத்து—மவனேதா
மானவரே சொன்னா லவரே குருவெனக்கு
நானவனாய் நிற்பதெந்த நாள்.

என்ற பாடல் பூவையார் பதிப்பில் காணப்பெறவில்லை. எனவே பலபதிப்புகளை ஒப்பிடும்போது தாயுமானவர் பாடல்களின் மொத்த எண்ணிக்கை1452 என்று கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது,

## பாடல் அமைப்பு

முன்பு குறித்த தனிப்பாடல் தாயுமானவர் பாடல்களைத் தமிழ்மாலை கண்ணிகள் என இருபெரும் பிரிவாகப் பிரித்துக் கூறியுள்ளது. வெண்பா, ஆசிரியம், கலி ஆகிய பாக்களின் வகை இனங்களில் அமைந்துள்ள 587-பாடல்களை அது 'தமிழ்மாலை' என்று குறிப்பிடுகின்றது. அதற்குப்பின் அமைந்துள்ள சந்தம், பராபரம், பைங்கிளி முதலிய கண்ணிகள், ஆனந்தக் களிப்பு ஆகியவற்றையெல்லாம் 'கண்ணிகள்' என்றே அத்தனிப்பாடல் குறிப்பிட்டு அவற்றின் எண்ணிக்கை 865—என்று கணக்கிடுகின்றது.

இந்த இரண்டாவது பிரிவில் பதினான்காவது பகுதியாக அமைந்துள்ள 'பாடுகின்ற பனுவல்' என்ற தலைப்பில் அமைந்துள்ள 5-பாடல்களும் ந. இரத்தின நாயகர் பதிப்பிலும் தருமையாதீனப் பதிப்பிலும் (1965), வஞ்சி விருத்தமாகக் குறிக்கப்பெற்றுள்ளன. பிற பதிப்புகளில்

அவை இரண்டடிப் பாடல்களாக வகைப்படுத்தப் பெற்றுள்ளன.

பாடுகின்ற பனுவலோர்க டேடுகின்ற செல்வமே!
நாடுகின்ற ஞானமன்றி, லாடுகின்ற வழகனே!

இவ்வாறு அமைந்துள்ளன. இந்தப் பாட்டுப் போக்கு கண்ணி எனக் கருதப் பெறினும் வஞ்சி விருத்தம் என்ற பிரிவே பொருத்தமானதாகும். ஆனால் தொகுத்தார் அவற்றைக் கண்ணியோடு ஒத்துக் கருதியதாலேயே அவற்றுக்கு இடையே அமைத்தனர் என எண்ண வேண்டியுள்ளது,

அந்தத் தனிப்பாடலிலிருந்து தாயுமானவர் பாடல் களின் அமைப்பு பற்றிய வேறோர் உண்மையையும் நாம் ஊகித்து அறியக் கூடும். யாப்போடு இயைந்தன, கண்ணிகளாய் அமைந்தன என்ற இரு அடிப்படையில் தாயுமானவர் பாடல்கள் தொகுக்கப் பெற்றனவே அன்றித் தாயுமானவர் வாழ்க்கை வரலாற்றோடு ஒட்டி அவை அமைக்கப் பெறவில்லை என்பதே அந்த உண்மை.

அந்த உண்மை தமிழ்மாலை என்றபிரிவை பெற்றுள்ள பாடல் தொகுதித் தலைப்புகள் பற்றி ஆயும்போது மேலும் உறுதியாகிறது. தமிழ்மாலையில் அமைந்துள்ள பாடல் தொகுப்புகள் துவங்கும் அடியாலும்முடிக்கும் அடியாலுமே பெரும்பாலும் தொகுக்கப் பெற்றுள்ள முறையை எண்ணும் போது அந்த உண்மை மேலும் உறுதியாகிறது.

**தலைப்புகள் :**

தாயுமானவர் பாடல்களில் 23 பகுதிகள் முடிப்பாலும், 28 பகுதிகள் எடுப்பாலும் 2-பகுதிகள் பொருளாலும் 3 பகுதி கள் யாப்பாலும் பெயர் பெற்று ஆக 56-பகுதிகள அமைந் துள்ளன. முடிப்பு எடுப்புமுதலியதலைப்புகள் பல பாடலின் பொருளையோ, மையக் கருத்தையே பெரும்பாலும்

குறிக்காது பாடல் தொகுதிக்கு ஒரு பெயரால் அமைந்து செல்கிறது அவ்வளவே. சித்தர் கணம், மலைவளர் காதலி, அகிலாண்ட நாயகி, பெரிய நாயகி (விருத்தம்) ஆகியன இறுதித் தொடர்களே ஆயினும் அவை பாடல் பொருள் முழுதும் தழுவி அமைந்துள்ளன. எந்நாட்கண்ணி 15 உட் பகுதிகளைக் கொண்டமைந்துளது ஒவ்வொரு உட்பகுதித் தலைப்பும் பாடல் கூறும் பொருளை மையமாகக் கொண்டு அமைத்துள்ளது. எனலாம்.

# 5. அடிகளாரின் பாடல்கள்-பாடுபொருள்

Metre means an arrangement of words in rhythmic lines or verses Here metre is used in a broader sense to mean the prosodry. தமிழ் யாப்பு பழமையும் தனித் தன்மையும் உடையது. ஆசிரியம் வஞ்சியில் துவங்கிக் கலப்போக்கிற்கு ஏற்ப வளர்ந்து காலத்தின் தேவைகளை நிறைவேற்றிய சிறப்பும் அதற்கு உண்டு. பா, பாவினம் என்பனவற்றோடு தற்கால நாடோடிக் (Fotk-lore elements) கூறுகளையும் கொண்டு இன்று அது வளர்ந்துள்ளது. இத்தகு தமிழ்ப் பா வகை பலவற்றையும் பயன்படுத்தியுள்ளார் தாயுமாணவர். பழமைக்கும் புதுமைக்கும் பாவகையில் அவர் ஒரு பாலமாக விளங்குகிறார். அப்பர் குறுந்தொகை அருணகிரி அலங்காரம் செல்வாக்கு இவர் பாடலில் விளங்குவது போலவே இவர் பா அமைப்பின் சொல்வாக்கு இராமலிங்க அடிகளார், பாரதியார், பாரதிதாசன் முதலியோர் பாடல்களில் துலங்குவதைக் காணலாம். செறிவு மிக்க பண்டைப் பா, பாவகைகளைக் கையாண்டு வெற்றி பெற்றதோடு நெகிழ்வு மிக்க நாடோடிக் கூறுகளுடைய வண்ணம், சந்தம் கண்ணி, ஆனந்தக் களிப்பு ஆகியவற்றையும் அவர் நன்கு கையாண்டுள்ளார். பண்டிதர்க்கு மட்டுமே அல்லாது பாமரர்க்கும் பாடவேண்டும் என்று எண்ணிப் பாடிய பாவலர்க்கு அவர் முன்னோடி என்று கூறுவது தவறுடையதாகாது.

அவர் பாடிய பாடல்களின் எண்ணிக்கை. 1452. அவற்றுள் அகவல் 1, அறுசீர் ஆசிரிய விருத்தம் 89, எழுசீர் ஆசிரிய விருத்தம் 22, எண்சீர் ஆசிரியவிருத்தம் :8 பன்னிரு சீர் ஆசிரியவிருத்தம் 118.' வஞ்சி விருத்தம்5, நேரிசை வெண்பா 83, குறள்வெண் செந்துறை 51, கொச்சகக் கலி 21, கலித்துறை 42, கலி விருத்தம் 80, கட்டளைக் கலிப்பா 3. கட்டளைக் கலித்துறை 60, வண்ணம் 1, சந்தம் 11, கண்ணிகள் 777, ஆனந்தக் களிப்பு 30.[1]

**அகவல்** ;- எண்ணங்களும் உணர்ச்சிகளும் சிறிது கூட முனைமழுங்காமல் இதன்மூலம் வெளியிட இயலும். எனவேதான் தாயுமானவர் தம் சமயவாழ்வில் கண்ட அநுபவத்தின் சாரத்தை எல்லாம் வடித்து எடுத்துத் தொகுத்து எளிய இனிய வடிவில் சொல்வதற்காக இந்தப் பாவகையைக் கையாண்டுள்ளார்.

**ஆசிரிய விருத்தம் :** நான்கு அடிகளும் அடியெதுகையும் இதன் பொது இயல்பாகும். ஆசிரிய விருத்தங்களுள் அறுசீர் விருத்தமே மிகக் குறுகியது. இதனைத் தம் தத்துவ அனுபவங்களை வெளியிடவும் விவாதிக்கவும் தாயுமானவர் கையாள்கின்றார். எழுசீர் ஆசிரிய விருத்தங்கள் பலவற்றில் தத்துவ உண்மைகளை உரைக்கின்றார். எண்சீர் விருத்தங் களில் இவர் சொந்த வாழ்க்கை வரலாற்றுக் கூறுகளும் அநுபவ உணர்வுகளும் மிகுந்து வருகின்றன. எண்சீர் விருத்தத்தில் அமைந்த ஆகார புவனம் இவர் வாழ்வின் முக்கிய நிகழ்ச்சிகளைக் கூறுகின்றது. 'சிவகாமி சரிதையில்[2] பயிலும் ஒலிநயம் 'நினைவொன்று' என்ற தலைப்பின் கீழ்வரும் இவர் பாடல்களின் ஒலிநயத்தை நினைவூட்டு கின்றது. பன்னிரு சீர் ஆசிரிய விருத்தங்களே இவர் பெரிதும்

1. பின்னிணைப்பு காண்க.
2. மனோன்மணீயம்.

பயன்படுத்தியிருக்கின்றார். 'பதிகம்'[1] என்றும் கூறுமாறு பத்து, பதினொன்று, பன்னிரண்டு பாடல்கள் கொண்டன வாக இந்த வகையில் பெரும்பாலும் தாயுமானவர் பாடுகின்றார். இவற்றின் மூலம் பதி, பசு, பாச இயல்பு களையும் தம் குருவருள் அனுபவங்களையும் வெளியிடு கின்றார். "மலைவளர் காதலி' என்ற தலைப்பில் அமைந்த இவருடைய பன்னிருசீர் பாடல்கள் இவர் பாடல்களிலேயே மிக்க கவிதை அழகு உடையவனவாகும். வஞ்சி விருத்தம் ஐந்தும் இறை இயல்பையும் அநுபவத்தையும் கூறுவன.

**வெண்பா;** தமிழ்ப்பாடல்களில் செறிவு உடையது. இலக்கண வரையறை உடையது. அதில் ஒன்று நேரிசை வெண்பா. இதில் அமைந்த எண் 83 பாடல்களும் தன்னொடு, நெஞ்சொடு, இறைவனொடு பேசுவனபோல் அமைந்தன வாகும். செப்பல் ஓசைக்கு ஏற்றவாறு செப்புதலையே பொருளாக உடையன இப்பாடல்கள். குறள்வெண் செந்துறை குறள்வெண்பாவின் இனம் ஆகும். ஒரே எண்சீர் (Foot)களைக் கொண்டு பெரும்பாலும் ஈரடிகளால் அமைந்த இப்பாடல்கள் பொழிப்பு மோனை உடையன வாய் அமைந்துள்ளன. தாயுமானவர் வாழ்க்கை நிகழ்ச்சி களைக் குறிப்பனபோல் அமைந்து செல்லுகின்றன.

**கொச்சகக் கலி:** நான்குசீர் அடி நான்கு கொண்டு வெண்பா அடி அல்லது ஆசிரிய அடி பெற்று வரும் இயல்புடையது இது. இறைவழிபாடாக இவை இடம் பெறுகின்றன.

கட்டளைக் கலிப்பா என்பது எண்சீரடி நான்கு கொண்டது. ஒவ்வொரு அடியும் 23 அல்லது 24 உயிர் எழுத்துகள் கொண்டது. இப்பாடல்களும் வேண்டுகோள் போக்கிலேயே பெரிதும் அமைந்துள்ளன. ஐஞ்சீரடி நான்கு

3. "இனிப் பத்தும் பதினொன்றும், பன்னிரண்டும் ஆகி ஒரு பொருள்மேல் வரும் பதிகப்பாட்டு' தொல். பொருள் செய்யுளியல 148 நச் உரை.

கொண்டது கலித்துறை ஆகும். பதி, பசு, பாச இயல்பு களை இவற்றின் மூலம் தாயுமானவர் வெளியிடுகின்றார். கலிவிருத்தம் அப்பர் குறுந்தொகைப் போக்கில் அமைந்துள்ளது.[3] உணர்வு வேகமும் துடிப்பும் உடையன இந்தப் பாடல்கள். கம்பர் இப்பாவகையைப் பெரிதும் உருக்கமான இடங்களில் பயன்படுத்துகின்றார்.[4] நெடிலடி நான்கு கொண்டு அடிக்கு பதினாறு அல்லது பதினேழு உயிர் எழுத்துகள் உடைய இப்பா மூலம் தம் அநுபவத்தில் கண்ட பதி பசு பாச இயல்புகளைக் கூறுகின்றனர்.

**வண்ணம்**, சந்தம், இரண்டும் ஒரு பொருளுடையனவே. ஆயினும் இவை வெவ்வேறு பாடல்வகைப் பெயரோடு வழங்குகின்றன. வண்ணம் ஒலி இனிமை மிக்கன. குறில் நெடில் ஆகிய மாத்திரை அளவுபற்றியும் மெய்யெழுத்து களுள் வல், மெல், இடை ஆகிய இனம் பற்றியும் வெவ்வேறு ஓசை நயத்தோடு அமைவது. 'பாஅ வண்ணம்' முதலாக முடுகு வண்ணம் ஈறாக இருபது வண்ணங்கள் உள்ளன என்பர் முன்னோர். தற்காலத்தவர் இதனை நூறு வகையாக்கிக் காட்டுவர். ஓரடியின் ஒருசீரின் ஓரசை என்ன எழுத்து வருகிறதோ, அப்படியே, அடுத்த அடியின் அதே சீரின் அந்த அசை அந்த எழுத்தாகவே வருதல் வேண்டும்.

தனதந் தனன தந்த தனதந் தனனதந்த
தனதந் தனனதந்த—தன தனதான
தான தனதன தான தனனா...

என்ற ஒலி அமைப்பு உடையது இந்த வண்ணம். ஒரே ஒரு பாடலே தாயுமானவர் வண்ணத்தில் பாடியுள்ளார். சந்தவிருத்தம்[5]

---

3. குறுந்தொகை கலிவிருத்தமே என்பர் வெள்ளை வாசரு தம் பன்னிருதிருமுறை வரலாற்றில்.
4. கம்ப சுந்தரகாண்டம் காட்சிப்படலம் 19 முதல் 29வரை
5. பதினான்கு சீர் ஆசிரியவிருத்தம் என்றும் குறிப்பிடலாம்.

தான தானனன தான தானனன
தான தானனன தானனா

என்ற ஒலி அமைப்போடு இவர் கையாள்கின்றார்.

யாக்கையின் இழிவு, மாயையின் இயல்பு, இறைவன் திருவருள் முதலியனவற்றை ஆற்றலோடும் அழகோடும் இப்பாடல்கள் உணர்த்துகின்றன. இவற்றுள் சில பாடல்கள் இயைபுத் தொடை பெற்றுள்ளன.

**கண்ணிகள்:** அளவொத்த இரண்டு அடிகள் கொண்ட பாடல்கள் கண்ணிகள் ஆகும். தாயுமானவர் பாடற் **கண்**ணிகள் எல்லாம் அடிக்கு நான்கு சீர் கொண்டனவாய் உள்ளன. **வெண்டளை** கொண்டு அமைந்துள்ளன. இறுதிச் சீரையே தலைப்பாகக் கொண்டு **பராபரக்** கண்ணி, **பைங்கிளிக்** கண்ணி எனப் பெயர் பெறுகின்றன. எல்லாக் கண்ணிகளும் அடி எதுகை உடையனவாயும், பல பொழிப்பு மோனை கொண்டும் விளங்குகின்றன.

**ஆனந்தக் களிப்பு: சிந்துப்பாவின்** ஒரு வகையே ஆனந்தக் களிப்பு.[6] ஓர் எதுகை பெற்று நாற்சீர் உடையன வாய் **இரண்டடிகள்** அளவொத்து இரட்டித்து வருதல் இதன் இயல்பு ஆகும். **இயைபுத் தொடை** அமைதல் சிறப்பு. பதினெண் சித்தர்களுள் கடுவெளி சித்தர் பாடல்கள் இந்த அமைப்பு உடையன. தாயுமானவருடைய இப்பாடல் எளிய சொற்களும் இனிய ஓசையும் கொண்டு பாமர மக்களும் உணர்ந்து பாடும் வகையில் அமைந்துள்ளது. ஆனால் இந்த எளிய அமைப்புடைய பாடல் மூலமே தாயுமனவர் தாம் பெற்ற பேரானந்தப் பெருநிலையைச் சிறப்பாக வெளியிடு வதை எண்ணும்போது அவருடைய கவித்திறனும் அவர் மக்கள் எல்லோரிடமும் கொண்ட கருணை உள்ளமும் நன்கு தெளிவாகின்றன.

---

6. யாப்பதிகாரம் பக் 85

# 5. அடிகளாரின் பாடல்கள்-பாடுபொருள்

**1. பரசிவவணக்கம் :** மனங் கடந்ததும், வழக்கிட நின்றதும், என்றைக்கும் உள்ளதும் காலம் கடந்ததும் ஆகிய பரசிவம் ஒன்றே காணும் இடமெல்லாம் கடந்து நிற்கிறது. எனவே, அதனை மோன உருவெளியாய்க் கருதி வணங்குவாம்! என்று முதல் பாட்டில் அடிகளார் கூறுகின்றார். உயிர்க்கு எண்ணற்ற ஊர், பெயர், உறவு, உடல், செயல், கருத்து, சிறப்பு, சுவர்க்கம், நரகம், வழிபடு தெய்வம், நெறிப்படுத்தும் சமயம் உள்ளன. இந்தத் தோற்றக் கேடுகளை ஞான சித்சக்தியால் உணர்ந்து தெளிந்து இன்பமழை பொழியும் மேகமாய்க் கடவுளாய், நம் உளம் கடந்த நிலை உடையதாய் மோனச் செல்வமாய், எல்லை இல்லா ஞானமாய் விளங்கும் பெரிய பொருளை யாம் வணங்குவாம்' என்பது இரண்டாம் பாடலின் கருத்தாகும். மூன்றாவது பாடல், தன்னை உணர்ந்து கொண்ட உயிர் தாயாம் பராசக்தியின் துணையால் தந்தையாம் பரசிவத்தை உணர்ந்து அடையும் நிலையைக் குறிக்கின்றது. 'ஆண்டவன் அனைத்துமாகி அத்வைதமாய், மந்திரவடிவாய், அறிவினுக்கெல்லாம் அடிப்படை அறிவாய், ஆனந்த மயமாய், முதலாய், முதலற்றதாய், தத்துவ வடிவாய், தன்னையன்றி வேறெதனையும் சாராததாய், அசைவற்றதாய், அமைதியானதாய்,

ஐம்புலன் துணையின்றித் தன்னைத்தான் அறியவல்லதாய், அறிவால் அறிய இயலாததாய், அறிவினுள் அமைந்ததாய் இலங்குகின்ற பரதேவதையின் இயல்புகளுக்கேற்பத் தத்தனக்குப் பொருந்திய ஆத்ம சாதனை புரிந்து, சிவாத்து வித முக்தி அடைய வணங்குவோமாக.

2. **பரிபூரணானந்தம் :** பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே என இதன்கண் அமைந்துள்ள பத்துப் பாடல்களும் முடிவுபெறுகின்றன. அவ்வாறு முடியும் இறுதித்தொடர் ஆகிய 'பரிபூரணானந்த'மே இப்பாடல்களுக்குஎல்லாம்தலைப்பாக அமைந்துள்ளது.

முழுநிறை இன்பமாம் இறைவன் என்னும் கருத்து இப்பாடல்களில் வலியுறுத்தப் பெறுகின்றது. எல்லை இல்லாப் பேரின்பமயமான இறைவன் காணும் இடமெல் லாம் நீக்கமற நிறைந்துள்ள நிலையை அடிகளார் இப் பாடல்களில் ஆங்காங்கே குறிப்பிடுகிறார். எல்லைக்குட் பட்ட அளவைகளால் அத்தகைய இன்பத்தை அளக்க இயலாது; விளக்கவும் இயலாது. அன்றியும், சிந்திக்கத் துணை செய்யும் கருவிகளை அடக்கி ஆளும் ஆற்றல் உயிருக்கு இல்லை. எடுத்த எடுப்பிலேயே தம் மனத்தை யோ, தம் மனத்தை நெறிப்படுத்தும் காற்றின் திறத்தை யோ, தம்மால் கட்டுப்படுத்தஇயலவில்லை எனஒப்புக்கொள் கிறார். 'துறவி போல் அங்குமிங்கும் சென்றாலும் நான் உண்மைத் துறவியல்லன். இந்த உண்மையை மறந்தபோது, உறங்குகின்றேன். சாவை எண்ணி அஞ்சுகின்றேன். மோன இன்ப நிட்டைக்கும் என் நிலைக்கும் வெகுதூரம். எங்கும் நிறைந்த இறைவனே ஒன்றுக்கும்உதவாத எனக்கும்பேரின்ப நிட்டை அருள்வாயாக' என்கின்றார். இறைவன் வேண்டிய தெல்லாம் வேண்டியவாறு வழங்கும் கற்பக மரம். ஆனால், ஆசைக் காட்டில் அகப்பட்டுக் கொண்டோர்க்கு அவன் அருட்கனி கிட்டாது. ஊர்வன முதலான உயிர்களெல்லாம்

பெற்ற உடம்புகள் அவையவை கொண்ட ஆசைக்கேற்ப அமைந்துள. வெட்டவெளியினின்று தோன்றிய பூதங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொன்றினுள் ஒடுங்கி இறுதியில் வெறும் வெளியே மிஞ்சும். அதனைப் பாழ் என்றும் அருள் என்றும், வேத வேதாந்தங்கள் கூறும். ஞானம் என்றும், அருள் என்றும் திருவருள் பெற்ற பெரியோர் பெற்ற பெருமை என்றும் ஆதியந்தமில்லா மோனம் என்றும், இறைவன் தமக்கு வந்துரைத்தது தம் பரிபாக காலம் என்று அடிகளார் கூறுகிறார். பிரமன் முதலான தேவர்களாலும், மானிடர்களாலும் செய்யத்தக்க செயல் ஒன்றுமில்லை. எல்லாம் ஆராய்ந்து பார்த்தால் எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் செயலே. இந்த உலகங்களெல்லாம் மாயையின் செயல்களே. இவை எல்லாம் உண்மையலல; அல்ல என்று பொறிபுலக் கருவிகளும், மனம் புத்தி முதலிய கரணங்களும் அமைதி கொள்ள ஒரு விநாடி கண்மூடி இருக்க இயலவில்லை. எப்போதும் என் செயல்களுக்கெல்லாம் நீயே காரணமாகிறாய். எனவே எனது செயல் நினது செயலாம். யான் என்னும் உணர்வு நீயில்லாது என்னுள் தோன்றக் காரணம் இல்லை. இதனை எண்ணினால், நீயே நான் என்ற உண்மை தெளிவாகும். இதுவே வேதாந்த சித்தாந்த சமரச இயல்பாகும். இறைவா! பற்றெலாம்நீங்க உண்மை ஞான வீரம் தந்து என்னைக் காத்தருள்வாயாக. பற்பல சமயத்தார், நின் இயல்பைப் பற்பலவாறு உரைக்கின்றனர். இந்த உரைகளுள் நுழைந்தால் நெஞ்சம் பாதரசம் போல் அங்கும் இங்கும் அலைந்து திரிகிறது. எனவே இவற்றால் நிலையான இன்ப நிட்டை கைகூடாது. எங்கும் நிறைந்த பரிபூரணமே! அஞ்ஞான இருளிலே அகப்பட்டு என் அறிவு சுருங்குமாறும் தாம் பற்றியதே பற்று என்று அவ்வறிவு கருதுமாறு செய்ததும், சோறே சொர்க்கம் என்று என்னை மயங்கச் செய்ததும் தந்தை தாய் முதலாகிய பெரியதொரு உலகில் என்னைத் திரிய விட்டதும் எதனால்? எனது ஆசையாலா? ஏதுமறியேன், இறைவா! இன்ப துன்ப நிலையை ஒன்று போல் ஏற்கும் திறமும்,

வேதாந்த சித்தாந்த மரபு சமரசமானது என்று எண்ணும் அறிவும் பெற உதவியது உன் அருள். உன்னையே நம்பும் எனக்கு உலகம் இதுவரை அறியாத மோனநிலையே பற்றாக அருள்வாய், பரிபூரணனே! நின் ஆணையால் கடல் கரையின்றி நிற்கின்றது. நஞ்சு அமிழ்தாகின்றது. மலை வில்லாகின்றது. இத்தகைய உன்னால் என் மனம் குவியச் செய்வது அரிய ஒரு செயலோ? ஆசைக்கு எல்லை இல்லை. மண்ணெல்லாம் பெற்றாலும் கடல் மீது ஆட்சி கொள்ள அவாவுகின்றனர். நெடுநாள் வாழ்ந்த பின்னும் மேலும் வாழ விரும்புகின்றனர். மானிட வாழ்வு உண்பதிலும், உறங்குவதிலுமே கழிந்து விடுகின்றது. எல்லாம் நான்; எதற்கும் 'நான் நான்' என்று வரும் ஆசைக் கடலுள் மூழ்கி அழியாமல் எனக்கு மனதற்ற தூய நிலையை அருள்வாய்.

3. **பொருள் வணக்கம் :** பதி, பசு பாசமாகிய முப்பொருளுள் சிறந்த பதி உண்மை ஞான இன்பப் பொருளாகும். அதற்கு உயிர் செய்யும் வழிபாடு இங்கு அடிகளாரால் பேசப் பெறுகின்றது.

அந்தப் பொருள் சுகாரம்பப் பெருவெளியாகும்; சித்தாந்தப் பேரொளியாகும்; தெரிவரிதாய் எங்கும் கலந்த பொருளாகும்; யான், எனது அற்றவர் உறவாகும்; தீதில் பரமாம் பொருளாகும்; இந்த உலகம் இந்திரசாலம், கனவு, கானலின் நீர் என எமக்குத் தோன்றுமாறு செய்த குருமௌனியாகும்; பூரண ஆனந்தமாகி இருள்தீர விளங்கும் பொருளாரும்; துரியநடுவூடிருந்த பெரிய பொருளாகும்; சாந்த அருளாகும்; சதானந்தமான பெருந்தகையாகும்; அதுவே என் உயிர்த்துணையாகும். ஒப்பற்ற பசுபதியான அப்பொருளைச் சிந்தை செய்வாம்; கண்ணீர் வழியக் கை குவித்துத் தொழுதல் செய்வாம்; பேரன்பால் நினைதல் செய்வாம்.

4. **சின்மயானந்தகுரு :** அறிவு மயமான ஆனந்தம் அளித்தருளும் இறைவன் குருவடிவில் வந்து தமக்கு

அருளியதைப் பதினொரு பாடல்களில் அடிகளார் பாடுகின்றார். இப்பதினொரு பாடல்களும் 'சின்மயானந்த குரு என முடிவதால் இத்தலைப்பினை இப்பகுதி பெற்றது. திருச்சிராப்பள்ளியில் சிரகிரி மலையில் கோயில் கொண்டருளும் தட்சிணாமூர்த்தியை முன்னிலைப் படுத்தி இப் பாடல்கள் செல்லுகின்றன. முதல் ஐந்து பாடல்களில் தம் குறையையும் இறை செயல்களையும் எடுத்துக் கூறித் தமக்கு அருளவேண்டும் என்று அடிகள் கேட்பதாக அமைந்துள்ளது. ஆறும் ஏழும் அன்னையைப் போல் வளர்த்து அப்பனைப்போல் திருத்திப் பணிகொண்ட திறத்தை வியந்து பாடுகின்றார். இந்த இரு பாடல்களும் இனிய உருவக நயம் பெற்று விளங்குகின்றன. எட்டாம் பாடல் மௌன முத்தியின் இயல்பு பற்றித் தனக்கு உரைத்ததைக் குறிப்பிடுகின்றது. ஒன்பதாம் பாடல், மௌனியாய் வந்த திருவடி தீட்சை தந்து தனக்கு அருள் புரிந்தது இறைவனே என்று குறிப்பிடுகின்றார். அறிவினை மறைத்தும் ஞானம் கொடுத்தும் இருவகையாக இறைவன் அருள்செய்யும் திறத்தை வியந்தும் தமக்கெனச் சுதந்திரம் இல்லையென்றும் பத்தாம் பாடலில் அடிகள் கூறுகின்றார். இப்பகுதியின் இறுதிப்பாடல் ஞானத்தாலன்றிப் பிற பக்தியால், கருமத்தால், துறவால் என்று குறிப்பிடுகின்றார்.

5. **மௌன குருவணக்கம்** ; மந்திர உபதேசம் செய்து யோக தந்திர வழிகாட்டித் தன்னை ஆட்கொண்ட திருமூலர் மரபில் தோன்றிய மௌனகுருவுக்கு அடிகளார் கூறும் வணக்கங்களாக இப்பத்துப்பாடல்களும் விளங்குகின்றன. முதல்பாடல் அடிகளாரை ஞானக்களிறாக மௌனகுரு வளர்த்த திறத்தினை முற்றுருவக அழகு விளங்க அடிகளார் எடுத்துரைக்கின்றார். அடுத்த பாடலில் 'சிந்தையற நில்" என்று உபதேசித்துச் சும்மா இருக்கும் நெறியில் அடிகளாரை நிறுத்தி வேதங்களும் சைவாகமங்களும் கொண்ட முடிவுகள் ஒரு தன்மையதே என்று உணர்த்திய பாங்கைக் குறிப்பிடு,

சிறது. மூன்றாம் பாடல் மாயை தம் அறிவை மயக்கும் இயல்பைக் கூறி அதனை வெல்ல வழிகாட்டியருள வேண்டு மென்று அடிகளார் தம் குருவைக் கேட்கும் பாங்கில் அமைந்துள்ளது. நான்காம் பாடல் பொன்னையும் பெண்ணையுமே பொருளெனக் கண்ட உலோகாயத சமய நடையிலிருந்து மௌனகுரு தன்னைத் தடுத்தாண்டு வாழ்வித்த நிலையைக் குறிப்பிடுகின்றது. ஐந்தாம் பாடலில் தமது நெறியாக மௌனகுரு உபதேசித்ததை அடிகளார் குறிப்பிடுகின்றார். ஆறாம் பாட்டில் தம்பாலும் தன் நெஞ்சின்பாலும் உள்ள குறையைக் கூறி, அவன் அருளை வேண்டும் முறையைக் குறிப்பிடுகின்றது. ஏழாம் பாடல் செயற்கரிய செய்யும் மௌனகுருவின் பெருமையைப் பேசுகின்றது. 'துறவிகள், யோகிகள் மோன ஞான இன்ப நிட்டையார் சித்தர்கள் சூழ நவரத்தின மணி இழைத்த சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் நீ நின் திருவடிகளில் மலரிட்டு வணங்க என்னை அழைப்பது எந்நாள்?' என்று ஏங்குவதாக அமைந்துள்ளது. ஒன்பதாம் பாடல் அகங்காரத்தின் இயல்புகளை எடுத்து விளக்கி அவை யெலாம் திரண்ட உருவே இராவணன் என்றுஅழகாகக்கூறி, அதனோடு அடிகளால் போராட இயலாது என்பதை எடுத்துரைக்கின்றது. பத்தாம் பாடலில் தம்சஞ்சல புத்தியை எடுத்துரைத்துத் தம்மால் முத்தி நெறியைக் கண்டுகொள்ள இயலாது என்பதையும், இன்பதுன்பத்தைச் சமானமாக நோக்க இயலாது என்பதையும் எடுத்துக்கூறி, 'சிந்தையற நில்' என்று கூறிய மௌனகுருவின் உபதேசத்தையே மலைஇலக்காக நம்பிய நிலையைக் கூறுகிறது.

6. **கருணாகரக் கடவுள் :** இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன் என்று சொல் லொண்ணாதவாறு நிர்க்குணியாகிய இறைவன்உயிரிடத்துக் கருணை கொண்டதனால் எண்ணற்ற குணங்களின் இருப்பிடம் ஆகிறான். அவன் மனம், சொல், செயல் கடந்த

பேரின்பக் கூத்தாடுகின்றான். அவனே கல்லால மரநிழலின் கீழே முக்கண்ணனாய் இருந்து, மோனநிலை காட்டியோன் ஆவன். மண்முதலான பூதங்கள், மூக்கு முதலான கருவிகள், வாக்கு முதலான கர்மேந்திரியங்கள், கோத்திரம் முதலான ஞானேந்திரியங்கள், ஒளிமுதலாகிய தன்மாத்திரைகள், மனம்முதலான அந்தக் கரணங்கள் ஆகிய ஆன்மதத்துவங்களும், கலை முதலான வித்தியா தத்துவங்களும், சுத்த வித்தை முதலாகிய சுத்ததத்துவங்களும் ஆகிய இவற்றோடு, பூதகாரியம் முதலிய தொண்ணூற்றாறு தத்துவங்களும், மௌனியாய் நீசொன்ன சொல்லைக் கண்டுகொண்டபோது ஞானஆகாசமாகிப் பேரின்பக் கடலாய்த்தோன்றத் துவங்கி விட்டன. கண்ணீர் கலங்கக் கை கூப்பித் தொழும் அடியவரைக் கைவிடாத கருணாகரக் கடவுளே! உண்மை யில் எல்லா உயிரும் உன் அடிமை. எல்லாப் பொருளும் உன் உடைமை எல்லா நிகழ்ச்சிகளும் உன் செயல். நீ எங்கும் நிறைந்துள்ளாய். இதை வேதங்கள் முழங்கின. ஞானங்கண்ட மோனிகள் இவற்றையே கூறினர். சமயச் சான்றோர்கள் தொகுத்த நெறிகளும் இவையே. இவற்றை அறிந்தும் உணர்ந்து சுகம் பெறாது போயினேன். இவ்விடுதலைக்கு என்ன வழி? சொல்லி யருள் இஃது ஒரு வகையான வழிபாடு.

நான்காம் பாடலில் இன்னொரு வகையான வழிபாட்டு வழியை அடிகளார் கூறுகிறார். எங்கெங்கு நோக்கினாலும் அங்கங்கே பிரிக்க இயலாதவாறு நிறைந்திருக்கும் இறைவனை மறந்து ஒவ்வொருவரும் சிறுகுழந்தைகள் குச்சியையும் குப்பைகளையும் வைத்துச் சிறு வீடு கட்டிக் கிளிஞ்சலையும் சிறுகற்களையும் கொண்டு சிறு சோறாக்கி அதனை உண்டுண்டு மகிழ்வது போல நான் என் பெண்டு, என்பிள்ளை என்று எல்லை வகுத்துக்கொண்டு, என் குறுகிய நெஞ்சிற்கு ஏற்ப உன்னைக் குறுக்கப் பார்க்கிறேன். இந்தப் பார்வை போய் அகண்டபார்வை வரவேண்டும். எங்கும் உன்னைப் பார்க்கவேண்டும், நான் என்று, நீ என்று

இரண்டு இல்லை. அப்படி இரண்டாக்கிக் காட்டுவது இடையே முளைத்த மனம். அந்தக்களையைப் பறித்து எறிய நின் அருள் வேண்டும். இது ஒருவகை வழிபாடு. ஆறாவது பாடலும் இதையே இன்னொரு வகையில் வற்புறுத்துகிறது.

எண்ணங்களே மனிதனாகி விடுகிறான். இன்றைய எண்ணம். நாளைய மனிதன். எந்த எண்ணத்தை எவன் ஒருவன் எப்போதும் நினைக்கின்றானோ, அதன் வண்ணமாக அவன் ஆகிவிடுகிறான். வேதங்கள் கூறும் மகா வாக்கியங்கள் மனிதனை அமரனாக்க வல்லன. அவற்றுள் ஏதேனும் ஒன்றை மனத்தில் இருத்தித் தியானம் செய்து வருவானானால் அவனை மரணம் அணுகாது. இது பயின்று அறிய வேண்டுவது.சொல்லி விளங்குவதில்லை.

இன்னொரு வகையான வழிபாட்டையும் எட்டாம் பாடலில் கூறுகிறார். இதற்கு மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று பயணம்செய்ய வேண்டுவதில்லை. பச்சிலை, மலர், பழம், தூபதீபம் இவைகளில் ஒன்றும் வேண்டுவதில்லை. இதற்குக் குறித்ததோர் இடமும் இல்லை; குறித்ததோர் காலமும் இல்லை. எங்கும் எப்போதும் இப்பூசனையைச் செய்யலாம். செய்யவேண்டும். என்ன பூசை அது? எப்படிச் செய்வது அதனை? மனந்தான் பலிப்பொருள். அன்பே, அபிஷேக நீர். ஆவியே நைவேத்தியப் பொருள். பிராணனே, தூபதீபம்; இப்பூசனையின் பெயர் 'சதாகால பூசை.'

இறுதியாக ஒன்று, அனைவரும் அறிந்த பக்திநெறி. உடல் குழைய, என்பெலாம் உருக, கண்ணீர் கலங்க, நெஞ்சம் பதைக்க, கைகூப்பி கருணை மழையே! அருள் வெள்ளமே! என்று கூவி ஆடிப்பாடும் முறையே அது. இவ்வாறு கருணாகரக்கடவுள் என்ற பகுதியில் தம் அநுபவத்தில் கண்ட முறைகளை எல்லாம் அடிகள் தொகுத்து அளிக்கிறார்.

7. **சித்தர்கணம் :** முதல் மூன்று பாடல்களில் சித்தர்கள்பால் விளங்கும் எட்டுவகைச் சித்திகளை எடுத்தியம்புகிறார். ஆறாம்பாடலில் இந்திராதி தேவர் களெல்லாம் வாழ்த்த சிவராச யோகியரின் பெருமையை எடுத்து உரைக்கின்றார். ஒன்பதாம் பாடலில், யோகியரைச் சிங்கமாக உருவகித்துத் 'தவராச சிங்கங்கள்' என்று போற்றுகின்றார். ஏழு, எட்டு, பத்து ஆகிய மூன்று பாடல்களிலும் தன்னைத்தானே தாழ்த்திக் கொண்டு, தன்னைக் காத்தருளுமாறு, தன்னை வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தக சித்தர் கூட்டத்தை வேண்டுகின்றார். நான்காவது பாடலில், அருமையான இந்த மானுடப் பிறவி முற்றுப் பெறுவதற்குள் யோகசித்தி பெற்றுக் குண்டலினியின் அருளினாலே ஒழியாது பொழியும் அமுதம் உண்டு, அமரத்வம் அடைய வேண்டும் என வேண்டுகின்றார்.

7. **ஆனந்தமானபரம் :** சான்றோர்கள் தங்களைத் தீயோனாய், பொய்யனாய், அறிவிலியாய், வஞ்சகனாய், காமுகனாய்த் தாழ்த்திக் கூறும்போது அவர்கள் வாழ்வில் அந்த அளவு தாழ்ந்துவிட்டார்கள் என்று கருதுதல் கூடாது. உலகில் பற்பல வகைகளில் தாழ்ந்தோர்களைக்கரையேற்றும் பொருட்டு அன்னார் தாழ்ச்சிகளைத் தம்மேல் இட்டுக் கொண்டு பாடுதல் இயல்பு எனவே 'ஆனந்தமானபரம்' என்ற இந்தப் பகுதியின் பல பாடல்களில் தாயுமானவர் தம்மைக் குணமொன்றுமில்லேன்; கள்ளன்; அகிலத்தை நாடியோன்; பொய்யன்; புலையன்; கொடியன்; சீலமொடு தவவிரதம் கனவில் கூடக் காணாதவன்; பிறர் கேட்கப் போதிப்பது தவிரச் சும்மா இருந்துஅருள்புரிந்திடாப் பேதை என்றெல்லாம் அடிகளார் கூறுவது அந்த இயல்பு பற்றியே என உணர்ந்திடல் வேண்டும். ஆறாம் பாடலில் ஆணவக் காட்டை அழித்து, அகங்காரப் பாறைகளைப் பிளந்து நெஞ்சப் பூமியைத் திருத்தி மோன வித்தை விதைத்து அன்பு நீர் பாய்ச்சி, மாயப்பறவை அணுகாமல் காத்து

முத்தியெனும் விளைச்சலை அறுத்துப் பேரின்பப் பயன் துய்க்கும் ஞான உழவை அழகாக எடுத்து உரைக்கின்றார். 'எத்தனை விதங்கள்தான் கற்கினும் கேட்கினும்' என்று பலர்பாடும் பாடல் இத்பகுதியில்தான் உள்ளது.

9 **சுகவாரி :** சுகவாரியென்று இறைவனை விளிக்கும் இந்த இறுதித்தொடர் பேரின்பப் பெருங்கடல் என்னும் பொருள் உடையது. இப்பகுதியில் பன்னிரண்டு பாடல்கள் அடங்கி உள்ளன அடியவர்க்கு இனிய பொருள்களி லெல்லாம் சிறந்த இனியனாய்த் தோன்றி, இன்பந் தந்த இறைவன் இறைநெறி தவறாத தமக்கும் அந்த அருள் புரிதல் வேண்டும். இறைவன் அடிகளாரின் இளம் பருவத்தில் தோன்றி ஆர்வத்தைத் தூண்டிக் காதல் பித்தினைத் தோற்றுவித்து விட்டுப் பின்பு கூடிக் களிக்காது பிரிந்து போனான். அப்பிரிவை நினைந்து வருந்தும் தமக்கு அந்த அருள் என்று வாய்க்கும் என அடிகளார் ஏங்குகிறார். தம்நெஞ்சம் கல்நெஞ்சம் என்றாலும் கருணைக்கு உருகா மலா போய் விடும்? இறைவன் எல்லாம் வல்லவன். வல்லான் வகுத்ததே வாய்க்கால். எனவே இறைவனால் தான் தாம் வாழ்வு பெற இயலும். பொல்லாத குழந்தையைத் தாய் தள்ளியா விடுவாள்? வெறும் பேச்சில் பயனில்லை. தாம் மோனநிலை பெற்றுச் சும்மா இருக்கும் திறத்தை அருள வேண்டுகின்றார். நெக்கு நெக்கு நினைப் பவர்க்கு இறைவன் அமிர்த சஞ்சீவி போல வந்து அருள் புரிவான். அப்படி இருக்க, உள்ளன்பு இல்லாத தம்மையும் அவன் அடிமை கொண்டான். எதன் பொருட்டோ? பற்றற்ற நிலை ஒன்று. காற்றைப் பற்றி யோகம் செய்து மனத்தைக் கடக்கும் நிலை ஒன்று. இந்நிலையை மௌனகுரு காட்டிக் கொடுத்தார். அதனைத்தான் பெற்றாரோ? பெறவில்லையோ? தாம் இரும்பொத்த கல்நெஞ்சனா யினும், இறைவனை அடிகளார் என்றும் மறந்தறியார். இறைவன் என்று உண்டோ, அன்றே உயிரும் உண்டு. இறைவன் மண் முதலான அண்டங்கள் அனைத்தையும்

அடக்கிக் கொண்டு இருக்கின்ற ஞான வெளியின் இயல்பைக் காட்டினான். அதனைப் பற்றிப் பிடிக்கின்ற மனவெளியைக் காட்டினான். அதற்கும்மேல் மனவெளியில் உலாவுகின்ற தன் இயல்பைக் காட்டினான். இன்னும் சிந்தையற்ற நிலை யைக்காட்டி நிலையான நிட்டையையும் கூட்டினான். இறுதிப் பேரின்ப நிலையை என்று காட்டுவானோ என்று அடிகள் ஏங்குகிறார். சமயம் ஒவ்வொன்றும் ஒவ்வொன்று சொல்லுகின்றது எதைப் பின்பற்றுவது? எதைக் கைவிடுவது? முக்கண் இறைவன் சின் முத்திரையாய் சுட்டிக் காட்டிய உண்மையை எவர்மூலம் அறிந்து கொள்ள இயலும்? இவற்றையெல்லாம் எண்ணித் தம்முள் தாமே மூழ்கித் தனித்து இருக்கலாம் என்றால், மனமாயை தொல்லை செய்கிறது. இறைவன் எங்கும் இருப்பதாகச் சொல்கின்றார்கள். எல்லா வடிவிலும் திகழ்வதாகக் குறிப்பிடுகின்றார்கள். எக்காலமும் நிகழ்வதாகக் கூறுகின்றார்கள். தான் இறைவனை அறிந்து கொள்ள உளவு ஒன்று அவனே காட்டி அருளல் வேண்டும். சொந்தமாகத் தானே வந்து ஆட்கொண்ட இறைவன் இப்போது யாரோ அறியாது அயலார் போலத் தம்மைத் துன்பத்துள் ஆழ்த்துகின்றான். எந்தநாள் அவன் அருள் தமக்கு வாய்க்குமோ என்று அனலில் இட்ட மெழுகுபோல் நெஞ்சு உருகுகின்றார் அடிகளார். தம் மனம் உயிராகிய தம்மைப் போல் உடலில் என்றும் உள்ளது. என்றாலும் உடலையும் மனத்தையும் உயிர் 'அசத்து' என்று பிரித்து வைக்கிறது. 'இவ்வாறு பிரித்து வைத்து ஏ! உயிரே நீ என்ன கோட்டை கட்டிக் கொண்டாய்?' என்று மனம் ஏசுகின்றது. இப்படி மனம் ஏசியும் தனக்கு இறைவனருள் இன்னும் கிட்டவில்லையே என்று அடிகளார் ஏங்குகின்றார்.

9. **எங்கும் நிறைகின்ற பொருள்** : இப்பகுதி பதினோரு பாடல்களைக் கொண்டு இயங்குகிறது 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்ற உண்மையை உணர்ந்தால், இருவேறு உலகத்து இயற்கை இயல்பாகவே மறைந்தொழியும். இறைவனை ஒவ்வொரு மதம் ஒவ்வொரு வகையாக உரைக்கின்றது. அன்னை என்கிறது ஒரு சமயம்.

அப்பன் என்கிறது இன்னொருசமயம். இவ்வாறு ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு வகையில் இறைவனை எண்ணி நிறைவு கொள்ளுமாறு அருள்கொண்டு ஆடல் புரியும் இறைவனது இயல்பை எடுத்து உரைப்பது எளிதன்று. வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலிய நூல்கள்அத்துவிதம்,துவைதம் ஆகிய இருநெறிகளையே விரிவாகக் கூறுகின்றன. சொல்லால் விளக்குதற்கரிய துவைத ஞானமே அத்துவித ஞானத்திற்கு அடிப்படையாகும். ஊகம், அநுபவம், வசனம் என்னும் மூன்று அளவுகளுக்கும் இது பொருந்தும். எப்படி எப்படி அடியவர்கள் இறைவனைப் பாவிக்கின்றார்களோ அப்படி அப்படி இறைவன் தோன்றுகின்றான். மனமாயை மிகப்பொல்லாதது. அதனை ஆண்டவன் அருளன்றி அடக்கவியலாது. அடிகளார் கண்ணீர் மல்க, கைகுவித்துத் தொழுது பாடித்தாம் இறைவனை வணங்கியதையெல்லாம் நடிப்பு என்று தம்மைத்தான் தாழ்த்திக் கொள்கிறார். இத்தகைய ஏழையாகிய தமக்கு சகச நிட்டை தந்தருள வேண்டுகின்றார். ஒரு கல்முன் ஆயிரம் காக்கைகள் நில்லா. இறைவன் அருள் முன் கருமவினைகள் நில்லா. இறைவனும் தாமும் கலந்தொன்றாகும் நாள் என்று இன்றே அந்தநாள் ஆகக் கூடாதோ? எங்கும் நிறைகின்ற பொருளாகிய இறைவன்பால் ஒன்றிய நெஞ்சினனாய் அடிகளார் அவன் அருளில் சேர்ந்தால் தடை செய்வார் யார்? இறைவன் அருட்காட்சியிலிருந்து அகலாது, அவன் அடியவர்க்கெல்லாம் தொண்டு செய்து சித்தியெலாம் பெற இறைவன் கருணையை அடிகளார் வேண்டுகிறார். இறைவன் அடியவர்கள் யோகத்தில் ஒன்றியிருக்கத் தாம் போகத்தில் பொழுதையெல்லாம் போக்கியதாகக் குறைபட்டுக் கொள்கின்றார். பாழான பெண்கள் தரும் சிற்றின்பமே பரம இன்பமென என்னும் தடுமாற்றம் விண்ணுலக தேவர்களுக்கே உள்ளதெனத் தெரிகிறது. அப்படியிருக்க, விடுதலையை நோக்கி முயலும் ஒரு சீவனுக்கு எத்தனை தடைகள் வருமோ? ஆணவம் தன்னையும் காட்டாது, தான்

சார்ந்துள்ள உயிரையும் காட்டாது மறைக்கின்றது. இருவினையினால் தோன்றும் துன்பக்கடல் அழியவும், மாயையினால் தோன்றும் முன்னிலைச்சுட்டு ஒழியவும் தம் நிலை இன்ப நிறைவாக நிற்கவும் இறைவன் அருள்புரிய வேண்டுமென அடிகளார் விழைகின்றார்.

11. **சச்சிதானந்த சிவம் :** இப்பகுதியிலும் பதினாறு பாடல்கள் அடங்கியுள்ளன. குணனாய், குணமற்றவனாய் விளங்குகின்றான் இறைவன். அவனை 'சும்மா இருந்து கண்டு பேரின்பம் அடைதல் வேண்டும். அதற்கு மனம் தடையாக உள்ளது. அதன் சார்பிலிருந்து விடுதலைபெற்று நிட்டைபெற இறைவன் அருபுரிவனாக. அழுக்காறு, அவா. வெகுளி முதலியவற்றின் இருப்பிடமாக விளங்கும் பொய்யான உடம்பைப் பொய்யென்று தெளிந்து ஞான வடிவாய் நிற்றல் வேண்டும் தமக்குப் பக்தி இல்லை. சரியை, கிரியை, யோக ஞானமும் இல்லை. தாம் எப்படி முன்னேறுவது என்று கலங்குகின்றார் அடிகள். சிறியதைப் பெரியதாகவும், பெரியதைச் சிரியதாகவும் உள்ளதை இல்லதாகவும், இல்லதை உள்ளதாகவும் அமைந்து ஆட்டுகின்ற மனமாயையை வெல்வது எப்படி? எப்போது இறைவனருள் தமக்குக் கிட்டும்? இறைவன் அருளைப் பெறுவதற்கு முன் கற்றகல்வி கேள்வியைத்தாங்கி நிற்கும் உடல் பாழாகி விடுமோ? என்று ஏங்குகின்றார். மண்ணுலகச் செல்வமெல்லாம் சூழ இல்லறம் நிகழ்த்தியும், அனைத்தையும் வெறுத்துக் கானகத்திற்குச் சென்று துறவறம் பூண்டும் பயன் என்? மோனநிலை பெற்றவர் களே விடுதலை பெறுவர். வேதங்களும் ஆகமங்களும் கண்ட நான்கு புருடார்த்தங்களில் சிறந்தது முக்தியாகும். அதனை அநுமானம் முதலிய அளவைகளால்அறியலாம். நிருவிகற்ப அநுபவத்தால் உணரும் போது, அளவை எதுவும் துணைபுரியாது. இறைவனை வாழ்த்துவோர் உய்வர். பிறப்பு இன்னும் உண்டு எனில், குண்டலினி சக்திபால் தம்மை ஒப்படைத்துத் தம்மை இறைவன் காப்பானாக.

இனிப்பிறப்பு இல்லையெனில் பராசக்தியிடம் தன்னை ஒப்படைத்து இறைவன் முத்தி வழிகாட்டுவது நன்று என்கின்றார். ஆதாரமும் ஆதேயமுமாய் இருக்கும் இறைவன் உயிர்களையெல்லாம் ஆட்டுவோனாயும். ஆடல் காண்போனாயும், ஆடுகின்றோனாயும் உள்ளான். இப்பகுதி இறுதிப்பாடலில் எத்தகைய இன்பத்துள் தாம் இருந்தாலும் தாம் இறைவனை எப்போதும் மறவாமல் இருக்கும் வரம் ஒன்று இறைவன் தந்தருள வேண்டுமென்று விழைகின்றார்.

12 **தேசோமயானந்தம்** (எல்லையில் பேரின்ப நிலை): தேசோமயானந்தம் என்ற இப்பகுதியில் சென்ற பகுதியைப் போல பதினொரு பாடல்கள் உள்ளன. திருமந்திரம் குறிக்கும் இயமம் நியமம் முதலிய யோக நெறியினின்று சென்று ஆன்மாவும் பரமான்மாவும் முக்தியில் ஒன்றா இரண்டா என்று அறியாதபடி இயைந்திருக்கும் சிறப்பை இப்பிறவியில் தாம் பெற இறைவன் திருவருள் உதவ அடிகளார் வேண்டுகின்றார். பிறவிப்பெருங்கடலிலே 'யான்' எனது, என்னும் செருக்கால் தோன்றுகின்ற எண்ணற்ற தடைகளைக் கடந்து முக்திக்கரை அடைய இறைவன் அருள்வானாக. தந்தை தாய் முதலியோர் சந்தையில் வந்து கூடிப் பிரிந்து சென்றுவிடும் மக்கள் போன்றவர் ஆவர், மாடமாளிகை வாழும் ஒரு வாழ்வும் ஒரு மாய வாழ்வாகும். காம வெகுளி மயக்கமற்ற உடம்போ கனவொத்தது. யான் என்னும் அகந்தை அழியுமாறு ஆண்டவன் அருள் வெள்ளத்தில் அமிழ்ந்த பின்னும் சிந்தை குழம்புவது கண்டு அடிகளார் நொந்து வருந்துகின்றார். மனத்தை வென்று கடந்து ஞான நெறியில் சென்று பேரின்பமும் பெறவில்லை. சரியை கிரியை ஆகிய நெறிகளிலும் முயலவில்லை பிராணனைக் கட்டிக் காத்து யோகமும் பயிலவில்லை சேர்க்காது உள்ளதையெல்லாம் அழிக்கின்ற கெடுமதி எவ்வாறு வந்ததென்று அடிகளார் கலங்குகின்றார்.

''உன்னைப் பாடிப் பரவி நெஞ்சுருகி 'எங்குநிறை கடவுளே' எனக்கூறும்'' தம்மைத் தன்பால் அழைத்து இறைவன் கருணை செய்யாதிருக்குமாறு செய்தது யாரோ என்று வருந்துகின்றார். ஆறாம் பாடலில் இறைவனே மௌன குருவாய்த் தோன்றி படிப்படியாக அருள் புரிந்து மோனி ஆக்கிய அருள் திறத்தை நன்றியுடன் அடிகளார் நினைவு கூர்கிறார். அடுத்த பாடலில் தமக்கும் தலைவனாகிய இறைவனுக்கும் அடிமை ஆண்டவன் என்ற வழக்குக்கு முடிவே இல்லை. அடிமை அல்லன் என்று தாம் தள்ளப்பட்டாலும் ''நான் விலகிப் போகேன்'' என்று அடிகளார் உறுதியாகக்கூறுகின்றார். எட்டாம் பாடலில் எட்டுவகைசித்திகள் கைவரப் பெற்றாலும் சிந்தையை அடக்கி சும்மாஇருக்கின்ற திறம் பெறுதல் மிக மிக அரிது என்று மோனநிலை அடைதலின் அருமையை அடிகளார் அழகாக எடுத்துரைக்கின்றார். சின்முத்திரைமூலம் உண்மை ஞானத்தைக் கற்பித்து கூற்றுவனுக்கு அஞ்சாது ஞான ஆற்றல்தனைத் தந்தருளிய இறைவர்க்குத் தாம் என்ன கைம்மாறு செய்தல் இயலும் என்று போற்றுகின்றார். பரத்தையர் பின்னே சுற்றித் திரிந்து வாழ்நாளைப் பாழ்நாளாக்கும் வஞ்சகர் செயலைத் தம்மேல் ஏற்றிக் கொண்டு அத்தகைய கீழ்மையிலிருந்துவிடுபெற ஆலமர்கடவுளின் அருள்வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார். சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வம், எல்லையற்ற பேரின்ப நிறைவான இறைவன் உயிரினிடை ஆங்காங்கே மறைந்துள்ள அருளாளன் மௌன குருவாய்த் தோன்றி தன் மயக்கம்அறுத்து ஆண்டு கொண்டதை இறுதிப் பாடலில் இயம்புகின்றார்.

13. **சிற்சுகோதய விலாசம் :** சிற்சுகோதய விலாசம் அல்லது ஞானப் பேரின்பத் தோற்றக் கூத்து என்று இப் பகுதியில் அறிதற்கரிய பிரமமாகிய இறையை அடிகளார் சுட்டுகின்றார். இதன்கண் அமைந்துள்ள பத்துப் பாடல் களும் பதினான்கு சீர் ஆசிரிய விருத்தத்தில் அமைந்திருப்பி பினும், இனிய ஓசை நயத்தால் சந்தவிருத்தம் என்று

அவற்றைக் கூறத்தக்கவாறு அமைந்துள்ளன. முதல் பாடலில் உடலின் இழிவை, அதன் குறையை, அதன் நிலையற்ற தன்மையைப் பல அரிய உருவகங்களால் ஓவியமாக்கி அடிகளார் காட்டுகின்றார். ஆன்மா அநுபவிக்கும் கேவல, சகல, சுத்த அவத்தைகளை இரண்டாம் பாடலில் குறிப்பிடுகின்றார். இறைவனின் இயல்பை உள்ளவாறு உணர்ந்து அழைக்கும் தமக்கு இறைவனருள் கிட்டுமோ? தவமற்றவன் சரியை கிரியை யோகம் என்ற முறையான நெறிகளில் வளராதவன் அறிவற்ற மருளனன் ஆகிய தாம் அருள் பெற்ற அன்பரோடு கூடி வாழ இறைவன் அருள் உதவ வேண்டுகின்றார். இறைவன் என்று படைப்புத்தொழிலைத் துவங்கினானோ அன்றுதொட்டு இன்றுவரை இறைவனின் அடிமையாகிய அடிகளாரின் உயிரும் எத்தனையோ பிறப்பு எடுத்து விட்டது. அவற்றுள் சிறந்த மானிடப் பிறப்பையும் கண்டது இப்பிறவியில் அழுக்காறு அவா கடந்து தலைவனையும் தம்மையும் உணர்ந்து பேரின்பப் பெருக்கில் மூழ்குதல் வேண்டும். அதற்குள் உடல் கெட்டாலோ உடலை உயிர் விட்டாலோ தமக்கு உய்யும் வழி வேறு இல்லையே என்று அடிகளார் ஏங்குகின்றார். ஆறாவது பாடலில் மோன குரு உரைத்த நெறியிலே சித்த யோக நிலை பெற்று ஞான நெறி அடைதல் கைகூடுமோ என்று கலங்குகின்றார். செல்வத்தை மதியாது செம்மை நெறியை உணர்ந்து ஞான நிட்டை கூட அறிவில் தோன்றி குருவாய் உணர்த்தியதுமன்றி தன் புறக் கண்கள் முன்னும் மோனகுருவாய் வந்து போதித்த இறை அருளை அடிகளார் வியக்கின்றார். எல்லா உயிர்களையும் தன்னுயிராகக் கொண்டு அன்பு செய்து எனது என்னும் பற்றற்று அன்பர்களின் திருவடிகளை வழிபட்டு கண்ட பொருளெல்லாம் அகண்ட கடவுள் வடிவாகத் தொழுது கண்ணீர் பெருக ஆடிப் பாடி தெய்வ அன்புருவமாகி அன்பரோடு பேரின்ப வீட்டில் இருக்கும் பேற்றினை அருள வேண்டுமென்பார். அனைத்தையும் கடந்து அன்புருவாய் நிற்கும் அடியார்களின் திருவடிக்கு அன்பு பூண்டொழுகும்

தம்மை உலக மாயையுள் அமிழ்த்தி வருத்தாலமோ? இறை அருளை நம்பினவர்கள் இவ்வாறு வருந்தலாமோ? இறுதிப் பாடலில் பல சமய நெறியினர்களும் 'நாங்களே கடவுள்' எனும் பாவிகளின் வாதத்திலும் தர்க்கத்திலும் வாழ் நாளைப் போக்கும் அறிவிலிகளும் தலைவணங்குமாறு வட ஆல நீழலின்கீழ் சனகாதி முனிவர்க்கு சின்முத்திரைமூலம் மோன ஞானமுணர்த்தி தென்முகமாய் அமர்ந்திருக்கும் இறைவன் திருக்கோலத்தை அடிகளார் எத்திசையிலும் கண்டு வணங்குவதாகக் குறிப்பிடுகின்றார்.

14 **ஆகாரபுவனம் :** ஆகாரபுவனம் என்பது புலனுக்குத் தோன்றும்இந்த உலகம் என்னும்பொருளுடையது.இதுவரை அமைந்துள்ள பகுதிகள் அந்த அந்தப் பகுதிகளில் அடங்கி யுள்ள பாடல்களின் இறுதித் தொடரைத் தலைப்பாகக் கொண்டிருக்க இதுவோ முதல் தொடரைத் தலைப்பாகக் கொண்டு விளங்குகின்றது. ஏறக்குறைய இனிவரும் முப்பது பகுதிகளுள் மூன்று நீங்கப் பிற பகுதிகளின் தலைபபுகள் எல்லாம் முதல் பாடலின் முதல் தொடரையே கொண்டு திகழக் காணலாம். எனவே, இந்தப் பாடல்களைத் தொகுத்தபோது இந்த அமைப்பே தொகுத்தவர் நெஞ்சில் இவற்றை ஒன்றுசேர்க்கக் காரணமாக இருந்திருக்கக் கூடும் என எண்ணலாம்.

ஆகாரபுவனம் என்னும் இப்பகுதி சென்றதொகுதிக்கும் அடுத்துவரும் தொகுதிக்கும் இடையே யமைந்து தத்துவப் போக்கில் இரண்டையும் இணைக்கின்றது எனலாம், சமயம் கடந்த இறைவனின் மெய்மைத் தன்மைகளை பெரும்பா லுய முதற்றொகுதியில் கூறியவர் அடுத்த தொகுதியில் அம்மெய்ம்மைப் பண்புகளெல்லாம் தன்பால் கொண்டு விளங்கும் இறைவன் சிவபெருமானே என்றும், அவனை இறைவனாகக் கொண்டு தொழும் சைவமே எல்லா சமயங்களினும் சிறந்ததென்றும் அடிகளார் நிலைநாட்டு கின்றார்,

இணைப்பாக அமைந்தது என்பதற்கு இன்னொரு காரணமும் சொல்லலாம். இப்பகுதி தாயுமானவரின் ஆன்ம வாழ்க்கை வரலாற்றை ஓரளவு குறிப்பிடு கின்றது எனலாம். எனவே. முதல் தொகுதிக்கு முடிமணி யாகவும் இரண்டாவது பகுதிக்கு அடிக்கல்லாகவும் ஆகார புவனம் என்னும் இப்பகுதி விளங்குகின்றது எனலாம். இப்பகுதி இன்னொரு வகையிலும் சிறப்புடையது. அடிகளார் கண்ட சமரச சன்மார்க்கக்கொள்கையும் மோன நெறியும் இப்பகுதியில் தெளிவுறுத்தப் பெற்றுள்ளன

அடிகளார் இப்பகுதிக்குச் சிதம்பர ரகசியம் என்று ஒரு தலைப்பிட்டுள்ளது எண்ணுதற்குரியது. எல்லாச் சமயத்த வர்க்கும் சிதம்பரம் பொது அம்பலமாகத் திகழ அங்குள்ள வெட்டவெளியே (சூன்யம்) காரணமாயுள்ளது. உருவ பேதமில்லை. எல்லாம் வெளியாய் இருக்கும் போது அங்கே வேறுபாடு கொள்ள வாய்ப்புமில்லை. சமயங் கடந்த சமரசம் உடைய கொள்கையுடைய அடிகளார்க்கு சிதம்பர கோயில் குறிக்கோள் வடிவமாகவிளங்கியதால் இப்பகுதிக்கு வேறொரு சிறப்புப் பெயர் தந்துள்ளார் எனலாம்.

இப்பகுதியில் அடங்கியுள்ள முப்பத்து மூன்று பாடல் களும் 'பாரதி அறுபத்தாறு' உருவாகத் தூண்டுகோலாக இருக்கலாம் என்றுகூட எண்ணத் தோன்றுகிறது.

அடிகளார் ஆண்டவனுக்குச் செய்து கொள்ளும் ஒரு விண்ணப்பமாக இது அமைந்துள்ளது. முதல் ஏழு பாடல் கள் தாம் விண்ணப்பிக்கும் இறைவனின் இயல்புகளை எல்லாம் தொகுத்து உரைக்கின்றன. பெருநரின் முகவரியில் பெருநர் தகுதிகள் எல்லாம் குறிக்கப்பெறுமாறு போல இந்த ஏழு பாடல்களிலும் இறைவனின் பெருமைகள் இயம்பப் பெற்றுள்ளன. சில சமயம் ஒருவர் முகவரி சரியாகத் தெரியாவிட்டால் எப்படி அவரைப்பற்றி அறிந்த செய்தி களை எல்லாம் கூறி அவரைத்தேடிப்பிடிக்க முயலுவோமோ

அதுபோல அடிகளாரும் இறைவனைத் தேடிப்பிடிக்க அவனைப்பற்றித் தாமறிந்த தன்மைகளை எல்லாம் இதில் தொகுத்துக் கூறுவதாகவும் கொள்ளலாம்.

அடுத்து வரும் ஐந்து பாடல்களில் சைவ சமயநெறி எப்படிப் பிறசமயங்களை எல்லாம் வெறுத்து ஒதுக்காது ஆன்மிக உயர்வின் படிக்கட்டுகளாக அவற்றெல்லாம தன் கீழ் அடக்கிக் கொண்டு மௌனமுடி அணிந்து அவற்றுக்கெல்லாம் தலைமை தாங்க வல்லது என்றும், அருள் நெறி உடையது என்றும்,அதனுடைய பரந்த தத்துவ நெறியைச் சைவர்களால் கோயில் என்று சிறப்பிக்கப் பெறும் தில்லையம்பலச் சிதம்பர வெளியே காட்டும் என்றும் அடிகளார் குறிப்பிடுகின்றார்.

அடுத்துவரும் நான்கு பாடல்களில் இறைவனின் அருளியல்பு, உயிரில் ஆணவம் கன்மம் மாயை இவைகலந்த நிலை, அகந்தையால் தோன்றும் எண்ணற்ற துன்பக்காட்சிகள் இவற்றை உரைக்கின்றார்.

இவ்வாறு பாசம்பற்றி வாடி வருந்தும்போது உயிரை அப்பாசக் கட்டிலிருந்து விடுவிக்க வல்ல ஞானம் அருள இறைவன் அவ்வுயிருக்கு உகந்த வடிவு கொண்டு தம்முன் மௌனகுருவாய்த் தோன்றி உயிரின் இயல்பைத் தமக்கு உணர்த்தியவாறும் மோன நிலையைத் தாம் அடையத் தமக்கு உபதேசித்தவாறும் அந்த மோன நிலையின் இயல்பை தமக்கு உணர்த்தியவாறும் ஏழு பாடல்களில் எடுத்து இயம்புகின்றார்.

அதன்பின் ஒன்பது பாடல்களில் பேரின்பச் சுவையைக் காட்டி மறைந்த இறைவனாகிய அந்த ஆன்ம நாயகனை மீண்டும் அடையத் தவிக்கும் அடிகளாரின் ஆன்ம வேட்கை அகஞ்சார் அருளியல்பு (Mysticism) நெறியில் அழகாக எடுத்துரைக்கப் பெறுகின்றது.

முப்பத்து மூன்றாவது பாடல் இப்பகுதிக்கு முடிவுரையாகவும் வாழ்த்தாகவும் அமைந்துள்ள ஓர் அருமையான பாடலாகும்.

15. **தேன் முகம்** இரண்டாம் தொகுதியில் இது முதல் பகுதியாக அமைந்துள்ளது. இத் தொகுதியில் பத்துப் பாடல்கள் அடங்கியுள்ளன. முதல் பாடலின் முதல் தொடராகிய தேன்முகம் என்பதே இப்பகுதியின் தலைப்பாக அமைந்துள்ளது.

முன்பு குறித்தது போல வேத வேதாந்த சாரமாக சமயங் கடந்த நிலையில் கடவுளது குண குணமற்ற தன்மைகளை எல்லாம் எடுத்தியம்பிய அடிகளார் இத்தொகுதியில் உள்ள இப்பகுதி துவங்கி சிவபெருமானின் முதன்மையையும் சித்தாந்தத்தின் மேன்மையையும் எடுத்து இயம்புகின்றார். இதனை, இப்பகுதியின் முதற்பாடலைக் கண்ட உடனேயே விளங்குகின்றது. படைத்த பிரமனையே நோக்கி தோற்றுவித்த பிரமன் காத்த திருமால் அழித்த சிவபிரான் இவருள் இறைவன் யார் என்ற கேள்வியில் முதலிரண்டு பாடல்களும் துவங்குகின்றன.

படைத்தலும் காத்தலும் மாயையின் செயல்கள். முக்தியில் இவையிரண்டும் மாயையின் செயலாக மறைந்து போகின்றன. ஊழிக்காலத்தில் வெண்டலை அணிந்து நின்ற ஒருவன் ஞானாகாசமாய் எங்கும் நீக்கமறப் பரந்து நின்றவன் சிவபெருமானே; அவனே இறைவன் ஆவான். பிறவித் துயரத்தினின்றும் உயிரைக் காக்கப்பிறவிஎடுக்கும் தெய்வம் கடவுள் ஆகாது. ஏனெனில் அதுவும் மாயையின் கட்டுக்குள் அடங்கி விடுவதனால் மாயை தலைதூக்கின் தான் என்னும் அகந்தையால் சிந்தை நைந்து உருகும் முத்தி கிட்டாது. முத்தி இல்லை, கடவுள் இல்லை என்றால் சாருவாக மதமே நல்ல மதமாகி விடும் எனவே, சனகாதி முனிவர்க்கு அருட்குருவாகத் தோன்றிய ஆலமர் கடவுளே கடவுள்.

16. **பன்மாலை :** இப்பகுதியிலும் பத்துப் பாடல்களே அடங்கியுள்ளன. பக்தர்கள் பாமாலை தொடுத்து வணங்குகின்றனர். அவர்க்கு இறைவன் அருள் புரிந்தான் என்று அறிந்து அத்தகு நலமில்லாதான் இறைவர்க்குப் பலபாடல்கள் பாடியதாக அடிகளார் அடக்கத்துடன் கூறிக்கொள்கின்றார். ஆனால், கண்கலங்கத் தூயநெஞ்சத்தோடு தொழுகின்ற உண்மையான அடியவர்களுள் தாமும் ஒருவர், எனவே, இறைவன் அவர்க்கும் அருளல் வேண்டும். இருவினையும் முக்குணமும் நாற்கரணமும் ஐம்புலன் முதலியனவும் பெற்றுள்ள இந்த உடல் குறித்து வருந்துகின்றார். அடிகளாரிடம் என்றும் கலந்துள்ள அகந்தை அவன் அருளால் செயலற்றுவிட்டது. அவர் ஆன்மா நிலையான பேரின்பத்தைப்பெற இறைவனின் திருவடிக் கமலதீட்சையை விழைகின்றது. அடிகளார் தொல்லைக் குடும்பத் துயரைத் தாங்க இயலாது என்று இறைவன்பால் முறையிடுகின்றார். மானிட வாழ்வே கானல் நீர் என்று தாம் உணர்ந்து கொண்டதாகவும் குறிப்பிடுகின்றார்.

இத்தகு தெளிவு பெற்றும் தாம் ஏன் உலகியலில் ஈடுபடுகிறோம் என்று வியக்கின்றார். இதற்குக் காரணம் தம் ஊழ்வினை அல்லது இறைவனின் திருவிளையாடலே என்றும் எண்ணுகின்றார். எங்கும் நிறைந்துள்ள இறைவன் இனிய பொருள்களிலெல்லாம் இனியனாய் உள்ளான். அந்தப் பெரும் இனிமையை அடைய இயலாது தடுக்கின்ற நான் என்ற உணர்வையும் இருவகை வினைகளையும் அழிகின்ற உடலையும் தான் பெற்றது ஏன்? என்று அறியாது கலங்குகின்றார். எவ்வளவோ நூல் கற்றும் இறைவனைக் காண இயலவில்லை என்று ஒப்புக் கொள்கின்றார். உலகியலிலிருந்து தாம் விடுபட விழைகின்றார். வேதக் கல்வியும் இவ்வகையில் சிறிதும் உதவவில்லை என்று ஏங்குகின்றார். மூவரும் ஒருவராகி விளங்குகின்ற இறைவனை நிருவிகர்ப்ப நிட்டையில் காணஅவாவுகின்றார்

அன்றொரு நாள் மௌன குருவாய்த் தோன்றி இன்பத்துள் ஆழ்த்திய நாளை நினைந்து இன்றும் மறவாது இந்த மாயை உலகில் வாழ்ந்து வருவதாக இப்பகுதியை முடிக்கின்றார்.

17. **நினைவொன்று** : 'நினைவொன்று' எனும் இப்பகுதியில் ஒன்பது எண்சீர் விருத்தங்கள் உள்ளன இவற்றின் ஓசை நயமும், பொருள் ஆழமும் மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை 'சிவகாமியின் சரிதையை' நினைவூட்டுகின்றது. இவை அடிகளார் தம் நெஞ்சிற்குக்கூறிய பாங்கில் அமைந்துள மனை, மகவு, சுற்றம் என்னும் உலகப்பற்றை ஒழித்துத் தம்மை மறந்த நிலையை அடிகளார் அவாவுவதாக முதல் பாடலில் மொழிகின்றார். இதுவே பேரின்ப அநுபவத்துக்கு ஒருவரை ஈர்த்துச் செல்லும். இதனைப் பெற்றார் பிறவி அற்றார். இறைவன் அருளிய 'ஒரு மொழியே ஆன்ம முன்னேற்றத்திற்கு வழிகாட்டப் போதியதாகும். தேவையற்ற பிறவற்றையெல்லாம் உலகில் ஒருவர் கற்றுத் தம் அறிவாற்றலைப் பாழாக்க வேண்டுவதில்லை. மௌனகுரு உணர்த்திய ஒரு சொல்லே மன நிறைவு தரவல்லது. ஆசையற்ற நிலையே உலகில் வேண்டியதை வேண்டியாங்கு அளிக்கவல்லது. நிராசை நிலையில் நிற்கின் உலகெலாம் தாமே வந்து பணி செய்யும். எனவே, பொய் உலகப் பொருட் பற்றிலிருந்து விலகி துறவி நெறியிற் செல்வதே நன்று என்று அடிகள் தமக்குத் தாமே அறிவுறுத்திக் கொள்கின்றார். இறைவன் திருவருளாலேயே முடிந்த முடிபாகிய இறை உண்மையை உணர்தல் இயலும்.

18. **பொன்னை மாதரை** : எழுபத்தெட்டு கலிவிருத்தங்களால் ஆகியது இப்பகுதி. அடிகளார் நேரிடையாக இறைவனை வேண்டும் பாங்கில் இப்பாடல்கள் அனைத்தும் அமைந்திருப்பது குறிக்கத் தக்கது. தன் அருளுக்கு உரியாரைப் பிறவியிலேயே இறைவன் தேர்ந்துகொண்டு

செயல்படுத்துகின்றான். என்றாலும் இதனை உரிய மானிடர் முதலில் உணர்ந்துகொள்வதில்லை. அறிந்து கொண்டவர்களும் பிறவிப் பிணிப்புக்களிலிருந்து விடுதலை பெற அவன் அருளை நாடுதலைத் தவிர வேறு செய்யத் தக்கது ஒன்றும் இல்லை.

அடிகளார் தம் இளமை வாழ்வில் பெற்ற சமய அநுபவங்கள் சிலவற்றை இப்பகுதியில் வெளியிடுகின்றார். இதன்கண் அமைந்துள்ள பாடல்கள் அந்தாதித் தொடை நயம் அமையப்பெற்றுள்ளன. 'கண்ணில் கான்பது உன் காட்சி; கையால் தொழில் பண்ணல் பூசை; பகவர்வது மந்திரம்' எனும் முப்பத்து மூன்றாம் பாடல் மிகச் சிறந்த வழிபாட்டை உணர்த்துவதாகும். நாற்பத்தைந்தாம் பாடலில் சிவபிரான் ஒருவனையே தொழும் அடிகளாரது உறுதிப்பாடு புலப்படுகின்றது. ஐம்பத்து எட்டாம் பாடலில் தம் செய்கையெல்லாம் திருவருட் செய்கையே என்று உணர்த்துகின்றார். தாம் இறைக் காட்சி பெற்ற அநுபவத்தை எழுபத்து நான்காம் பாடலில் இயம்புகின்றார்.

19 **ஆரணம் :** வேதம் எனப் பொருள் தரும் 'ஆரணம்' என்ற தலைப்புடைய இப்பகுதியில் பத்துப்பாடல்கள் அடங்கியுள்ளன. வேதம் ஆகமம் ஆகிய இரண்டின் இன்றியமையாமையும் அழகான உருவகத்தால் அடிகளார் முதல் பாடலில் சுட்டிக் காட்டுகின்றார். வேதத்தை வீதியாகவும், ஆகமத்தைக் குதிரையாகவுங் கொண்டு இறைவனை நோக்கி ஆன்மா செய்யும் பயணம் குறிக்கப் பெறுகின்றது. இன்னும் வேதம் இறைவனின் ஞானச் சின்முத்திரை ஏந்திய கையாலும், ஆகமம் அவன் மேனி உருவாலும் புலப்படுவதாகவும் கூறுகின்றார். அத்தகையோனைச் சிந்தை,மொழி செயல்களால் போற்றித் துதிப்போம் என்கின்றார். இறுதிப் பாடலில் மோனமே சிறந்த நெறி என்னும் தம் கொள்கையை, 'முடிவிலா

வீட்டின் வாழ்க்கை வேண்டினர்க்கு மோனம் அல்லால் வழி இல்லை' என்று அறுதியிட்டுக் கூறுகின்றார்.

20 **சொல்லற்கரிய** : இப்பகுதியிலும் பத்துப் பாடல்கள் உள்ளன இறைவனை நோக்கித் தம் சிறுமையை நினைந்து வருந்தி அவன் பெருமையை எண்ணிப் பாராட்டிக் கூறும் முறையீடாக இப்பத்துப் பாடல்களும் அமைந்துள்ளன. எல்லையில்லா ஆற்றல் உள்ளவன் இறைவன்தான் மிக எளியவன் என்றே எமன் வந்து கொண்டு போய் விடுவான். இறைவனின் பெருமை சொல்லற்கு அரியது. அடிகளார் சொல்லும்சிலசொற்களும் அவனுக்கு எட்டவில்லை. எனவே இறைவனே தம்மை ஆட்கொண்டு அருளவேண்டும். அன்றியும் தம் போல் கொடியவரை இறைவன் படைத்துப் பெற்ற பயன்தான் என்ன? அறிந்தவர்க்கு அருகில் உள்ள அவன் தன்னை அறியாதார் கருத்திற்கும் அப்பாற்பட்டுள்ளான், "நான்என்னும் அகந்தையைக் தந்து எனதுஎன்னும் சுமையை வைத்து வினைவழி என்னை ஆட்டிப் படைத்தது போதும்; நினது அருளால் விடுதிலை தருவாயாக." என்கின்றார்.

21. **வம்பேனன்** : பத்துப் பாடல்ளைக் கொண்ட இப்பதிகம் வஞ்ச நெஞ்சங்கொண்ட துட்டனாகிய தம்மையும் ஆட்கொண்ட இறைவனது அருள் திறங் குறித்துத் துவங்குகின்றது. பேரின்ப ஞானத்தைத் தாம் பெற்றுள்ளதால் இறைவனிடமிருந்து பிரிதலைத் தம்மால் தாங்க இயலவில்லை என்கின்றார். பஞ்ச பூதங்களையும், நாததத்துவத்தையும் கடந்து ஒளிப்பிழம்பாய் நிற்கும் இறை இயல்பை மூன்றாம் பாடலில் குறிப்பிடுகின்றார், வஞ்சனை, அழுக்காறு ஆகிய இழிகுணனாகவும், தானம் தவம் யோகத் தன்மை உணரா நெறியற்றவனாகவும் தம்மைத் தாழ்த்திக்கொண்டு இறைவன் அருளை அடுத்து வரும் பாடல்களில் வேண்டுகின்றார்.

22. **சிவன் செயல்** : இப்பதிகத்தில் எல்லாம் சிவன் செயல் என்ற தெளிவும் இல்லை; துன்பந்தரும் ஆசைகளை

விடவும் இல்லை என்று தன்னைத் தானே நொந்து கொள்கின்றார். "உலகமாகிய சேற்றில் ஆழ்ந்து எண்ணற்ற பாவங்களைச் செய்கின்றேன். சத்தற்ற சமயநெறியில் தாழ்ந்து உலகில் தவிக்கின்றேன்" என்று பலவாறு தொழுகின்றார். ஏழாம் பாடலில் "யான் எனது என்பன அற்றவர் பெற்றிடும் பேறாகிய இறைவா! நின் அன்பர்க்குப் பணிசெய்யும் வாய்ப்பு கிட்டுமாயின் இன்னும் வாழ்நாளை விரும்புவேன்; பேரின்ப நிட்டை கிட்டுமாயின் துறவு வேண்டுவேன். மௌனகுருவாய் நீ இன்னும் வந்து அருள்புரிவாயாயின் மீண்டும் பிறவியை வேண்டுவேன்' என்று அன்பர் பணியையும், ஆனந்த நிட்டையையும், மௌன குரு அருளையும் போற்றிப் பாடுகின்றார். இறுதிப் பாடலில் தாம் பெற்ற பேரின்ப அநுபவத்தை, 'யானெனல் காணேன் பூரண நிறைவில்' என்ற தொடரில் அடிகளார் குறித்துள்ளது கருதத் தக்கது.

23. **தன்னையொருவர் :** இறைவனைப் பெறுவதற்கு அவன் அருள் வேண்டும். அவன் அருளை மானிடன் பெறுதல் வேண்டுமெனில் மனைவி மக்கள் என விரியும் இந்த பந்தபாசங்களை மறந்து அவனையே நினைதல் வேண்டும். வெற்றி தோல்வி, வளம் வறுமை, வரவு, செலவு என்ற இருமையிலிருந்து விடுதலை பெறுதல் வேண்டும். அவனை நினைத்து நினைத்து நெக்குருக வேண்டும். அறிவுக்கு அறிவாய் எங்கும் இறைவன் செறிந்துள்ளான் என்ற தெளிவு வேண்டும். யான் எனது முதலிய தன்மை முன்னிலை யாகிய இடங்களைல்லாம் பொய் என்று உணர்தல் வேண்டும். அருள் பெற்றாரை அறிந்து கொள்ளலாம். அழுக்காறு, அவா, பொய் அவர்பால் நெருங்காது; உண்மை நெறி துலங்கும்; அறிவு விளங்கும்; மனத்துயர் ஒழியும். அருளைப் பெறுதற்குத் தடையாக உள்ள அகந்தையை அழிக்க ஒரே வழி ஊரில் ஒருநாள் கையுணவு ஏற்று "எதுவும் எனக்கு உரிமையில்லை என்று வாழக் கற்றுக்கொள்வதே ஆகும். எனக்கென எதுவும்

இன்றி அனைத்தும் நினக்கென நான் இழக்கும்போதே நின் அருளைப் பெறுகின்றேன்'' என்கின்றார்.

24. **ஆசையெனும்:** ஆசையெனும் இப்பகுதியில் விருத்தம் துறை முதலிய பல்வேறு பாவினங்களில் அமைந்த நாற்பது பாடல்கள் உள்ளன. பாடல் வடிவங்களில் மாற்றம் உள்ளது போல பாடல்பொருளும் ஆசை, நிட்டை, இல்லறம் துறவறம், பரம், வீடு எனச் சமயத் தொடர்பான பலபொருள் பற்றி வருகின்றன. இவற்றையெல்லாம் நோக்கும்போது அவ்வப்போது கால இடைவிட்டுப் பாடிய பாடல்கள் சில இங்ஙனம் தொகுக்கப்பட்டிருக்கக்கூடும். பல இடங்களில் அந்தாதித் தொடையில் பாடல் பகுதிகள் அமைந்திருக்க இங்கு அவ்வாறு இல்லாமையும் அக்கருத்தை வலியுறுத்தும். இப்பகுதியில் உள்ள இருபத்தைந்து இப்பத்தாறாம் பாடல்களில் நினைவு நிலை (சாக்கிரம்) முதலிய ஐந்து அவத்தைகளும் அந்த அந்த அவத்தைகளில் தோன்றும் தத்துவங்களும் குறிக்கப் பெற்றுள்ளன. இறைவனின் அருட்செயலே அனைத்துக்கும் காரணம் என்ற தெளிவிருந்தால் இல்லறம் துறவறம் இரண்டும் மேலானவழிகளே என்கிறார் அடிகளார்.

25. **எனக்கெனச்செயல்** இருபத்தெட்டு கலிநிலைத் துறையில் அமைந்துள்ள இப்பகுதியின் முதல் பாடல் 'எனக்கெனச் செயல் வேறிலை' எனத் துவங்குகிறது. அது இப்பகுதிவரிசையமைப்பில் முதல் பாடலாய் அமைந்திருப்ப தோடு கருத்தில் முதன்மையான பாடலாகவும் திகழ்கிறது முழுதும் ஆன்மா தன்னை ஆண்டவனுக்கு அடைக்கலம் ஆக்கிக்கொள்ளும் திறம் தன்மையிடமாக வைத்துப் பேசப்பெறுகின்றது. "எனக்குஎன்று செயல்ஒன்றும் இல்லை; எல்லாம் உன்னுடையனவே; உடல், பொருள், உயிர் அனைத்தும் இதோ உன்பால் ஒப்படைத்துவிட்டேன். மனத்துள் உறைந்துள்ள அழுக்காறு அவா முதலிய அழுக்கு களை அகற்று. பின் நீ எப்படி நினைக்கிறாயோ அப்படி

உருவாக்கு என்பதே அந்தப் பாடலின் உட்கிடக்கை. வழிபாட்டுக்கு உரிய சிறந்த பாடல் இது. மாணிக்கவாசகப் பெருமானின் செல்வாக்கு இந்தப் பகுதியில் பெரிதும் விளங்குவதைக் காணலாம்.

26. **மண்டலத்தின்** : அறுசீர் ஆசிரிய விருத்தத்தில் அமைந்த இப்பகுதியில் உள்ள பதினொரு பாடல்களில் முதல் ஏழும் கடவுள் தத்துவத்தையும் இயல்பையும் எடுத்துரைக்கின்றன. இறுதி நான்கும் மனத்தத்துவத்தை எடுத்துரைக்கின்றன. மனமாயைப் பற்றி அடிகளார் கூறும் இந்த நான்கு பாடல்களும் அதுபற்றிய பிற பாடல்களி லிருந்து மாறுபட்டுள்ளமை காணத்தக்கது. மற்ற இடங்களிலெல்லாம் மனத்தைத் தூற்றிய அடிகளார் இங்கு அதனைப் போற்றி ''ஏ மனமே! எல்லாம் வல்லமனமே உன்னைச் சத்தென்றும் வாழ்த்துவேன். நீ எங்கிருந்து தோன்றினாயோ அங்கேயே போய் ஒடுங்குவாயாக'... எனப் புகழ்ந்து. வழியனுப்பும் போக்கு இலக்கிய நயம் பயக்கிறது,

27. **பாயப்புலி** : ஐம்பத்தொன்பது பாடல்கள் இந்தப் பகுதியில் உள்ளன. எல்லாம் கட்டளைக் கலித்துறைகளே. கந்தர் அலங்காரத்தின் செல்வாக்குகளைப் பெரிதும் இந்தப் பகுதியில் காணலாம். வேங்கை ஒன்றைப் பிடிக்க வேடன் மான் குட்டி ஒன்றை பார்வைமானாக அதன்முன் கட்டி வைத்திருப்பது போல உலகப் பொருள்களாகிய படைக் கருவிகள் பலவற்றின் முன் தம்மைத் தனியாக நிற்க வைத்துள்ளதை எண்ணி இறைவனிடம் முறையிடுகின்றார். உயிர் பற்பல படிநிலைகளில் அஞ்சத்தக்க சூழ்நிலையில் உள்ள இந்தக் கருத்து இந்தப் பகுதி முழுதும் பல்வேறு வகையில் பரந்து காணப்பெறுகின்றது. இந்த பகுதியில் மீண்டும் மீண்டும் 'தந்தை' என்று இறைவனை இவர் அழைப்பது 'விதைவிதைத்தான் காப்பான்' என்ற இவர் நம்பிக்கையைக் காட்டுகின்றது. அப்படியே இறைவன்

திருவடித் தாமரையும் பல இடங்களில் குறிக்கப் பெறுகின்றன. அச்சத்திற்குக் காரணமான உலக ஆசைகளை எல்லாம் அவன் அடியைப் பற்றி அறுத்துக்கொள்ளலாம் என்றும். அவனடித் தாமரைகளைத் தன் தலையில் சூட்டிக் கொள்வதால் பேரின்ப வீட்டை அடையலாம் என்றும் அடிகளார் குறிப்பிட்டு வேண்டுகிறார். பல பாடல்களில் சிவபெருமானின் வெட்டவெளித் திருக்கூத்தை நினைவுகூர்கின்றார். குரங்குபோல் குரங்குமனச் சேட்டைகளை மோனநெறியாலேயே வெல்லமுடியும் என்றும் அத்தகு மோன நெறியை மனம், சொல், செயல் ஆகிய மூன்று நெறியிலும் பின்பற்றி சுத்தமோன நிலை அடைந்ததாகக் குறிப்பிடுகின்றார். மோன நிலை குறித்து பல பாடல்கள் இங்கு உள்ளன.

28. **உடல் பொய்யுறவு** : 'உடல் பொய்யுறவு' எனத் துவங்கும் இந்தப் பகுதி எண்பத்து மூன்று நேரிசை வெண்பாக்களால் ஆகியுள்ளது. இதில் தாம் அறிந்ததெல்லாம் மோனகுருவிடமிருந்தே என்று குறிப்பிடுகின்றார். 'உடல், உலகு எல்லாம் உண்மையல்ல. இவற்றோடு உள்ள தொடர்பை ஒவ்வொருவரும் விலக்கிக்கொள்ள வேண்டும். செயலிலும் சிந்தையிலும் மோனம்பயில்வாரோடு கூடிப் பழக வேண்டும். விவாதத்தால் பயன் இல்லை, பக்தியால் பாவம் போம். யான் எனும் அகந்தையும் எனது எனும் ஆசையும் எவர் நெஞ்சுக்கும் நிறைவு தரா.

29. **ஏசற்ற அந்நிலை** : பத்துக் கொச்சகக் கலிப்பாவால் ஆகிய இந்தப் பகுதி முழுதும் அடிகளார் தம் நெஞ்சுக்கு அறிவுறுத்தும் பான்மையில் செல்லுகிறது. உலகச் சேற்றில் உழலாமல், மாயைச் செயல்களிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டு இறைவன் திருவடித் தாமரையை அடைய உதவுமாறு வேண்டுகின்றார்.

30. **காடும் கரையும்** : இதன்கண் மூன்றே பாடல்கள்தாம் உள்ளன. ஆனால் இவை மூன்றும் அடிகளாரின் அருள்

உள்ளத்தைப் புலப்படுத்துவன, எல்லோரும் இன்புற்றிருக்க விழையும் அடிகளாரின் ஆர்வத்தைக் காட்டுவன.

உயிர் எத்தனையோ உடல் எடுத்து எடுத்து இளைத்துள்ளது. அந்த உடல்களுள் இந்த மானிட உடல் உயிர் வளர்ச்சியிலேயே மிகச் சிறந்த பருவமாகும். இந்தப் பருவத்தைப் பெற்றதன் பயன் ஒன்று உண்டு. அஃது அவன் அருளைப் பெறுவதற்கான அன்புநிலையைஅடைதலே ஆகும். இந்தக் கருத்தை முதல் பாடலில் உணர்த்தி அடுத்த பாடலில் சமயங்களில் சிறந்தது சைவ சமயமே. இதனை தில்லை வெளியும் தெய்வ சபையும் காட்டும் என்று குறித்து மூன்றாம் பாடலில் 'பேரின்ப வெள்ளம் ஒன்று திரண்டு கிடக்கிறது. உடனே ஓடிவாருங்கள் உண்போம். காலம் தாழ்த்தினால் இந்த உடம்பு போய்விடும்'' என்று அழைகின்றார் 'சேரவாரும் உகத்தீரே' என்ற அடிகளாரின் குரல் அவரது அருள் நெஞ்சைப் புலப்படுத்துகின்றது.

31. **எடுத்த தேகம்** : சிரகிரித் தாயுமானப்பெருமானை விளித்து அமைந்துள்ள இரு கட்டளைக் கலிப்பாக்களைக் கொண்டது இந்தப் பகுதி.

மோனநெறியைக் காட்டியபோதே உடல் பொருள் ஆவி அனைத்தும் ஒப்படைத்துவிட்ட அடிகளார் பின்னும் மாயாசகத்தில்உழலநேர்ந்தமையைநினைத்துஇறைவனிடம் முறையிடுவனவாக இந்தப் பாடல் அமைந்துள்ளது.

32. **முகமெலாம்** : கலிநிலைத்துறையில் உள்ள இந்த ஒருபாடலில் அடியவர் பெருமையையும் தன் சிறுமையையும் அடிகளார் சுட்டிக் காட்டி வருந்துகிறார்.

33. **திட முறவே** : இறைவன்அருள் ஒளியின் முன் உயிர் தான்அறியாதபல குறைகள் தன்பால் அமைந்திருத் தலைத் தெளிவாகக் காண்கின்றது. அந்தக் குறைகளை எல்லாம் அடிகளார் இந்தப் பகுதியில் எடுத்து ஆண்டவனிடம் முறையிட்டு அவன் அருளை வேண்டுகின்றார்.

இதன்கண் அமைந்துள்ள பாடல்கள் பத்தும் கொச்சகக் கலிப்பாக்களாய்அமைந்திருப்பினும் இறுதி இரண்டடிகளை மட்டும் பிரித்து நோக்கின் அவையெல்லாம் பராபரக் கண்ணிப் போக்கில் அமைந்துள்ளதைக் காணலாம்.

34. **தன்னை :** தன்னையறிந்து தலைவன்மேல் பற்றுவைக்கத் துணைசெய்யும் அவன் அருளால் அவனே பொருளென வாழாமல் மண்ணுலகப்பொருள்பால் தம்மை ஈர்க்கும் தம் நெஞ்சை அடிகளார் கடிந்துகொள்வதாக அமைத்து இன்னிசை வெண்பா ஒன்றே ஒன்று கொண்டது இந்தப் பகுதி.

35. **ஆக்குவை :** ஆக்கல், காத்தல், ஒடுக்கல் ஆகிய எல்லாம் வல்லவன் சச்சிதானந்த சிவம் என்று இந்த அறுசீர் ஆசிரியப்பா ஒன்றின்மூலம் அடிகளார் குறிப்பிடுகிறார் இந்தப் பகுதியில்.

36. **கற்புறுசிந்தை:** 'பூரணானந்த வாழ்வே' என இறும் பத்து அறுசீர் விருத்தங்களால் ஆய இந்தப் பகுதி முதல் பாடலின் முதல் தொடரைத் தலைப்பாகக் கொண்டுள்ளது. இதில் கற்புறு மனைவியைப்போல் இறைவனையே தலைவனாகக் கொண்டு, பெண்ணின் பேரின்பம் எனும் உலோகாயதத்திலிருந்து விடுபட்டு இறை அருளைப் பெற்று உய்யவேண்டுவதன் இன்றியமையாமையை அடிக ளார் வற்புறுத்துகின்றார்.

37. **மலைவளர்காதலி:** இந்தப் பகுதியில் எட்டே பாடல் கள் அமைந்துள்ளன. எல்லாம் பன்னிருசீர் விருத்தங்கள்; பாடுதற்கு இனிய ஓசை நயம் நிரம்பியன. இராமலிங்க சுவாமிகள் முதல் கவிஞர் கண்ணதாசன் வரை இந்தப்

பாடல்களின் இனிய இசைக்கு ஆளாகி உள்ள திறத்தை அவரவர் பாடல் சில காட்டும். இப்பாடல்களின் இறுதியில் தவறாது வரும் தொடரே இங்குத் தலைப்பாகக் கொடுக்கப் பட்டுள்ளது.

மலைவளர் காதலி என்ற பெயர் இராமேசுவரத்தில் குடிகொண்டுள்ள பர்வதவர்த்தனியைக் குறிக்கும். அவள் திருவடிகளில் ஈடுபாடுடையோர் பதி, நிதி, புத்திரர், மித்திரர் முதலிய முப்பத்திரண்டு பேறுகளும் பெறுவர். அரியவையர் மையலுக்கு அடிமையாகாமல் அடியவர் அன்புக்கு ஆளாகும் திறத்தை அவள்அருள்வாளாக.வேதாக உண்மை காணும் ஞானக் கண் இல்லார், அம்மையின் பெருமையைக் கேளாச் செவிடர், வெறும் வீறுவாதம் பேசும் வாய்வாதர்களால் கண்டுகொள்ள முடியாத அம்மை தமக்கு அருளிய அன்பை மூன்றாம் பாடலில் எடுத்துரைக் கின்றார். சாண் கும்பியின் பொருட்டு வாழ்நாளெல்லாம் பாழ்நாளாகப் போகின்றன; அம்மையின் அடியவர்க்கு அடியனாய்த் தொண்டு செய்வது என்று? அகிலாண்ட கோடியெல்லாம் படைத்த கன்னியைப் பூரணிபுராணி எனப் பலவாறு புகழும் அடியவரின் பெயரை உச்சரிக்கக்கூடத் தமக்குத் தகுதியில்லைஎனத்தம்மைத்தாம்தாழ்த்திக்கொள் கிறார். சரியை, கிரியை முதலிய நெறியிலும் தாம் நிற்க வில்லை. காமக்குரோதம் முதலிய பாதகங்களிலிருந்தும் விலகவில்லை. அப்படிப்பட்டவனை அம்மையே அவள் அருளால்ஆட்கொள்வது தவிரவேறு வழியில்லை. வினைகளுக்கு இடையே அகப்பட்டு மெலிந்து கண்ணிழந்த ஊர்க் கிழக்காளை போல் அலையாது தம்மைக் காத்தருள வேண்டுமெனும் பொருளுடைய, 'தூளேறு தாசுபோல்' என்ற பாடல் இனிய இசையும், எழிலார்ந்த கற்பனையும் கொண்டு இலங்கச் சிறந்த பாடலாகும். இறுதிப் பாடலில் அடிகளார் இந்திரியம் முதலிய பேய்கள் பலவற்றைக் குறிப்பிடுகிறார்.

38. **அகிலாண்ட நாயகி** : பதினான்கு சீர் ஆசிரிய (சந்த) விருந்தம் ஒன்றே கொண்ட இப்பகுதியில் தூற்றையும் மனத்தையும் கட்டி ராசயோக சித்தி பெற்றுத் தாம் நீண்டநாள் வாழ விரும்புவதை அடிகளார் இதில் குறிப்பிடுகின்றார். திருக்காவைத் திருத்தலத்தில் எழுந்தருளியருக்கும் அகிலாண்ட நாயகி அடியவர்க்கு சுகயோகம் மதியூகம், அட்டமாசித்தி அனைத்தும் அளிப்பள் என்றும் போற்றுகிறார்.

39. **பெரிய நாயகி** : கபிலை நகரில் குடிகொண்டிருக்கும் பெரிய நாயகி அம்மையைப் பாடும் பாடல் ஒன்றில் அடிகளார் அருள் சேற்றில் மோனநாற்றைப் பதித்து புலன்களாகிய கால்நடைகளும் நமனாகிய களைகளும் பயிரைப் பாழாக்காமல் முன்னிருந்து காத்துச் சிவபோக விளைவில் ஒரு பகுதியைத் தமக்குத் தந்தருள வேண்டுமென விழையும் அடிகளார் கருத்து அழகான உருவக நலம் பெற்றுத் திகழ்கிறது அருள்தாய்த் துணையால் அப்பனை அடையும் நெறியும் புலப்படுகிறது. சிவயோகத்திற்குக் காரணமான மோனமும் அது வேரூன்றத் தேவையான அருளும் அதற்குத் தடையான புலன்களின் அலைவும் குறிக்கப்பட்டுள்ளன.

40. **தந்தை தாய்** : ஏழு கண்ணிகளைக் கொண்டமைந்த இந்தப் பகுதி "எல்லாம் வல்லாய்! இந்த உலக மாயை வியத்தக்கது. உன்னால் தெளிந்தேன். உன் கருணையே பிறவிக் கடலைக் கடக்கும் புணை என உன்னையே பற்றினேன். காத்தருள்" என்ற கருத்தில் அமைகின்றது.

41. **பெற்றவட்கே** : பதினொரு கண்ணிகள் அமைந்த இந்தப் பகுதி "இரண்டுகால் மாடாய்த் தின்று திரியாமல் உன் திருவடிப் பேற்றில் ஆசைகொண்டேன். வேறு வேண்டா. அருள் செய்" என்ற கருத்தில் அமைகின்றது.

42. **கல்லாலின் ;** முப்பது கண்ணிகளால் தொடுக்கப் பெற்றுள்ளது. இப்பகுதி அந்தாதித் தொடை நயம் கொண்டது. "கல்லாலின்கீழ் சனகாதிமுனிவர்நால்வர்க்கும் ஞானம் வழங்கிய தெக்கணா மூர்த்தித் தேவே! நீ எல்லாச் சமயத்திற்கும் முடிந்த முழுப்பொருள். உன்னை உன் அருள்கொண்டே அறிதல் கூடும். மூவர் தமிழ் கேட்ட உன் செவிக்கு இந்த மூடன் தமிழ் ஏற்குமோ? ஏற்றருள்க. என்னோடு இணைந்தருள்க." என்ற கருத்தில் அமைந் துள்ளது இந்தப் பகுதியில்தான் 'வேறுபடும் சமயமெலாம்' (630). என்றும் சிறந்தசமரசப்பாடல் இடம் பெற் றுள்ளது.

43. **பராபரக்கண்ணி** :வாழ்நாளில் தாம் கற்றுக்கேட்டு உற்று உணர்ந்தனவற்றையெல்லாம் இந்தப் பகுதியில் அடிகளார் இனிய எளிய கண்ணிகளால் பாடியருள்கிறார். முன்னூற்று எண்பத் தொன்பது "பராபரமே" என முடியும் கண்ணிகள் உள்ளன.

ஓடும் இருநிதியும் ஒன்றாகக் கண்டவர்கள்
நாடும் பொருளான நட்பே பராபரமே. (651)

கூர்த்தஅறி வத்தனையும்கொள்ளைகொடுத் துன்னருளைப்
பார்த்தவன்நான் என்னைமுகம் பாராய் பராபரமே (666)

எங்கெங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கங்கே நிற்பதுநீ அன்றோ பராபரமே.

செப்புவதெல் லாம்செபம்தான் சிந்திப்ப தெல்லாம்நின்
தப்பில் தியானமென ஓர்ந்தேன்; பராபரமே.

கங்குல்பகல் அற்றதிருக் காட்சியர்கள் கண்டவழி
எங்கும் ஒருவழியே எந்தாய்! பராபரமே

அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே. (710)

சிறந்த வாழ்வியல் உண்மைகொண்ட 'சீரிய' முதலான கண்ணிகள் இந்தப் பகுதியில்தான் இடம்பெற்றுள்ளன.

44. **பைங்கிளிக் கண்ணி** : நாயகி-நாயக பாவனையில் அமைந்த கண்ணி ஐம்பத்தெட்டு கொண்டது இந்தப் பகுதி.

அகம்மேவும் அண்ணலுக்கென் அல்லலெல்லாஞ் சொல்லிச்
சுகமான நீபோய் சுகங்கொடுவா பைங்கிளியே...! (1027.)

எனக் கிளியைத் தன் நாயகனாகிய சிவபெருமானிடத்துத் தூது அனுப்புவதாக அமைந்துள்ளது இந்தப் பகுதி. இங்குத் தாயமான நாயகியின்.

எந்த மடலூடும் எழுதா இறைவடியைச்
சிந்தைமட லாஎழுதிச் சேர்ப்பனோ? பைங்கிளியே (1035)

"ஊரும் இலார் பேரும் இலார் உற்றார்பெற் றாருடனே
யாரும்இலார் என்னை அறிவாரோ! பைங்கிளியே" (1032)

நெஞ்சகத்தில் வாழ்வார்; நினைக்கின்வே றென்றணையார்
வஞ்சகத்தா ரல்லரவர் மார்க்கமென்னோ பைங்கிளியே
(1059)

மண்ணுறங்கும் விண்ணுறங்கும் மற்றுளஎ லாம்உறங்கும்
கண்ணுறங்கேன் எம்மிறைவர் காதலால் பைங்கிளியே (41)

ஆகத்தை நீக்குமுன்னே ஆவித் துணைவனா நான்
தாகத்தின் வண்ணம் தழுவுவனோ பைங்கிளியே! (1080)

காதல் உள்ளத்துக்கனிவும் கவலையும் சொல் ஓவியமாய்த் தீட்டப்பட்டுள்ளன.

45. **எந்நாட்கண்ணி** : தெய்வ வணக்கம், குருமாரின் வணக்கம், அடியார் வணக்கம், யாக்கையைப் பழித்தல், மாதரைப் பழித்தல், தத்துவமுறைமை, தன்னுண்மை, அருளியல்பு, பொருளியல்பு, ஆனந்த இயல்பு, அன்பு

நிலைமை, அன்பர்நெறி, அறிஞர் உரை, நிற்கும் நிலை, நிலைபிரிந்தோர் கூடுதற்கு உபாயம் எனப் பதினைந்து பகுதிகளில் 'எந்நாளோ!' என இறும் இருநூற்றுப் பத்துக் கண்ணிகளைக் கொண்டமைந்துள்ள இது ஆர்வ அடிப்படையில் உரைத்த அநுபவங்களை எல்லாம் அறிவு அடிப்படையில் தத்துவங்களாக்கித் தரப்பெறுகிறது இப்பகுதியில்.

'எந்நாட் கண்ணியை' அடுத்து 'முடிப்புகு ஏற்ப' காண்பேனோவென் கண்ணி (37); 'ஆகாதோவென் கண்ணி' (21); 'இல்லையோவென் கண்ணி' (6); 'வேண்டாவோவென் கண்ணி' (6); 'நல்லறிவேயென் கண்ணி' (4); 'பலவகைக் கண்ணி' (24)—ஆக தொண்ணூற்றெட்டுக் கண்ணிகள் உள. இவை சமயம், தத்துவம், வழிபாடு எனும் பல்பொருள் பற்றியன,

46. **நின்றநிலை:** 'கற்றது கேட்டது கடம்படாமென்று விவாதிப்பதற்கு அல்ல; இன்ப நிட்டையில் நிற்கவே'—என்ற பொருளில் அமைந்த மூன்று கண்ணிகளைக் கொண்டது இந்தப் பகுதி.

47, **பாடுகின்ற பனுவல்:** ஐந்து விருத்தங்களால் ஆகிய இப்பகுதித் தன்னைத் தானுணர இறை செய்த அருள் பற்றி அமைகிறது.

48. **ஆனந்தக் களிப்பு :** 'சங்கர சங்கர—சம்பு' எனத் தொடங்கும் இந்தப் பகுதி அறிஞர்களையும், கவிஞர்களையும் ஒரு சேரக் கவர்ந்த பகுதியாகும். இந்தப் பண்டாரப் பாட்டுக்கு ஒலிநயம் மஸ்தான் சாகிபு, சுப்பரமணிய பாரதியார், சுத்தானந்த பாரதியார் முதலியோரையெல்லாம் மயக்கித்தன்வயப் படுத்தியுள்ளது. சிவபெருமானின் ஏகாந்த சேவையின் போது திருச்சிற்றம்பலத்தில் தாயுமானவர் ஆனந்தக் களிப்பு பாடப் பெறுகிறது.

பாராதி பூதம் நீ அல்லை—உன்னிப்
பார்இந் திரியம் கரணாம் நீஅல்லை
ஆராய் உணர்வுநீ என்றான்—ஐயன்
அன்பால் உதைத்தசொல் ஆனந்தம் தோழி

(1429)

அருளால் எவையும் பார்என்றான்;—அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்;
இருளான பொருள்கண்ட தல்லால்—கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி? தோழி

(பா—1433)

முதலான சிறந்த கண்ணிபல இந்தக் களிப்பில் இடம் பெற்றுள்ளன,

49. **அகவல் :** தாயுமானவர் பாடல்களின் இறுதியாக வண்ணத்திற்கு முன் அமைந்துள்ள இந்த அகவல் அடிகளார் ஆண்டவனது அருள் திறம் வியந்தும், அவன் தனக்கு அருளியவற்றை நினைத்தும் பாடும் பகுதியாக அமைந்துள்ளது.

50. **வண்ணம் :**

தனதந் தனன தந்த தனதந் தனனதந்த
தனதந் தனனதந்த—தன தனதான
தான தனதன தான தனனா....

என்னும் சந்தத்தில் அமைந்த எட்டுப் பாடல்களைக் கொண்டது இந்தப் பகுதி. மானுடத் தோற்றம், வளர்ச்சி, மறைவு—முதலான மனமாசு இவற்றிற்கிடையே அவன் காம, குரோத வயப்பட்டு அவன் படும் தொல்லைகளை எடுத்துரைப்பதாக உள்ளது.

# 6. அடிகளாரும் தமிழ் பக்திப் பாடல்களும்

தமிழ் பக்தி மொழி என்பது மிகப் பொருத்தமானதாகும். பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை தோன்றிய தமிழ் நூல்களையெல்லாம் தொகுத்துப் பார்த்தால் அறிவியல் நூல்களைவிட இலக்கிய நூல்களே மிகுந்திருக்கக் காணலாம். இலக்கிய நூல்களுள்ளும் சமயத்தைப் பொருளாகக் கொண்டனவே பேரளவாகும். சங்க இலக்கியத்திலும் பரிபாடலில்தான் பக்தி உணர்ச்சி இடம் பெற்றிருப்பதைக் காண முடிகிறது. தத்துவ விசாரணையிலேயே ஈடுபாடு கொண்டிருந்த சமண பௌத்தருங் கூடத் தமிழிலே இலக்கியம் செய்ய எண்ணிய போது அருக தேவனையும் புத்த பிரானையும் பற்றிய எண்ணற்ற பக்திப் பாடல்கள் பாடலாயினர். பிற்காலத்தே வந்து தமிழகத்தில் ஊன்றிய இஸ்லாமிய கிறித்தவச் சமயச் சான்றோர்களும் தமிழ் மரபிற்கு ஆளாகிப் பக்தி இசைப் பாடல்கள் பல பாடியுள்ளனர். பன்னிரு ஆழ்வார்களும் நாயன்மார் பலரும் வைணவ சைவ பக்தி இலக்கிய வெள்ளத்தால் தமிழகத்தைக் குளிர்விக்கத் துவங்கிய காலந்தொட்டு இந்நாள் வரை பக்திப் பாடல்கள் தமிழ் இலக்கியத்தில் தலையாய இடத்தைப் பெற்றுள்ளன. தேசிய கவி பாரதியும் தேசியத்தைத் தெய்வீகமாகப் பாடிய போக்கிற்குத் தமிழ் மொழியில் உள்ள பக்தி

இலக்கியச் செல்வாக்கே எனலாம். சங்ககாலக் காதல் உணர்ச்சிகள், கற்பனைகள் இடைக்காலத்தில் எவ்வாறு பக்தியாக முகிழ்த்ததோ அவ்வாறே பக்தி உணர்வு தேசியமாகவும், தமிழியமாகவும் இக்காலத்தே மலர்ந்தது.

இந்த நீண்ட நெடும் பக்தி இலக்கிய வரலாற்றில் தாயுமான அடிகளார்க்குச் சிறந்த இடமொன்று உண்டு. மாணிக்கவாசகருக்குப் பின் தத்துவச் செறிவோடு கூடிய நெஞ்சுருக்கும் பக்திப் பாடல்களைப் பாடியவர் தாயுமான அடிகளே ஆவார். ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய பழம் பாவகைகளிலும் நாவுக்கரசரின் திருக்குறுந்தொகை வடிவிலும் மாணிக்கவாசகரது ஆசிரிய விருத்தங்களிலும் இவர் கொண்ட ஈடுபாடு இவர் பாடல் வடிவுகள் பலவற்றிற்குக் காரணமாக அமைந்துள்ளன. இவர் போற்றிப் பாராட்டும் பட்டினத்தார் பத்திரகிரியார் கண்ணிகள் தாயுமானவர் பாடலின் பாமர இலக்கியமாகிய பராபரக்கண்ணி முதலியவற்றிற்கு வழிகாட்டி எனலாம். ஆங்கொன்றும் ஈங்கொன்றும் அருணகிரியார் சந்தப் போக்கில் காணலாம் என்றாலும், பன்னிருசீர் பதினான்குசீர் கொண்ட பக்தி இசைப்பாடல் பல இவர் கை வண்ணத்தன; கலை வண்ணம் பெற்றுத் திகழ்கின்றன. தேவை நகர் தேவி மலை வளர் காதல் குறித்து இவர் பாடிய எட்டுப்பாடல்களும் இராமலிங்க அடிகளார் தொட்டுக் கவிஞர் கண்ணதாசன் வரை கற்று உருகுமாறு பக்திச்சுவையும் இசைநயமும் கொண்டு விளங்குகின்றன 'சங்கர சங்கர' என்ற நாமத்தைத் தம்பூர் மீட்டிக்கொண்டு திரியும் சைவச்சந்நியாசிகளின் நாவில் இப்பாடல்கள் தாண்டவமாடுவதைக் கேட்கலாம். சைவசமய சாத்திர நுட்பங்களும் உபநிடத உண்மைகளும் ஆகம நெறிகளும் ஆங்காங்கே செறிந்திருந்தாலும் அடிகளாரின் கவித்திறத்தால் கற்பனை வளத்தால் அவையும் கலைநலம் பெற்றுத் திகழ்கின்றன.

யோகமும் ஞானமும் இவர் பாடல்களில் போட்டியிட்டுக் கொண்டு முன்னுக்குவரினும் பக்தி உணர்ச்சி பின்னணியாக இருந்து அவை இரண்டையும் சந்து செய்வித்து மேலோங்கி விளங்குவதைக் காணலாம். உபநிடத உண்மைகளை உரைக்க வடசொற்களைப் பெரிதும் கையாண்டாலும் தமிழ் ஒலிப்பிற்கும் பா ஓசைக்கும் ஒத்துப்போகுமாறு அவற்றை அடிகளார் உருவாக்கி உள்ளார். 'அத்துவிதவத்துவை நித்தியமாய் நிர்மலமாய்' என்னும் ஒருசில பாடல்கள் தமிழ்ச்செவிக்கு இனிமையாய் இல்லாமற்போனாலும், தமிழ்நெஞ்சிற்கு விளங்காமல் போனாலும், பலபாடல்கள் 'ஆழாழி கரையின்றி நிற்க இலையோ', 'ஆசைக்கோர் அளவில்லை' முதலிய பல பாடல்கள் தமிழ்ச்செவிக்கும் நெஞ்சிற்கும் இனிமையும் எழுச்சியும் தரவல்லனவாகும். தமிழில் மட்டுமின்றி வடமொழியிலும் அடிகளார் வல்லவர். ஆதலால் சிலபாடல்கள் அவ்வாறு அமைந்தன எனலாம்.

இறையன்பில் திளைத்தும் மெய்யறிவில் தெளிந்த அடிகளார் வடமொழி தென்மொழி என மொழிச்சிக்கலில் அகப்படாது பொதுநிலையிலேயே பாடிச் செல்கிறார். இறையன்புமிக்கு உள்ளபாடல்களில் எல்லாம் செந்தமிழைக் காணலாம்; செந்தமிழைக் கேட்கலாம்; செந்தமிழ் இசையைக் கேட்கலாம். மெய்யறிவினைப் புலப்படுத்தும் இடத்திலெல்லாம் வடசொற்கள் விரவி வரக்காணலாம்.

தமிழ் இலக்கியச்சான்றோருள் தம் பாட்டுத்திறத்தால் தாயுமான அடிகளார் நடுநாயகமாகத் திகழ்கிறார். தனக்கு முன்வாழ்ந்த சான்றோர்கள் கவிதையும் கருத்தும் இவரைப் பெரிதும் ஆட்கொண்டுள்ளவற்றை இவர் பாடலில் காணலாம். அவ்வாறே அடிகளாருக்குப் பின் அவர் கவிதைத் தாக்கத்துக்கு ஆட்பட்ட கவிஞர்களையும் எழுத்தாளர் களையும் நாம் காணலாம். இந்தப் பகுதியில் தாயுமான வர்க்குமுன் வாழ்ந்த புலமைச் சான்றோர் பாடல்கள் நேரிடையாகவும் மறைமுகமாகவும் அடிகளார் பாடலில்

எவ்வெவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பது குறித்தும், அடிகளார் செல்வாக்குப் பிற்கால இலக்கியச் சான்றோர் எழுத்தில் எவ்வெவ்வாறு இடம் பெற்றுள்ளது என்பது குறித்தும் ஆராயலாம். அவ்வாறு ஆராயும்போது, முன்னோர் பாடல் தொடர்களையும் சொற்களையும் அப்படியே கையாண்ட இடங்களும் அவர்தம் கருத்துக் களை மட்டும் எடுத்துக்கொண்ட இடங்களும் இலைமறை காய்போல் அன்னார்தம் செல்வாக்கு இருந்திருக்கக் கூடும் என்று நம்பத்தக்க இடங்களும் முறையே காணலாம். சங்க இலக்கியம் துவங்கி அருணகிரியார் காலம் வரை திருமூலர், திருவள்ளுவர் முதற்கொண்டு பலருடைய தம் செல்வாக்கை இங்குக் குறிப்பிடலாம் அகப்பொருள் இலக்கியக்காதல் மனம், களவுத்தேன் ஆகியன பிற்கால பக்தி இலக்கியங்களில் கமழ்வதைக் காணலாம். சிறப்பாக, நாயன்மார், ஆழ்வார் முதலிய பக்திக் கவிஞர் பாடல்களில் அகத்திணைக் கருத்துகளும் துறைகளும் சிற்சில மாறுதல்களோடு கடவுட்காதலாகக் காட்டப் பெற்றுள்ளன. அடிகளாரது ஆனந்தக்களிப்பிலும் பைங்கிளிக் கண்ணியிலும் இதற்குக் காட்டுகள் பல உள்ளன.

பைங்கிளிக் கண்ணியின் பாடல் ஒன்று, காமத்துப் பாலில் உள்ள வள்ளுவர் குறளை நம் நினைவிற்குக் கொண்டு வருகிறது. 'பிணி ஒவ்வொன்றிற்கும் மருந்து வேறு வேறு உள்ளது; ஆனால் பெண்ணொருத்தியின் காதலால் பெற்ற துன்பத்தை நீக்கும் மருந்து அவளாகவே இருக்கின்றாள்.[1] இந்தக் கருத்தைச் சிறிது மாற்றிப் பின் வருமாறு உரைக்கிறார்; 'பைங்கிளியே! உடல் நோய் மாற்றுதற்கு மருந்துகள் நிறைய இருக்கின்றன என் தலைவன் தந்த காதல் நோயை மாற்ற அவனன்றி வேறு மருந்து என்ன இருக்கிறது?'[2] என்பதாக.

1. குறள் — 1102
2. தாயு—1071

'பிறர் கேட்குமாறு நிறைய போதிக்கின்றேன். அவ்வாறு மோனத்தில் இருந்து இறைவன் திருவருளில் பொருந்திடாப் பேதையாக நான் வாழ்கிறேன்'[3] என்ற பாடல்,

> ''ஓதி உணர்ந்தும் பிறர்க் குரைத்தும் தான்அடங்காப்
> பேதையின் பேதையார் இல்''[4]

என்ற குறள்கருத்தும் தொடரும் கொண்டு அமைந்துள்ளது, சான்றோர் இருவரும் தன்னடக்கமில்லாக் கல்வியால் பய னில்லை என்று தெளிவாக உணர்த்துகின்றனர். கல்வியின் பயன் கடவுளைக் காண்பதே என்ற கருத்தில் இருவரும் ஒன்றுபடுகின்றனர். 'கற்றதும் சான்றோர் பலரிடம் சென்று கேட்டதும் இறைவா! நின்னை காண்பதற்காகவே அன்றோ'[5] என்னும் அடிகளார் பாடல்,

> ''கற்றதனால் ஆய பயன்என்கொல் வால் அறிவன்
> நற்றாள் தொழாஅர் எனின்''[6]

என்னும் திருக்குறள் கருத்தோடு அடியொற்றிச் சொல்லு வதைக் காணலாம். இவ்வாறு திருவள்ளுவர் பாடல் தொடர்களை—சொற்களை—அடிகளார் தம் பாடல்களில் பயன்படுத்திக்கொண்ட இடங்கள் இன்னும் பல உள. 'அரங்கின்றி வட்டாடியற்றே'[7] என்ற குறள் தொடர், 'கோடின்றி வட்டாடல் கொள்வ தொக்கும்'[8] என்றும் 'காமம் வெகுளி மயக்கம்.........'[9] என்ற குறட் சொற்கள்,

---

3. தாயு—75
4. குறள்—834
5. தாயு—309
6. குறள்—2
7. குறள்—401
8. தாயு—186
9. குறள்—360

'வெய்ய காம வெகுளி மயக்கம்'[10] என்ற அடிகளார் பாட்டிலும் 'யான் எனது'[11] என்ற சொற்கள் 'யான் எனது அற்றவர் உறவு'[12] என்றும், 'காக்கை கரவா கரைந் துண்ணும்'[13] என்ற தொடர் 'காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர்'[14] என்றும் அடிகளார் பாடலில் அமைந்து விளங்கு தலைக் காணலாம்.

சொல், தொடர்களே அன்றி, கருத்து இணைகள் சில வற்றையும் காணலாம். 'சுடச்சுடரும் பொன்போல் ஒளி விடும்' என்னும் குறள் கருத்து, 'காய்ச்சச்சுடர்விடும் பொற் கட்டிபோல்'[15]'அவா என்ப எல்லா உயிர்க்கும்' என்ற குறள் கருத்து,'பந்தமானது தந்த வினை'[16] என்றும், 'அறவினை யாதெனின்', 'நல்லார் எனப்படுவது யாதெனின்' என்ற குறட் கருத்துகள் 'கொல்லாமை எத்தனை குணக் கேட்டை நீக்கும்'[17] 'கொல்லா விரதம் ஒன்றுகொண்டவரே நல்லோர்[18] என்றும் 'நெருநல் உளனொருவன்' என்ற பாடல் கருத்து, 'இன்றைக் கிருந்தாரை நாளைக்கிருப்பர் என்றெண்ணவோ திடமில்லையே'[19] என்றும், 'நேற்றுளார் இன்று மாளா நின்றனர்'[20] என்றும் 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' என்ற பாடல் கருத்து, 'நின்சேவடிக்கே பித்தானால் உண்டோ பிறப்பு'[21] என்றும், 'சார்புணர்ந்து சார்புகெட' என்ற குறள் கருத்து, 'எக்காலமும் தனக்கு என்ன, ஒரு செயலிலா ஏழை' எனத் துவங்கும் அடிகளார் பாடல் கருத்துடன் ஒத்து விளங்குதலைக் காணலாம்.

சித்தாந்தச் செல்வராகிய திருமூலர் தொடர்களும் கருத்துகளும் அடிகளாரால் ஆங்காங்கு சுட்டப் பெற்றுள்ளன.

---

10. குறள் — 215
11. குறள் — 346
12. தாயு — 17
13. குறள் — 527
14. தாயு — 555
15. தாயு — 989
16. தாயு — 10
17. தாயு — 67
18. தாயு — 827
19. தாயு — 104
20. தாயு — 337
21. தாயு — 505

தமக்கு முன்பிருந்த பக்தி இலக்கியச் சான்றோர் பாடல் அனைத்தையும் கற்று, உணர்ந்து அதன்வழி நிற்கப் பயின்றவர் தாயுமான அடிகளார். பக்திப் பாடல் எல்லாம் பண், திறங்களால் இசையோடு பாடப்பெற்றதைக் கேட்டுத் தாமும் பயின்றிருக்க வேண்டும்.

பன்மாலைத் திரளிருக்கத் தமைஉ ணர்ந்தோர்
 பாமாலைக் கேநீதான் பட்சம் என்று
நன்மாலை யாஎடுத்துச் சொன்னார் நல்லோர்...(175)

எனத் தமக்கு முன் பரமன்பால் கொண்ட ஆர்வத்தால் பாடிப் பரவிய தெய்வத் தமிழ்ச் சான்றோர்களை எல்லாம் 'நல்லோர்' என்று குறிப்பிடுகிறார். அந்தத் தெய்வச் சான்றோர் நெறியிலேயே தாமும் பாடத் தொடங்கியதாக, "நலம்அறிந்து கல்லாதநானும் சொன்னேன் சொன்மாலை' என்கிறார் அடிகளார்.

அடிகளார் அருளிய சொன்மாலையாகிய அவர்தம் பாடல்கள்வழி அவர்க்குத் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர், பட்டினத்தார், பத்ரகிரியார், திருமூலர், அருணகிரிநாதர் ஆகிய தெய்வத் தமிழ்ச் சான்றோர்பால் இருந்த ஈடுபாடும், அவர்களுடைய பாடலில் தோய்ந்திருந்த திறமும் நன்கு புலப்படுகிறது.

'வெம்பந்தம் தீர்த்துலகாள் வேந்தன் திருஞான சம்பந்தன்...' என்று தாம் சம்பந்தரிடம் கண்ட நலத்தை அடிகளார் குறிப்பிடுவர். சம்பந்தர் பாடல்கள், தொடரும் மனக்கவலையிலிருந்து மீட்டு இறைவனிடம் சேர்ப்பிக்க வல்லது. என, 'துன்றுமனக் கவலைகெட நாயேனைத் தொழும்புகொளச் சீகாழித் துரையே!... வருக" என்று பாடிப் பாராட்டுவார்.

திருஞான சம்பந்தருடைய பாடல் உணர்வும் சொல் தொடர்களும் தாயுமானவர் பாடல்களில் மூன்றிடங்களில் பயின்றுவரக் காணலாம்.

'சோழநாட்டு வலஞ்சுழியில் கோயில் கொண்டுள்ள சித்தீசநாதரை வாயாராப் புகழ்ந்து, ஆர்வத்தோடு விரும்பி இசையோடு பாடவல்ல நெஞ்சம் உறுதியாகப் புண்ணியம் செய்திருக்க வேண்டும்' என்பர் சம்பந்தர்.

என்ன புண்ணியம் செய்தனை
நெஞ்சமே யிருங்கடல் வையத்து
முன்னை நீபுரி நல்வினைப்
பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு
வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி யாதரித் தேத்தியும்
பாடியும் வழிபடு மதனாலே 2-106-1

இந்தப் பாடலின் கருத்தையும் தொடரையும் அப்படியே அடிகளார் நெஞ்சில் கொண்டிருந்தமை,

''திருத்து சீரடித் தாமரைக் கன்புதான் செய்யப்
பொருந்து நாள்நல்ல புண்ணியம் செய்யும்நாள்'' (375)

என்பதால் புலனாகும்.

மானிட உடம்பு ஒன்பது வாயில்கள் கொண்டமைந்துள்ளது. உயிர் விட்டோடுதல் எளிது. அத்தகு ஓட்டை பல உடைய வீடு இது. இந்தக் கருத்தைச் சம்பந்தர்,

'ஒன்பது வாய்தலார் குரம்பை' (2-79-8)

என்பர். அடிகளார் அந்தப் படிமத்தை அப்படியே மனத்தில் கொண்டு,

'சாலேகம் ஒன்பது குலாவு நடை மனையை' (101)

எனக் குறிப்பிடுவர்.

நரை, திரை, மூப்பெனும் நிலையாமைக்கு ஆளானது இந்த உடம்பு. முதுமையில், சோர்வில் புலன்கெட்டு, பொறி குழம்பி, நெறி தடுமாறி உயிர் வருந்தும் அந்த நாளில் உடனிருந்து காப்பவன் இறைவன் ஒருவனே.

புலனைந்தும் பொறிகலங்கி
நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐம்மே லுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்
றருள்செய்வான் அமர்ந்த கோயில்

என ஐயாறப்பன் இடங்கொண்டுள்ள திருவையாற்றினைப் போற்றிப்பாடுவர் திருஞானசம்பந்தர். அப்படியே

'புலனைத்தும் தானே பொரமயங்கிச் சிந்தை
அலமந் துழலும் அடிமை...' (505)

என்பர் அடிகளார்.

திருநாவுக்கரசர் தம் உழவாரத் தொண்டும் தேவாரப் பாடலும் அடிகளார் மனத்தில் அகலாத இடம் பெற்றுள்ளன.

ஏரின் சிவயோகம் இங்கிவர்க்கே என்னஉழ
வாரக்கொள் செய்கையர்தாள் வாரம்வைப்ப தெந்நாளோ!
(1108)

என நாவுக்கரசரின் தொண்டை வியப்பர் அடிகளார். அரசர் பாடலில் அடிகளார் கொண்டிருந்த ஈடுபாடு அனைத்துவகையானும் அறியத்தக்கது. அப்பர்தம் பாடலடிகள், கருத்துகள், உவமை உருவக நலன்கள் எல்லாம் அடிகளார் பாடலுக்கு மெருகூட்டிப் பொலிவு செய்கின்றன.

சிற்றம்பலவனுக்கு எல்லையில்லாத அன்பு பூண்ட என்னை,

அல்லல் என்செயும் அருவினை என் செயும்
தொல்லை வல்வினை தொந்தந்தான் என்செயும் (5.1:4)

என்பர் அப்பர். அதே கருத்தை, அதே போக்கில் அதேயாப்பில்

கன்மம் ஏது? கடுநர கேதுமேல்
சென்மம் ஏது? எனைத்தீண்டக் கடவதோ?
என்ம னோரதம் எய்தும் படிக்கருள்
நன்மைகூர் முக்கண் நாதன் இருக்கவே (242)

என்று பாடுவர் அடிகளார்.

தாசமார்கத்தில் திருவாரூர் புற்றிடங் கொண்ட நாதரைத் திருநாவுக்கரசர்,

நிலைபெறுமா றெண்ணிதியேல் நெஞ்சே நீவா
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்கு
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையினாற் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா! சயபோற்றி! போற்றி என்றும்
அலைபுலைசேர் செஞ்சடையெம் ஆதி! என்றும்
ஆரூரா! என்றென்றே அலறா நில்லே! (6—31—3)

எனப் பாடுவார். இந்நெறியையே பின்பற்றி அடிகளாரும்,

அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினால் உருகி விழிநீர்
ஆறாக ஆராத முத்தியின தாவேச
ஆசைக் கடற்குள் மூழ்கி
சங்கர! சுயம்புவே! சம்புவே! எனவுமொழி
தழுதழுத்திட வணங்கம் சன்மார்க்க நெறி (26)

என்று தாசமார்க்க வழிபாட்டைச் சன்மார்க்க வழிபாடெனப் போற்றிப் புகழ்வர்.

"இருநிலனாய் தீயாகி" (6-94-1) என்னும் அப்பர் பாடல் சுட்டும் இறைவனது கலந்த நிலையையும் கடந்த

நிலையையும், 'தெருளாகி மருளாகி(68) என்ற பாடலில் அடிகளார் குறிப்பர்.

> உற்றார் ஆருளரோ—உயிர்கொண்டு போம்பொழுது
> குற்றாலத் துறைகூத்தன் அல்லால் நமக்குற்றார்
> யாருளரோ! (4-9-10)

என்ற வாழ்வியல் உண்மை, அப்படியே இன்னும் சுருக்கமாக,

'இருண்ட யமன் வரும் வேளை ஏதுதுணை பழிகார மனமே' (1452) என்று அடிகளார் பாடலில்அமைந்துள்ளது.

''ஆட்டுவித்தால் யார்ஒருவர் ஆடாதாரே'' (6-95-3)

என்பர் அப்பர். அதே உண்மையை எதிர்மறைமுகத்தான் ''அவனன்றி ஓரணுவும் அசையாது'' என்பர் அடிகளார்.

தனித்திருநேரிசைப் பதிகம் ஒன்றில் மானச பூசை பற்றி அப்பர் பேசுகிறார்.

> காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக
> வாய்மையே தூய்மையாக மனமணி லிங்கமாக
> நேயமே நெய்யும்பாலா நீரமைய வாட்டிப்
> பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே
> (4-76-4)

அப்படியே, இக்கருத்தை

> ''நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்! அன்பே
> மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே'' (1251)

என எளிய நாட்டுப்புறப் பாடல் குரலில் பாடிக் குறிப்பர் அடிகளார். மேலும், ''என் ஆவி நைவேத்தியம் ப்ராணன் ஓங்குமதிதூப தீபம் அபிடேகநீர் (54) என்பர்.

இப்படி இறை, உயிர், உலகு பற்றிய கருத்துகள் பல, உணர்வுகள் பல, சொற்கள் பல இருவர் பாடல்களிலும் ஒத்து விளங்கக் காணலாம். இவற்றால் தாயுமானவர்

அப்பரிடம் கொண்டிருந்த ஈடுபாடும், அவர்தம் பாடல் களில் தோய்வும் புலப்படுகின்றன.

'தூது சென்றிடவே பொருளை வைத்த நாவலோய்' என்றும், 'பத்தர் இறை என்றறிந்து பேதைபால் தூதனுப்பு வித்த தமிழ்ச் சமர்த்தர்' என்றும் சுந்தரரை அடிகளார் பாராட்டிப் பாடுகிறார். சுந்தரர்தம் சகமார்க்கத்தில் ஈடுபாடு கொண்டு 'என்னுடைய தோழனுமாய்' 'தாமெம் மைமுன் படைத்தான்' என்றும் சுந்தரர் பாடல் இரண்டின் வாயிலாய்த் தான் உற்ற தெய்வானுபவத்தை,

'தானென்னை முன்படைத்தான்' என்ற தகவுரையை
நானென்னா உண்மை பெற்று நாம் உணர்வதெந்
நாளோ (1259)

என்றும்

'என்னுடைய தோழனுமாய்' என்ற திருப்பாட்டின்

நன்னெறியைக் கண்டுரிமை நாம் உணர்வதெந்நாளோ

என்றும் அடிகளார் வெளியிடுவர்.

''நல்லிசை ஞானசம் பந்தனும் நாவினுக்
கரையனும் பாடிய நற்றமிழ் மாலை
சொல்லியவேசொல்லி ஏத்துகப்பானை''—என சுந்தரர்

பாடியது போலவே,

பன்மாலைத் திரளிருக்க தமைஉணர்ந்தோர்
பாமாலைக் கேநீதான் பட்சம் என்று
நன்மாலையாயெடுத்துச் சொன்னார் நல்லோர்
நலமறிந்து கல்லாத நானும் சொன்னேன்... (175)

என்பர் அடிகளார்.

''வாழ்வாவது மாயமிது மண்ணாவது திண்ணம்''
(7-78-1)

என்பர் சுந்தரர். 'வாழ்வனைத்தும் மயக்கமெனத் தேர்ந் தேன்' (178) என்பர் அடிகளார்.

எல்லாச் செல்வத்தையும் அறத்துறந்த பட்டினத்தாரைச் 'செல்வப் பட்டினத்தார்' என்று போற்றி அவர் பெற்ற அருட்செல்வத்தை அடிகளார் மதித்துப் போற்றுவர். மேலும்,

> பாரனைத்தும் பொய்யெனவே
> பட்டினத்துப் பிள்ளைப் போல்
> ஆருந் துறக்கை அரிது... (516)

என்று அடிகளார் பட்டினத்தார் துறவை வியப்பர்.

மெய்யுணர்வு உற்றவர்கள் எல்லாம் இறைவன் செயல்-அவன் எண்ணம் ஈடேறட்டும்; நாம் அவன் அடிமை; உடைமை; கருவி—என உணரப் பெறுகிறார்கள். பட்டினத்தாரும் தாயுமானவரும் இந்த உணர்வு கைவரப் பெற்றவர்களே.

'என்செய லாவது யாதொன்றும் இல்லை இனித் தெய்வமே உன்செய லேயென் றுணரப் பெற்றேன்'

என்பர் பட்டினத்தார்? அடிகளாரும்,

> எனக்கெனச் செயல் வேறிலை; யாவும் இங் கொருநின்
> தனக்கெ னத்தரும்; உடல்பொருள் ஆவியும் தந்தேன்
> மனத்த கத்துள அழுக்கெலாம் மாற்றிஎம் பிரான்நீ
> நினைத்த தெப்படி எப்படி அருளுதல் நீதம் (162)

என்று தம்மை முழுதும் ஒப்படைப்பர்.

> 'எத்தனையூ ரெத்தனைவீ
> டெத்தனைதாய் பெற்றவர்கள்
> எத்தனைபே ரிட்டழைக்க
> ஏனென்றேன்...'

என்று உயிர் உறும் பிறவி பலவற்றை உருக்கத்தோடு எடுத்துரைப்பர் பட்டினத்தார்? அடிகளார் அதனை,

ஊரனந்தும், பெற்ற பேரனந்த தஞ்சுற்று
முறவனந் தம், வினையினா
லுடலனந் தஞ்செயும் வினையனந் தங்கருத்
தோவனந் தம்...

எனத் தத்துவமாக்கிப் பாடுவார்.

"என்னை யறிந்துகொண்டே
னெங்கோமா னோடிருக்கும்
தன்மை யறிந்து சமைந்திருப்ப
தெக்காலம்...

என்னும் பத்ரகிரியார் பாடற் பாங்கு,

"தம்மை யறிந்தால் தலைவன் பற்றலது
பின்னை யொரு பற்று முண்டோ பேசாய் பராபரமே"

என்ற கண்ணியில் கருத்தாகவும்,

கள்ளக் கருத்தை யெல்லாம் கட்டோடு வேரறுத்திங்
குள்ளக் கருத்தை உணர்ந்திருப்ப தெக்காலம்

என்ற கண்ணியின் வடிவாகவும் உருவாகியிருப்பதை அறியலாம்.

**திருமூலர்** : 'சக்கரவர்த்தி தவராச யோகி' என்று அடிகளார் பாராட்டி உரைக்கும் திருமூலர் இயற்றிய திருமந்திரம் மூவாயிரமும் அடிகளார் கற்றுள்ளார். தம் சிந்தையில் அவை பெற்றுள்ள பாங்கு அடிகளார்தம் செய்யுட்களில் சிறப்பாகப் புலப்படுகின்றன.

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல்
வேறொன் றறியேன் பராபரமே" (8○6)

என்னும் பாடலால் தாயுமானவரை உலகம் அறியும். இந்தத் திருப்பாடல் அப்படியே திருமூலரை அடியொற்றி பெற்ற அருள் அநுபவத்தால் அடிகளார் அருளிச் செய்தது ஆகும்: இந்தப் பாட்டு விளைவதற்கான திருமந்திர விளைநிலம் கீழ்வரும் பாடல்தான்.

"நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடில்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே." (மந் 147)

இன்னும் அடிகளார்தம் ஆன்மநேய அநுபவச் சாரமாகத் திகழ்வன 'காடும் கரையும்...' எனும் மூன்று விருத்தங்கள் ஆகும். அதில் மூன்றாம் பாடல் மிக உயர்ந்த அருளனுபவப் பாடல். தான் பெற்ற இன்பத்தைத் தரணி எல்லாம் பெற்றுய்ய அடிகளார் உலகரைக் கூவி அழைக்கும் கொள்கையது இந்தப் பாடல்.

காகம் உறவு கலந்துண்ணக்
கண்டீர் அகண்டா காரசிவ
போகம் எனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பி பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்குதையோ!
இன்புற் றிடநாம் இனிஎடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாரும் செகத்தீரே! (555)

உடல் இறைவன் தந்தது. அதனைப் போற்றிக் காத்து அவன் அருளை காண அதனைப் பயன்படுத்திக் கொள்ளல் வேண்டும். அவன் தந்த அந்தக் கருவியை அவன் அருள் நோக்கிற்கு மாறாக அழித்துக் கொள்ளல் கூடாது.

உடலைப் பழித்திங்(கு) உணவுங் கொடாமல்
விடவிடவே நாடுவரோ (493)

என்று தாயுமானவர் எழுப்பும் வினாவில் இந்த உண்மையை உணரலாம். இந்த உண்மைத் தெளிவு இன்னும் ஆழமாக அழுத்த திருமூலர் திருமந்திரத்தில் உரைக்கப்பெறுகிறது. அந்த மந்திர உரை அடிகளார் அறிவில் தோய்ந்திருத்தல் வேண்டும்.

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே (மந் 704)

இறைவனோடு பிரிவற்ற ஆனந்தமய வாழ்வுஎய்துதற்கு எடுத்தது இந்த உடல் பிறவி. அந்நிலை அடையும் வரை இந்த உடல் வேண்டும் என்பர் அடிகளார் (492)

பெறுதற்கு அரியது இந்தப் பிறவி (மந் 2052) என்பர் திருமூலர். 'எண்ணரிய பிறவிகளில் மானுடப் பிறவிகள் யாரினும் அரிதரிதுகாண்' என்பர் திருமூலர்.

'அம்பலமாவது அகில சராசரம்' (மந் 2729) என்னும் திருமூலர் கருத்துக்கு இயைந்த அடிகளார் அநுபவம் "ஆகார புவனத்தை இன்பாகாரமாகக் காண்கிறது (132).

ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈச னோடாயினும் ஆசை அறுமின்கள்
ஆசைப் படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே (மந் 2570)

என்ற திருமூலர் பாடல் அனைவரும் அறிந்த ஒன்று. 'ஆசை' என்னும் திரை உண்மைக் காட்சியை மறைத்து நிற்கிறது. அந்தத் திரையை அகற்றி ஆசையற்று நிற்பின் பேரின்பப் பேறு கிடைக்கும்; உலகமும் வசப்படும்-என்பர் அடிகளார்.

நிராசை மன் இடமே இடம்; அந்த மாநிலத்தே
பொருளும்'
திடம்பெறவே நிற்கின் எல்லா உலகமும்வந் தேவல்
செய்யும்; இந்த நிலைநின்றோர் செனகன்முதல் முனிவர்
கடம்பெறுமா மதயானை யென்னவும்நீ பாடக்
கட்டான நிகளபந்தக் கட்டவிப் பாரே (188)

தாயுமானவர் கண்டநெறி 'மோன நெறி'; 'மோன சமரச சன்மார்க்க' நெறி. மௌனகுரு தீட்சையில் அவர் பெற்ற பேறு இது. இந்த மோனத்தை அருணகிரிநாதர்

ஆன்மிகப் பாடல்வழியும் பெற்றுத் துய்த்துள்ளார். 'ஐயா! அருணகிரி அப்பா' என்றெல்லாம் அழைத்தழைத்துத் தன் ஆவிக்கு அருமருந்தாக அருணகிரியாரின் மோனநெறியை நினைந்துள்ளார்.

'கந்தர்அநு பூதிபெற்றுக் கந்தரநு பூதிசொன்ன
எந்தை'............ (1114)
.........சும்மா இருந்துன் அருளைச் சாரப்
பூவுலகில் வளர்அருண கிரியே (162)

என்றெல்லாம் அடிகளார் பாடிப் போற்றும்அருணகிரியாரின் மோனம் அடிகளார் பாடலில் 'பேசா அநுபூதி... (284) என்று அப்படியே பேசப் பெறுகிறது.

"ஆசா நிகளம் துகளா கியபின்
பேசா அநுபூதி பிறந்ததுவே..." கந்தர் அநுபூதி

இவ்வாறு தனக்கு முன்னிருந்த திருநெறிய தெய்வத் தமர்ப்பாடல் சான்றோர்களும் அவர்தம் பாடல்களும் இவர் உள்ளத்தில் நின்று உணர்வாய்ப் பொங்கி இவர்தம் பாடல் களிலெல்லாம் பரவி நின்றதுபோல இவர்தம் பாடல் வடிவும், பொருள் வண்ணமும் இவரை அடுத்துவந்த கவிஞர் பலரின் கருத்தையும், உணர்வையும் கவர்ந்துள்ளன. அவர்களுள் வடலூர் வள்ளல் சிதம்பரம் இராமலிங்கனார், மஸ்தான்சாகிபு,கிறித்தவக் கம்பர் எச். ஏ. கிருஷ்ண பிள்ளை, அமரகவி சுப்பிரமணிய பாரதியார் ஆகியோர் சிறப்பாகக் குறிப்பதற்கு உரியர்.

தெய்வப்புலவர் திருவள்ளுவரையும், சேரன் தம்பி இளங்கோ அடிகளாரையும், கல்வியிற் பெரிய கம்பனையும் பாராட்டிப் பாடிய பாரதியார்,

'என்றும் இருக்க உளங்கொண்டாய்
இன்பத் தமிழுக் கிலக்கியமாய்
இன்றும் இருத்தல் செய்கின்றாய்
இறவாய் தமிழோ டிருப்பாய்நீ

ஒன்று பொருள்ஃ தின்பமென
உணர்ந்தாய் தாயு மானவனே
நின்ற பரத்து மாத்திரமோ
நில்லா இகத்தும் நிற்பாய்நீ'[1]

எனத் தாயுமானவ அடிகளாரையும் போற்றிப் புகழ்ந்துள்ளார். இவ்வாறு தமக்குப்பின் தோன்றிய கவிஞர் பலர் தம் நெஞ்சங்களைக் கவர்ந்து தம் வயப்படுத்திய இயல்பு அடிகளார்தம் பாடல்களுக்கு இருந்துளது அவ்வாறு அடிகளார் தம் பாடல்களால் கவரப்பெற்ற தமிழ்ப்புலமைச் சான்றோருள் குணங்குடி மஸ்தான் சாகிபு என்று அழைக்கப் பெறும் சுல்தான் அப்துல் காதிர் லப்பை, வடலூர் வள்ளலார் ஆகிய சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள், சுப்பிரமணிய பாரதியார் முதலியோர் குறிப்பிடத் தக்கவராவர்.

குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல்களில் தாயுமான அடிகளாரின் பாடல் செல்வாக்குப் பெரிதும் காணப்படுகிறது; பாடல் வடிவம், தொடர், போக்கு, பொருள் இவற்றிலெல்லாம் அதனைத் தெளிவாகக் காணலாம். தாயுமானவர் பயின்று வரும் பதினான்குசீர் பன்னிருசீர் விருத்தங்களே மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல்களிலும் பயின்றுவரக் காண்கின்றோம். தாயுமானவர்க்குக் கைவந்த ஆனந்தக் களிப்பு மஸ்தான் சாகிபு அவர்களிடமும் அழகுற அமைந்து பொலிகிறது மஸ்தான் சாகிபு அவர்களின் நிராமயக் கண்ணி, பராபரக் கண்ணி, 'றகுமான்' கண்ணி, கண்மணிமாலைக் கண்ணி ஆகியன தாயுமானவர் பராபரக் கண்ணி அமைப்பைப் பெற்று விளங்குகின்றன. மனோன்மணிக் கண்ணியும் நந்தீசுவரக் கண்ணியும் பைங்கிளிக்கண்ணிப் போக்கில்

1. பாரதியார் பாடல், சான்றோர்—1

செல்லுகின்றன. தாயுமானவரின் எந்நாட் கண்ணி வழி வந்ததே மஸ்தான் சாகிபு அவர்களின் எக்காலக் கண்ணி.

பின்வரும் தாயுமானவர் பாடல்களையும் மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல்களையும் இணைத்துப் பார்க்கும் போது முன்னவர் பாடல் தொடர் பல பின்னவர் நெஞ்சில் பசுமரத்து ஆணிபோல் பதிந்து பொலிவதைக் காணலாம்.

I. 'சொல்லிற் பதர்களைந்து சொல்முடிவு காணாதார்
நெல்லிற் பதராய் நிற்பார் பராபரமே.'[2]

'சொல்லுட் பதர்நீக்கிச் சும்மா விருந்தருளைக்
கல்லாருங் கல்லேயென் கண்ணே றகுமானே.'[3]

II. 'தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றும் உண்டோ பேசாய்
பராபரமே'[4]

'தன்னை யறிந்தாற் றலைவன் தனையறிந்த
'தென்னு மொழியே' யிதங்கா நிராமயமே.'[5]

இருவர்பாடல்களும் எவ்வாறு இயைந்து செல்கின்றன என்பதை இவ்விரண்டு எடுத்துக் காட்டுகளால் அறிய முடிகிறது. மஸ்தான்சாகிபு அவர்கள் பாடலில்தாயுமானவர் பாடல் தொடர் பயின்று வருவதை முதல் எடுத்துக்காட்டுத் தெளிவாக்குகிறது. இரண்டாவது எடுத்துச்காட்டு மஸ்தான் சாகிபு அவர்கள் பாடலில் அமைந்துள்ள 'என்னு மொழியே இதம்' என்ற தொடர், அடிகளாரின் வழியில் தாம் வந்த நெறியை ஒருவாறு சுட்டிக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

---

2. தா. பா. பராபரக் கண்ணி—296
3. மஸ்தான் சாகிபு பாடல், றகுமானே என்னும் கண்ணி—11
4. தா பா.—பராபரக் கண்ணி—94
5. மஸ்தான் சாகிபு பாடல், நிராமயக் கண்ணி—70

த்தர் கணம் எனும் தலைப்பில் துவங்குகின்ற ாடு திகந்தமும்' எனும் தாயுமானவர் பாடலின் நான்காம் அடிகளாகிய,

கைக்கெளிய பந்தா எடுத்து விளையாடுவீர்
ககன வட்டத்தை யெல்லாங்
கடுகிடை யிருத்தியே அட்டகுல வெற்பையும்
காட்டுவீர் மேலும் மேலும்
க்கசித் திகளெலாம் வல்லநீ ரடிமைமுன்
விளங்கவரு சித்தியிலிரோ
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே' (57)

றின் போக்கில் செல்லும்,

ண்டித்த கடுகிலெழு கடலைப் புகட்டிக்
கலக்கிவிளை யாட வல்லீர்
ருதரிய சித்தெல்லாம் வல்லநீர் அடிமையென்
கண்முன்வரு சித்தில் லையோ'[6]

ான் சாகிபு அவர்களின் பாடல், பொருளிலும் லும் போக்கிலும் இருவருக்கும் இருக்கும் இயைபைப் படுத்துவது காணலாம்.

'கல்லுமொரு போதிற் கரைந்துருகு மேன்மனக்
கற்கரைவ திலையை யனே...'[7]

சாகிபு அவர்கள் தன்னை எண்ணி ஏங்கும் ஏக்கமும்

நத்தியே கங்கறப் பெருகிவரு மானந்த
சமரசப் பெருவாரியை......'
வேதாந்த சாரமே சாரமென் றறியாது
விணா டொலைத்த பாவி'

---

. மஸ்தான் சாகிபு பாடல், விளையாட்டினானந்தம் அடி 3

. இரக்கத்தின் னாநந்தம்,—அடி 1

என்று மஸ்தான் அவர்கள் கருத்தும் தத்துவக் கருத்தும்,

'சொல்லுமொரு ஞானச் சகக்கடலை யுண்டியான்
சும்மா விருக்க அருள்வாய்...'[8]

எனும் அதர்தம் வேண்டுகோளும் தாயுமான அடிகள்பால் மஸ்தான் அவர்களுக்கு இருக்கும் சமய, தத்துவ நெருக்கத்தைக் காட்டுவனவாய் அமைந்துள.

சுத்த சிவ சமரச சன்மார்க்கத் தத்துவத்துக்கு ஓர் இயக்க வடிவு அளித்த சான்றோர் இராமலிங்கர் பாடல்களில் காணப்பெறும் சமரசக் கருத்துக்கு முன்னோடியாகத் தாயுமானவர் பாடல் விளங்குகின்றன எனலாம். வேதாந்தமாகிய கேவலாத் வைத்தத்திற்கும் சித்தாந்தமாகிய புனிதாத் வைதத்திற்கும் இடையே அமைந்துள்ள சமரசப் பண்பை உணர்ந்து 'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர் கணமே'[9] எனத் தாயுமானவர் பாடுகின்றார். இந்தச் சமரச மனப்பாங்கு வள்ளலார் நெஞ்சத்தே ஆழ்ந்து அகன்று வேரோடி,

'சிற்சபையில் நடிக்கின்ற நாயகனார் தமக்குச்
சேர்ந்தபுறச்சமயப் போர் பொருந்துவதோ என்றாய்
பிற்சமயத் தார்பெயரும் அவர்பெயரே கண்டாய்
பித்தர் என்றே பெயர்படைத்தார்க் கைப்பெயர் ஒவ்வாதோ
அச்சமயத் தேவர்மட்டோ, நின்பெயர்என் பெயரும்
அவர்பெயரே எவ்வுயிரின் பெயருமவர் பெயரே
சிற்சபையில் என்கணவர் செய்யுமொரு ஞானத்
திருக்கூத்துக் கண்டனவே தெளியுமிது தோழி'[10]

உலக சமய சமரச சன்மார்க்கமாகத் தழைத்துப் பூத்துக் காய்த்துக் கனிந்துள்ளது எனலாம்.

---

8 மஸ்தான் சாகிபு பாடல் இரக்கத்தினாநந்தம்-அடி2
9. தா. பா. சித்தர் கணம்—அடி-4
10 திருவருட்பா – அநுபவமாலை-89

"எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி யிரங்கவுநின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"[11]

என வரும் தாயுமானவர் பாடலொடு,

'எவ்வுயிர்த் திரளும் என்னுயிர் எனவே
எண்ணிநல் இன்புறச் செய்யவும்...
அவ்வுயிர் களுக்கு வருமிடை யூற்றை
யாற்றியே அட்டதிக் கிடவும்
......... இச்சை காண எந்நாய்'[12]

எனவரும் வள்ளலார் பாடல் இயைந்து செல்வதைக் காணலாம்.

'பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாம் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பால் அம்மைநின் தாளில்
கருத்தொன்றும் உண்டாகுமேல்'[13]

என்ற 'மலைவளர் காதலியின்' பாடல் போக்கும் நோக்கும்,

'ஊர்உண்டு பேர்உண்டு மணிஉண்டு பணிவுண்டு
உடையுண்டு கொடையுமுண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தமுறும்
உளமுண்டு வளமுமுண்டு

11. தா. பா. பராபரக் கண்ணி-65
12. திருவருட்பா, பிள்ளைச்சிறு விண்ணபபம்—18
திருஅருட்பா 6-21-18
13. தா. பா. மலைவளர் காதலி-1

தேர்உண்டு கரிஉண்டு பரிஉண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவுமுண்டு
தேன்உண்டு வண்டுறு தடம்பணியும் நின்பதத்
தியானம்உண் டாகிலரசே[14]

என்று செல்லும் வள்ளலாரது பாடலில் அமைந்து விளங்கு கிறது.

தாயுமானவர்பற்றி எங்கும் எம்முறையிலும் வள்ளலார் குறிப்பிடாவிடினும் அடிகளாரது பாடல் அமைதியும் அழகும் வள்ளலார் பாடலில் அமைந்து விளங்கியதைக் கண்டோம். அடிகளார் வாய்மொழியைத் தாய்மொழியாகக் கொண்டு செல்கின்ற குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் பாடல்கள் தாயுமானவர் பாடல்களின் போக்கு நோக்கோடு மட்டும் அமையாது அடி, தொடை, பா, பண் இவற்றோடும் ஒத்து ஓங்கிச் செல்வதைக் கண்டோம். சுப்பிரமணிய பாரதியாரோ வெளிப்படையாகவே 'தமிழ் இலக்கியத் தாலும், தத்துவ உண்மையாலும் இகத்தும் பரத்தும் நீ என்றும் இருப்பாய் தாயுமானவனே' என்று பாராட்டிப் பாடுகின்றார்.

பாரதியாரின் 'தேசீய கீத' முதல் பாடலுக்கு

'வந்தே மாதர மென்போம்—எங்கள்
மாநிலத் தாயை வணங்குது மென்போம்'

'தாயுமானவர் ஆனந்தக் களிப்பு மெட்டு' என்றும் பதினான் பாடலாய் அமைந்துள்ள,

'தாயின் மணிகொடி பாரீர்—அதைத்
தாழ்ந்து பணிந்து புகழ்ந்திட வாரீர்'

இப்பாட்டுக்கு, 'தாயுமானவர் ஆனந்தக் களிப்பு வர்ண மெட்டு' என்றும் தமிழ்த்தாய் வாழ்த்தாய் வருகின்ற,

14. திருவருட்பா, தெய்வமணி மாலை-28

'ஆதிசிவன் பெற்றுவிட்டான்—என்னை
ஆரிய மைந்தன் அகத்திய னென்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்தே—நிறை
மேவும் இலக்கணம் செய்து கொடுத்தான்'

என்ற பாடலுக்கு, 'தாயுமானவர் ஆனந்தக் களிப்பு சந்தம் என்றும், பாரதியாரே குறித்துள்ளமை தாயுமானவர் பாடலின் செல்வாக்கைப் புலப்படுத்துவதாய் உள்ளது. அன்றியும் 'சுதந்திரப்போர்' எனும் பாடலில் அமைந்து விளங்கும்.

'எண்ணமெலா நெய்யாக எம்முயிரி னுள்வளர்ந்த
வண்ண விளக்கிஃது மடியத் திருவுளமே'

எனவரும் கண்ணிகள் அடிகளாரது பராபரக்கண்ணியின் பண்ணையும் பாவின் போக்கையும்,

'நாடிழந்து மக்களையும் நல்லாளையும் பிரிந்து
வீடிழந்திங் குற்றேன் விதியினையென்
சொல்கேனே'

எனவரும் கண்ணிகள் தாயுமானவரது பைங்கிளிக் கண்ணியின் உணர்வையும் உயிர்ப்பையும் பெற்று விளங்குவதை உணரலாம்.

இவ்வாறு வாழையடி வாழையென வரும் திருக்கூட்ட மரபு போல, தாயுமான அடிகள் சமய தத்துவ இலக்கியச் சுவட்டில் குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள், வடலூர் வள்ளலார் இராமலிங்க சுவாமிகள், அமரகவி சுப்பிரமணிய பாரதியார் முதலியோர் பெய்கின்ற திறம் இக்கட்டுரையில் ஒருவாறு துணியப் பெற்றது.

**வாசகனார் வழியில்:** பசி இயற்கை உலக உயிர்கள் அனைத்துக்கும் இயற்கை. பசித்ததும் உணவின் நினைவு வருகிறது; உணவு கிடைக்கும் இடத்தைப் பற்றிய நினைவுகள் வருகின்றன. முயற்சி எழுகிறது. குழந்தையாயின் உடனே 'அம்மா அம்மா' என்று அரற்றுகின்றது; அழைக்கின்றது. வளர்ந்தோராயின் அங்கும் இங்கும் அலைந்து திரிந்து அதை

யும் இதையும் உண்டு நோயுற்று இறுதியில் 'அம்மா அம்மா என்று அழைக்கின்றனர் நல்லுணவு நல்கும் அன்னையை, அல்லது அடுத்துவரும் அகமுடையாளை அல்லது அவள் மூலம் வரும் மகளை, பேத்தியை அழைக்கின்றனர்.

இன்னொரு பசி உண்டு; உடற்பசி. இதுவும் எல்லா உயிர்க்கும் எடுக்கும் பொதுப்பசியே. அதுவிலங்குகளிடையே சரல அளவில் மலர்ந்து, மணந்து வாடிவிடுகிறது. ஆனால் மானிட நிலையில் அது காதலாய் கனிந்து, கமர்ந்து இனிக்கிறது. அந்தக் காதல் துணை பெற மனிதர்க்குத் தோழன், தோழியர் துணை வேண்டி உள்ளது.

மேலும் ஒரு பசி உண்டு; ஆன்மப் பசி. அது மனிதர்க்கே உரியது. அதன் உணவு கடவுள்; அதனைப் பெற அவன் அருள், அவன் அருள் பெற்ற அடியார் துணை வேண்டும்.

தாயுமானவர்க்கும் முதலிரண்டு பசிகளும் இருந்திருக்கக் கூடும். என்றாலும் மூன்றாவது பசி, மானிடக் கடைதேற்றத்திற்கு இன்றியமையாத பசி, கடவுட் பசி அவர்பால் மேலோங்கி இருந்தது. கடவுளைக் காணத் துடித்தார்; பித்தர் ஆனார்; கண்டகண்ட இடமெலாம் தேடினார்; கேட்டார்.

'ஏ நிலவே! ஏ கதிரோனே! நிலை தவறாமல் நித்தம் வர உங்களை இப்படி வைத்தவன் யார்? ஏ காற்றே! பேராது சுழல்கின்றாயே நீ, யாரால்? ஏ மேகங்களே! உம்மைப் போல் இறைவனும் அருள் பொழிய நான் என்ன செய்யவேண்டும்? ஏ வானமே! எங்கும் அகண்டு பரந்து விளங்குகிறாயே! உன் முடிவுதான் என்ன? ஏ மண்ணே? உன் இறுதியில் மிஞ்சுவதுதான் என்ன? உரை இறந்து பெருமை பெற்று ஒலிக்கின்ற கடலே! கரை இன்றி உன்னை வைத்தவர் யார்? கானகப் பசுங் கிளிகளே! வண்ண வரி வண்டுகளே! அஞ்சிறைய அன்னங்களே! நீங்களெல்லாம் தூது மார்க்கம் அல்லவோ? பெரிய பரிபூரணமாம் பொருளை எப்போதேனும் கண்டுள்ளீர்களா? கண்டு பேசி

யுள்ளீரா? என்ன பேசினீர்கள்?எனக்குச் சொல்லுங்களேன்?' என்று கடவுட் பசியால் கவல்கின்ற, கலங்குகின்ற தாயுமானவர், குழந்தை ஒன்று 'அம்மா அம்மா!' என்று கதறுவது போல, காதலர் ஒருவர், 'தோழா, தோழி!' என்று அழைப்பது போல 'வாதவூர்த் தேவே' 'தேவர் தொழும் வாதவூர்த் தேவே'[1] என்று அழைத்துக் கடவுளைக் காட்டிக் கொடுக்க வேண்டுகின்றார்.

கடவுளையே பொருளாகக் கொண்ட திருவாசகத்தில் தாயுமானவர் கண்டு கொண்டதும் அதுவே அவற்றைப் பலவாறு நமக்குக் காட்டுகின்றார். தம் பாடல்களின் மூலம் காட்டுகின்றார்.

**பாடல் நெறி :** பக்திநெறி அதவாது பரபக்தி நெறி எல்லோருக்கும், படித்தவர் படியாதவர் எல்லோருக்கும், உரிய பொது நெறி. இப்பக்தியை மூவர் முதலிகள் கட்டுற்ற யாப்பு வடிவில் அமைத்த பாடல்களால், படித்தவர் கிடைத்த மட்டும் வழங்கி வந்த பாடல் வடிவுகளில் வழங்கினர். ஆனால் மணிபாடகனாரோ தும்பியார், உந்தியார், அம்மானை, தெள்ளேணம் முதலிய பாமர மக்கள் பா வடிவிலேயும் பாடியருளினார்.வாசகரது இத்தகு பாடல் நெறியை அடிகளாரும் கண்டுகொண்டு வண்ணத்தில் சந்தத்தில், கண்ணியில், கடவுளைப் பாடுகின்றார்.

என்னதுயான் என்னல்அற்றோர்
எங்கிருந்து பார்க்கினும்நின்
சன்னிதியாம்?; நீ பெரிய சாமி பராபரமே!

என்று பராபரக் கண்ணியிலும்,

அருளால் எவையும் பார் என்றான்; அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்;
இருளான பொருள்கண்ட தல்லால் கண்ட
என்னையும் கண்டிலேன் என்னேடி தோழி!

என்று ஆனந்தக் களிப்பிலும் பாடுகின்றார்.

1. தா. பா. ஆகாரபுவனம் : 31—1.

**பொது நெறி:** மூவர் முதலிகளின் பக்திப் பாடல்களில் தத்துவ உண்மைகள் ஆங்காங்கே சொல்லப் பெற்றுள்ளன. 'இருநிலனாய்த் தீயாகி நீருமாகி... முதலான பாடல்களில் இறைநிலை பேசப்பெற்றுள்ளன. ஆயினும் தத்துவங்கள் அங்கே இலைமறை காய்போல் மறைந்து காணப்பெற, மணிவாசகனார் பாடலில் அவை இலைமறையாக்கனிபோல் நன்கு புலப்படுகின்றன. இவ்வாறு பக்தியும் ஞானமும் கலந்து, இறைபுகழையும் தத்துவக் கொள்கைகளையும் இயைத்துப்பாடும் பொதுநெறியும் தேவையே.

இறைவன் எல்லாமாகி உயிர்க்கு உயிராய் நிறைந்து நின்ற நிலையை,

> "வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி
> ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்
> கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
> வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே"
>
> —திருச்சதகம் 19

என்பர் மணிவாசகப் பெருமான். அடிகளார்,

> "வானாதி பூதமாய், அகிலாண்ட கோடியாய்
> மலையாகி, வளைகடலுமாய்
> மதியாகி, இரவியாய், மற்றுளவெ லாமாகி
> வான்கருணை வெள்ளமாகி,
> நானாகி நின்றவனு நீ......... —ஆனந்தபரம் 78

வான் என்று துவங்கி நின்றவனும் என அமைந்திருக்கும் பாங்கு அடிகளார் நெஞ்சில் வாசகனார் பாடல் எவ்வாறு இடங்கொண்டுள்ளது என்பதைச் சுட்ட வல்லது.

மாலும், நான்முகனும் காணா பரசிவத்தின் தலைமைத் தன்மையை மணிவாசகர் நெறியில் நின்று தாயுமானவ அடிகளார் பின்வரும் பாடலில் நிலைநாட்டுவர்.

"**கண்டன** அல்ல என்றே கழித்திடும் இறுதிக் கண்ணே
கொண்டது பரமா னந்தக் கோதிலா முத்தி: அத்தால்

பண்டையிற் படைப்பும் காப்பும் பறந்தன மாயை யோடே;
வெண்டலை விழிகை காலில் விளங்கிட நின்றாள் யாவன்?''
—தேன்முகம்-3

பஞ்சபூதங்கள் ஒன்றுள் ஒன்று ஒடுங்குவதை,
''ஊழிதரு காலும் கனலும் புனலொடு மண்ணும் விண்ணும்
இழிகரு காலம்............''

—திருச்சதகம் 12

என்று மணிவாசகப் பெருமான் கூறுவதைப் போலவே,

''பாரொடுநன் னீராதி ஒன்றொடொன் றாகவே
பற்றிலய மாம்போதினில்''

—சித்தர்கணம் 3

என்பர் அடிகளார்.

''செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும் (போற்றித் திருஅகவல் 39) என்னும் மணிவாசகனார் சொற்கள் 'செல்வம் மிக அல்லல்' (சிற்சுபோதயம் 7) என அடிகளார் பாடலில் அமைந்து அழகு செய்கிறது.

அடிகளார் சிவபிரான்பால் கொண்ட அழுத்தமான பக்தித் தொடர்கள் வாசகனாரையே நினைவுறுத்து கின்றது. ''தொழுவனோப் பிறரைத் துதிப்பனோ, எனக்கோர் துணை நினைவனோ, சொல்லாய்(வாழாப்பத்து —10) என்பர் வாசகனார். ''ஐயனே! உனையன்றி ஒரு தெய்வம் கையினால் தொழவும் கருதேன் கண்டாய்'' (பொன்னை மாதரை—45) என்பர் அடிகளார்.

''அன்றே இந்த ஆவியும் உடலும்'' (குழைத்த பத்து 7) எனும் மணிவாசகனார் பாடல் அடிகளார் நெஞ்சுள் ஆழப் பதிந்துள்ளது எனலாம்.

மணிவாசகனாரின் 'அடைக்கலப்பத்து' அடிகளாரைப் பெரிதும் ஆட்கொண்டுள்ளது எனலாம். ''செழுங்கமல திரளென'' என்னும் வாசகனார் பாடல் உணர்வை சுருக்கமாக,

"நன்னெஞ்சத் தன்பர்எல்லாம்
நாதரைச்சேர்ந் தின்பணைந்தார்
வன்னெஞ்சத் தாலேநான்
வாழ்விழந்தேன் பைங்கிளியே"

- பைங்கிளிக் கண்ணி 32

இவ்வாறு அடிகளார் உரைக்கின்றார். அதே பத்தில் அமைந்துள்ள, "பொழிகின்ற புயல் துன்பத்தில்" என்ற பாடல்,

"பாடி, ஆடிநின் றிரங்கிநின் பதமலர் முடிமேல்
சூடி வாழ்ந்தனர். அமல! நின்அடியர்; யான்தொழும்பன்
நாடி யேஇந்த உலகத்தை மெய்யென நம்பித்
தேடி னேன்வெறுந் தீமையே; என்னினிச் செய்வேன்"

—எனக்கெனச் செயல் 18

என்ற பாடலில் பிரதிபலிக்கிறது.

"மாயப் பிறப்பறுக்கும் மன்னன்" என்பர் மணிவாசகனார். (சிவப்புராணம்)

"மாயப் பிறப்பறுப்பான் வந்துன் அடிக்கே கரம் கூப்பி" (சொல்லற்கரிய 6) என்பர் அடிகளார்.

"பால் நினைந்தூட்டும் தாயினும்" (பிடித்த பத்து 9) என்னும் சிவபெருமான் அன்புநிலை,

"சிறந்த சிவபெருமானே தாயினும் இனிய நின்னை"

—கற்புரு சிந்தை—7

என்று தாயுமான அடிகளாரால் பேசப்படுகிறது.

"போற்றியோ நமச்சிவாய; புகலிடம் பிறிதொன்றில்லை" என்னும் திருச்சதகத்தொடர் (62) "பொய்யெ னேர்க்கு புகலிடம் எங்கனெ" (பொன்னை மாதரை 31) என்று அடிகளார் பாடலில் அமைகின்றது.

தன்னைத் தந்துஎன்னைத் தடுத்தாண்ட நின்கருணைக்கு
என்னைக் கொண்டு என்னபலன் எந்தை பராபரமே''
என்னும் பராபரக்கண்ணி,

''தந்தது உன்றன்னை கொண்டது என்றன்னை ' எனும் கோயில் திருப்பதிகப் (10) பாடலின் குரல் என்றே சொல்லலாம்.

அல்லலுற்று ஆண்டவனைக் காணாது அரற்றியபோது 'வாதவூர்த்தேவே' என்றும் 'வாதவூர் ஆளி', 'வாதவூர் ஐயா' என்றும் அழைத்தது ஒரு நிலை. திருவாசகத்தின் உணர்வில் தோய்ந்து தம்மைமறந்து வாசகனாரின் தொடர்களையும், வாசகங்களையும், அநுபவங்களையும், தம்முடையனவாகக்கொண்டு பாடியது இடைநிலை திருவாசகம் முழுதும் கற்று மாணிக்கவாசகனார் தமக்கும் உலகுக்கும் வழங்கும் செய்தி இதுதான் என்று உரைப்பார் போல வாசகனார் பாடல்களில் 3 இடங்களைச் சுட்டி அடிகளார் கூறும் பெற்றி சிந்தித்துச் செயற்படுத்தற்கு உரியதாகும்.

இறைவனோடு ஒன்றி நிற்கும் நிலை முடிந்த நிலை. அதற்குரிய நிலை சமய வாழ்க்கை நெறி என்று குறிக்கப் படும்.ஒவ்வொரு நெறிக்கும், அதாவது சமய வாழ்க்கைக்கு அடிப்படை கொள்கைகள் நீதி என்று சொல்லப்படுகின்றது. இத்தகு நீதி, நெறி, நிலை இவை மூன்றும் ஒவ்வொரு சமயத்திற்கும் ஒவ்வொரு வகையாக அமைந்து விளங்குவதைக் காணலாம்.

சைவ சமயத்துக்கு உரிய நீதியாக, நெறியாக, நிலையாக மணிவாசகனார் வழங்குபவை இன்னவைதாம் என்று அடிகளார் எடுத்துரைக்கும் பாங்கு போற்றற்குரியது

'எந்நாட் கண்ணி' 'அறிஞர் உரை' என்ற பகுதிகளில் சைவசமயச் சான்றோர்நூல்களில் தாம்கற்றுணர்ந்த செய்திகளை எல்லாம் சுருக்கமாகத் தாயுமான அடிகளார் பாடிச் செல்கின்றார். ''இருநிறனாய் தீயாகி'' என்னும் திருநாவுக்கரசர் திருப்பாடலையும்,'' என்னுடைய தோழனுமாய்'' என்னும் சுந்தரர் நெறியையும் சுட்டிக் காட்டிச் செல்லும் அடிகளார்,

நினைப்பறவே தான்நினைந்தேன்' என்றநிலை நாடி
அனைத்துமாம் அப்பொருளில் ஆழும்நாள்
எந்நாளோ!'' (6)

''சென்றுசென்றேஅணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாகி
நின்றுவிடும்' என்றநெறி நிற்கும்நாள் எந்நாளோ!'' (7)

''ஆதி அந்தம் இல்லா அரியபரஞ் சோதி' என்ற
நீதிமொழி கண்டதுவாய் நிற்கும்நாள் எந்நாளோ!'' (8)

என்று நீதி, நெறி, நிலைகளைக் குறிப்பிடுகிறார்.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி இறைவன். எனவே, காலமும் இடமும் கடந்து நிற்கும் ஞானப் பிரகாசம் அவன். காலத்தாலும் இடத்தாலும் ஆணவ அஞ்ஞான இருளாலும் கட்டுண்டிருக்கும் பசு அரிய பரஞ்சோதியாகிய பரமனை அடைதலைப் பிறவியின் குறிக்கோளாக கொள்ளுதல் வேண்டும்.

பசுஞானம் கருவி கரணங்களால் பெறுகின்ற ஞானம். காலமும் கருத்தும் கடந்து விளங்குகின்ற அரிய பரஞ்சோதியைக் கட்டுண்ட பசு கண்டுணர்ந்து தொடர்வது எவ்வாறு? அதற்கு ஆண்டவன் அருள் வேண்டும். அவன் அருளால் பதி ஞானம் வாய்க்கின்றது. அப்போது கேளாமல் கேட்டலும், காணாமல் காண்டலும், நினையாமல் நினைத்தலும் கைகூடும். அப்போது கருவி கரண நினைவு அழிய இறைநினைவே நிற்கும். இந்த நீண்ட நினைவால்,நிலைத்த நினைவால், இடையீடற்ற நினைவால் 'நான்' என்னும் உணர்வு கரைந்து கரைந்து அற்றுப் போய் இறைவனோடு ஒன்றாகி நின்று விடும்.

இவ்வாறு 'ஆதியும் அந்தமும்' என்னும் திருவெம்பாவைப் பாடலும், ''இன்றெனக் கருவி ..'' என்ற பாடலும் நன்கு எண்ணி வாசகனார் உள்ளக் கிடக்கையை, உலகுக்கு வழங்கும் செய்திகளைத் தாமும் கண்டு, நாமும் காணுமாறு பாடியருளிய தாயுமான அடிகளார் வணங்கி வழிபடுவதற்கு உரியவர்.

மணிவாசகனார் 'தாம் பெற்ற இன்பம் வையமும் பெறுமாறு' கருதி யாத்திரைப்பத்தில்,

பூவார் சென்னி மன்னனெம்
 புயங்கப் பெருமாள் சிறியோமை
ஓவா துள்ளங் கலந்துணர்வாய்
 உருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆவா என்னப் பட்டன்வாய்
 ஆட்பட் டீர்வந் தொருப்படுமின்
போவோங் காலம் வந்ததுகாண்
 பொய்விட் டுடையான் கழல்புகவே! (1)

காடும் கரையும் மனச்!...

நிற்பார் நிற்கநில் லாவுலகில்
 நில்லோம் இனிதாஞ் செல்வோமே
மெற்பா லொப்பாற் திருமேனிப்
 புயங்க னாள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாந் தாழாதே
 நிற்கும் பரிசே ஒருப்படுமின்
பிற்பால் இன்று பேழ்களித்தாற்
 பெறுதற் கரியன் பெருமானே!

காகம் உறவு கலந்துண்ணக்...? (7)

நினைப்பறவே...

'திருவருளை முன்னிட்டறிந்தேன்' என்று சொல்லிய நிலையை நாடிச் சிவமயமாம் பொருளிடைத்து நான் நினைக்கு நாள் எத்தனை?

சென்று சென்...

'ஆன்ம போத மடைவே கரைத்து சிவபோதத் தலைப்பட்டு இரண்டறக் கலந்து நிற்கும்' என்று சொல்லிய (சித்தாந்த) மார்க்கத்தில் யான் நிற்குநா ளெந்நாளோ?

ஆதியந்த—

(அநாதி நித்தியமாயுள்ள) அருமையாகிய (திருவருட்) பரஞ்சோதி என்று சொல்லிய நியாய மொழி கண்டு அப்பரஞ் சோதியில் (இரண்டறக் கலந்து) நான் நிற்கு நாளெந் நாளோ?

# 7. அடிகளாரின்-சமயநிலை

மனிதனை ஒரு நெறியில் செலுத்தி முன்னேற்றுவது, பக்குவப்படுத்துவது சமயம் ஆகும். அடிகளார் அவ்வாறு கொண்டு சென்ற நெறி சைவ சமயம் ஆகும். ஆனால் சான்றோர் சிலர்அவரைவேதாந்திஎன்பர் வேதாந்தி' என்ற சொல்சங்கரர்தோற்றத்திற்குப் பின் கேவலாத்வைதியையே சுட்டும். எனவே,அடிகளாரைச் சிலர் கேவலாத்வைதி என்று கருதினர். ஆனால் அஃது உண்மை அன்று. வேதாந்த சித்தாந்த சமரச நோக்கில் அவர் முயன்றது ஏதோ உண்மையே.

''வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே!,' (சித்தர்கணம் (1-10),

''......வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி'' (மௌனகுரு. 40,)

''வேதாகமத் துணிபு இரண்டில்லை; ஒன்று''
(மௌனகுரு. 3 (38)

''வேதாந்த சித்தாந்த சமரச நிர்வாக நிலை''
(மௌனகுரு 3 (39)

வேதாந்த வாதிகளை அருள்நோக்கோடு கண்டு ஓரோர் பொழுது ஆதரித்ததும் உண்மையே.

''வருவான்வந் தேனெனல்போல்
மன்னிஅழியுஞ் சாகத்தைத்
தெரிவாக இல்லையென்ற
தீரம் பராபரமே'' (106)

மேலும் இரண்டனையும் ஒன்றெனச் சீரணித்துக் கொள்ள உபாயமும் கூறுகின்றார்.

> ''சந்ததமும் எனதுசெயல் நினதுசெயல் யானெனுந்
> தன்மைநினை யன்றி யில்லாத்
> தன்மையால் வேறலேன்; வேதாந்த சித்தாந்த
> சமரச சுபாவம் இதுவே'' (பரிபூரணானந்தம் 5)

ஆனால், அவர் கேவலாத்வைதத்தை ஏற்றுக் கொள்ள வில்லை.

> ''நாம்பிரம மென்றால் நடுவேநன் றுண்டாம்''
> (எந்நாட்.(7)
> ''யாங்களே கடவுள் என்றிடும் பாதகத்தவர்''
> (சிற்சுகோதய 10)

என்ற தொடர்கள் அது குறித்த அவர் கருத்தை விளக்குவன. அன்றியும், மெய்கண்டார் கண்ட சிவாத்துவித நெறியே சிறந்த நெறி என்பதை விளக்கப் போந்த அடிகளார்,

> 'பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
> மெய்கண்ட நாதனருள் மேவும்நாள் எந்நாளோ!''
> (எந்நாட், குருமரபு. 4)

என்பர். 'மெய்கண்டார்' என இங்குக் குறிப்பது எண்ணிப் பார்க்கத் தக்கது. இவற்றை யெல்லாம் நோக்கின் அவர் கேவலாத்துவித நோக்கில் 'வேதாந்தி' அல்லர் என்ற கருத்து பெறப்படும்.

மேலும் இவரைச் சிலர் அனைத்திறை கொள்கையர் (Panthiest) என்பர்.[1] இவர் அகண்ட தத்துவக் கொள்கையைத் தவறாகப் புரிந்து கொண்டோர் கருத்தே ஆகும் இது. 'நாமென்பார்' முதலாகப் பல சமய வாதங்களாற் மனம் பாதரசமாய்ச்

---

1. (Encyclopoedia Britanica, Vol.26 (Ind Edi, P.390) (Dr. Reinhdd Rost)

சஞ்சலப்படுவதன்றி ஒருமையின்பம் உறவில்லை என்பதை அடிகளார்,

'பூதலய மாகின்ற மாயைமுத லென்பர் சிலர்
பொறிபுலன் அடங்குமிடமே
பொருளென்பர் சிலர்; கரண முடிவென்பர் சிலர்குணம்
போனஇட மென்பர்சிலபேர்;
நாதனடி வென்பர்சிலர்; விந்துமய மென்பர்சிலர்
நட்டநடு வேஇருந்த
நாமென்பர் சிலர்; உருவ மாமென்பர் சிலர்; கருதி
நாடில்அரு வென்பர்சிலபேர்;
பேதமற உயிர்கெட்ட நிலையமென் றிடுவர்சிலர்;
பேசில்அரு ளென்பர் சிலபேர்;
பின்னுமுன் னுங்கெட்ட சூனியம தென்பர் சிலர்;
பிறவுமே மொழிவர்; இவையாற்
பாதரச மாய்மனது சஞ்சலப் படுமலாற்
பரமசுக நிட்டைபெறுமோ?
பார்க்கும்இடம் எங்கும்ஒரு நீக்கமற நிறைகின்ற
பரிபூர ணானந்தமே!

(பரிபூர.6.)

இவர் வழங்கும் சமயசமரசம் எல்லாம் சைவசமய நெறிக்கும் பலவற்றிற்கும் உள்ள வேறுபாட்டைநிலைநாட்டுவதாகவே முடிகின்றதைக் காணலாம். (பரிபூரண 5)

இவர்க்கு வாய்த்த குரு இவருக்குப் போதித்த நெறி சைவமே. இதனை,

''பாதி விருத்தத்தால்இப் பார்விருத்தமாக உண்மை
சாதித்தார் பொன்னடியைப் தான்பணிவ
தெந்நாளோ!''

—(எந்நாட் குருமரபு 4)

(சித்தி சுபக் 282-அறியாமை அறிவதகற்றி)

இங்குக் குறிக்கப் பெறும்நூல் சைவசாத்திரம் பதினான்குள் சிவஞான போதத்திற்கு அடுத்து வைத்து எண்ணப் பெறும் சித்தியார் ஆகும்.

அவ்வாறே அடிகளாருடைய அணுக்க மாணவர் அருளையரும், "சிவனடி யாரைச் சிவன் எனக் காண்பவன்", என்று அடிகளார் சமயநிலையைக் குறிப்பிடுவராயினர் (அருள் வாக்கியர் அகவல் அடி 219)

தோத்திர நூல்களில் சைவசமய நூல்களைக் கற்று அதில் இவர் தோய்ந்த நிலை முன்பு எடுத்துரைக்கப் பெற்றது. அவ்வாறு சாத்திரத்திலும் இவர் ஈடுபாடு கொண்டு, கற்று, துய்த்துத் தெளிந்தார்.

"புராதனமெய்ச் சிவஞான போதமெனுஞ்
சித்தாந்தப் பொருளி யாவுந்
தராசுமுனை யாநிறுவிச் சாயாமல்
அநுபவத்தில் தமிழைப் பாடி..."

எனத் தனிப் பாடல் ஒன்று அடிகளார் சாத்திர நெறி சிவஞான நெறியே என்பதை எடுத்துரைக்கிறது. பதினான்கு சாத்திரங்களில் வரும் தொடர்கள், கருத்துகள் பல அடிகளார் பாடல் பலவற்றில் பயின்று வரக் காணலாம். எந்நாட் கண்ணி, குருமரபின் வணக்கம் கூறுங்கால் சிவஞான போதங் கண்ட மெய்கண்டார், சித்தியார் யாத்துரைத்த திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியார் சிவப்பிரகாசம்,

பதினான்கு சைவ சமயச் சாத்திரங்களையும் முறையாகக் கற்றுணர்ந்த சான்றோர் இவர் என்பது அவற்றின் தாக்கங்கள் இவர் பாடல்களில் அமைந்து விளங்குவதால் அறியலாம். காட்டுகள் ஒவ்வொன்று காணலாம்.

"சாவிபோஞ் சமயத் தாழ்ந்து சகத்திடை
தவிக்கின்றேன்" (சிவன்செயல், 2)

எனக் கலங்கும் அடிகளார் திருவுள்ளத்தில்,

''சாவிபோம் மற்றைச் சமயங்கள் புக்குநின்று
ஆவி யறாதேயென் றுந்தீபெற—அவ்வுரை கேளாதே
உந்தீபற''

என்ற திருவுந்தியார் பாடல்நின்று நிலவியிருக்கக் கூடும்.

''வீட்டிலே சென்று வினையொழித்து நின்றிடிலென்
நாட்டிலே நல்வினைகள் செய்திடிலென்...'' (43)

என்ற திருக்களிற்றுப் படியார் போக்கு,

''மோகத்திருந்தும் என் யோகத்திருந்தும் என்''
(சச்சிதா 6)

எனும் அடிகளார் போக்கை ஊக்கியிருக்கலாம்.

சிவஞான போதத்தின் தாக்கம் நிறைய காணப்பெறுகின்றது.

''காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டல்'' (சூ-11)

'கண்ட கண்ணுக்குக் காட்டுங் கதிரெனப்
பண்டும் இன்றும்என் பால்நின் றுணர்ந்திடும்
அண்டனே... ... ...'' (பொன்னை 64)

பதினோராஞ் சூத். இரண்டாவது அதிகரணம் இரண்டாவது வெண்பா (71)

''மன்னும் அரனே மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்

''இரும்பை காந்த மிழுக்கின்ற வாறெனைத்
திரும்பிப் பார்க்கவொட் டாமல் திருவடிக்
கரும்பைத் தந்து—'' (பொன். 24)

சித்தியார் கருத்தும் பல இடங்களில் பயன்படுத்தப் பட்டுள்ளது. (சுபக்கம் 261)

''ஓதுசம யங்கள் பொருளுணரு நூல்கள்
ஒன்றோடொன் றொவ்வாமல் உளபலவும் இவற்றுள்

யாதுசம யம்பொருள்நூல் யாதிங் கென்னில்
இதுவாகும் அதுவல்லதெனும்பிணக்க மின்றி
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம் அது சமயம்...''

''செப்பரிய சமயநெறி யெல்லாம் தம்தம்
தெய்வமே தெய்வம்எனும், செயற்கையான
அப்பரிசா ளரும்அஃதே பிடித்தால் அப்பால்
அடுத்த அந்நூல் களும்விரித்தே அனுமானாதி
ஒப்பவிரித் துரைப்பர்; இங்ஙன் பொய்மெய் என்ன
ஒன்றிலைன் றெனப்பார்ப்ப தொவ்வா தார்க்கும்
இப்பரிசாம் சமயமுமாய், அல்ல வாகி
யாதுசம யமும்வணங்கும் இயல்ப தாகி...''

(ஆகா. 9.)

மேலும் 'அறியாமை அறிவகற்றி...' என்ற சித்தியார் பாடலை (சுபக்கம். 282) 'பாதி விருத்தத்தால் இப்பார் விருத்தமாக' என்ற தம் பாடலில் அடிகளார் எடுத்துச் சுட்டுகின்றார்.

அடுத்து அருணந்தி சிவாச்சாரியாரின்இருபா இருபஃதின் இருபதாவது அகவலில் வரும்,

''ஒன்றா காமல் இரண்டா காமல்
ஒன்று மிரண்டு மின்றா காமல்''

என்பனவற்றின் கருத்து,

''ஒன்றிரண்டு மில்லதுவாய் ஒன்றிரண்டு முள்ளதுமாய்
நின்ற சமத்துநிலை நேர்பெறுவதெந்நாளோ.'

(எந்நாட். 14)

அறிஞர் உரையில் அடிகளார் குறிப்பிடும் 'அற்றவர்க்கு அற்ற சிவன்' என்ற தொடரும் இப்பாடலின் செல்வாக்கு என்று கூறுமாறு அமைந்துள்ளது.

மணவாசகங் கடந்தாரின் உண்மை விளக்க முதல் வெண்பாவின் முதலிரண்டு அடிகளும்,

''பொய்காட்டிப் பொய்யகற்றிப்
போதானந்தப்பொருளாம்
மெய்காட்டும் மெய்கண்டாய்''
'மெய்கண்டார்காணாத' என்ற கண்ணிக்குமுன்னோடியாய் உள்ளது.

''ஏகமாய்த் தம்கால எல்லைகளின் மீளும்
எண்ணரிய சத்தியதாய் இருளொளிர இருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
மூலமலமாய்......'' (சிவப்—20)

''காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப் போற்
கட்டுண்டிருந்த எமை...''

திருவருட் பயன் இருமலநிலைப்பாடல் (23)

''ஒருபொருளுங் காட்டா திருள்உருவங் காட்டும்
இருபொருளுங் காட்டா திது... என்பது

'உன்னிலையும் என்னிலையும் ஒருநிலை எனக்கிடந்து
உளறிடும் அவத்தையாகி
உருவுதாள் காட்டாத ஆணவமும் ஒளிகண்
டொளிகின்ற இருளென்னவே
தன்னிலைமை காட்டாது...

வினாவெண்பாவில் வந்துள்ள 'காண்பானும், காட்டுவதும் காண்பதுவும் (11) என்ற தொடர் 'காண்பானுங் காட்டுவதுங் காட்சியுமாய்' எனச் சிறிது மாறி அமைந்துள்ளது.

போற்றிப் பஃறொடையில்,

''இறவாத இன்பந் தெமை இருத்த வேண்டிப்
பிறவாத முதல்வன் பிறந்து...''

''உண்டி உறக்கம் பயம்இன்பம் ஒத்தொழுகிக்
கொண்டு மகிழ்ந்த குணம் போற்றி''

எனவரும் இருதொடைகளின் கருத்துகளும் சொற்களும் விவேகங்காட்ட,

"ஊனுறக்கம் இன்பதுன்பம் பேர்ஊர் ஆதி
ஒவ்விடமும் எனைப்போல உருவங்காட்டி..."
(ஆகார-17)

என்ற அடிகளார் பாட்டில் இடங்கொண்டுள்ளதை உணரலாம்.

"ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடமொன்றுமே விடிலொன்
றொளிக்கு மெனினும் இருடாது..."

என்ற கொடிக்கவி நோக்கு,

"போதமென்பதே விளக்கொவ்வும்,
அவித்தைபொய்யிருளாம்
தீதிலாவிளக் கெடுத்திருள்
தேடவும் சிக்காது..."

"தாம்பிரமங் கண்டவர்போல் தம்மைக்கண் டாங்கதுவே
நான் பிரமம் என்பவர்பால் நண்ணாதே......"

என வரும் நெஞ்சுவிடு தூதின் கண்ணி,

"நாம்பிரமம் என்றால் நடுவேயொன் றுண்டாமால்..."
என்று வரும் அடிகளாரின் எச்சரிக்கை அடிப்படையாக விளங்குகிறது,

"ஒன்றுந் சுகவடிவுக் குள்ளான தம்பிரான்
அன்றி ஒருபொருளும் ஆகாதே—நிறைமுந்திச்
சொல்லரிய இந்தச் சுகத்துக் கதீதமாய்
நில்அவன் தானும் நிலை" (57)

என்ற துகளறு போத வெண்பா தரும் அநுபவம்

"தேக்கி இன்பந் திளைக்கத் திளைக்கவே
ஆக்க மாய்எனக் கானந்த மாகியே
போக்கி னோடு வரவற்ற பூரணம்
தாக்கி நின்ற வா தன்மய மாமதே"
(பொன். 28)

என்ற பாடலில் ஒளிவிடுகின்றது.

தாயுமான அடிகளாரின் சமய நிலை, அவர் வழிபடு கடவுளாகக் குறிக்கப்பெறும் கடவுளர்களாலும் அறியப் பெறும். சிவன், மலைவளர் காதலி, அகிலாண்ட நாயகி, வெண் கோட்டனாகிய விநாயகர் (1091) ஆறுமுகத்தானாகிய முருகன் (1092) சண்டேசுவரர் (1093) வழிபடுவதாகப் பாடல் குறிப்புகள் வருகின்றன. இவரெல்லாம் கார்பூத்த கண்டனொடு கொண்டிருந்த தொடர்பு பற்றியே அடிகளாரின் வணக்கத்துக்கு உரியராகின்றனர். அடிகளார் பாடல் பலவற்றுள் சிவபிரானே வணக்கத்துக்கு உரியராக இடம் பெற்றுள்ளார்.

மலரோன், திருமால் முதலிய கடவுளர்களிலிருந்து சிவபெருமானைத் தோற்றத்தளவில் பிரித்துணர்த்தவல்ல புற அடையாளங்கள் பல உள்ளன. அவை புலப்படுமாறு அடிகளார் தம் பாடல்களில் குறிப்பிட்டுச் செல்கின்றார். 'வெண்ணீற்றன்' (168); 'நீறார் மேனி' (288); 'நாறு நற்சாந்தம் நீறா' (298) 'வெண் பொடி பூத்த மேனி' (407)

சிவபிரான் நீலமணிமாடறு; 'ஆலம் அமுதாக இலையோ' (12) காள கண்டமுமாய் (30); 'கார்பூத்த கண்டன்' (31); ஆலம் உண்டும் அமிர்துருவாய் வந்த' (197) 'நஞ்சமே அமுதாக் கொண்ட கூறருங் குணத்தோய்' (298), ''விடத்தை அமுதாக்கும் பேரானந்தச் சித்தன்' (320) 'விடத்தை நல்லமிர்தா உண்டு' (352) என்று பலவாறு இடம் பெற்றுள்ளது

'முக்கண்' அவன் அடையாளங்களுள் ஒன்று. 'நுதற்கண் தோன்ற' (168) 'முக்கண் அருட் செம்பொன் சோதி' (214) 'முக்கண் நாதன்' (242) 'முக்கட் பிரான்' (243) கண்ணுதலோன்' (244) இவ்வாறு பல இடங்களில் 245, 246, 247, 248; 249, 250) சுட்டப் பெற்றுள்ளது.

சிவபிரானின் சடாமுடி பின்வருமாறு குறிக்கப் பெற்றுள்ளது. 'விரிசடை கங்கையன்' (168) 'கற்றைவார்

சடை' (244, 270) 'கொன்றைச் சடை' (406) 'திரை உந்து இரையும் சடை சென்னியன்' (471), 'மலிபுனல் சேர் பொன் முடியன்' (483), 'வெள்ளம் சூலவுசடை' (487). ஒரு பாடலில் சிவபிரான் முடியில் அணித்துள்ள கங்கை, பிறை, கொன்றை ஊமத்தை முதலிய அனைத்தையும் குறிப்பிடுகின்றார்.

> "மதியும் கங்கையும் கொன்றையும் மத்தமும்
> பொதியும் சென்னிப் புழை" (264)

இறைவன் முடியில் அணிந்துள்ள பிறையும் பல பாடல்களில் பேசப் பெறுகின்றது. 'வெண் பிறைச் சடிலக் கோ' (286) 'திங்கள் பாதி திகழ' (225) 'அம்புலி ஆட' (406), பிள்ளைமதிச் செஞ்சடையான்' (504) 'திங்கள் அணிச் செஞ்சடையான்' (507)

அவன் ஆடையும் அணியும் அமைந்துள பாடல் சில. 'புலியின் அதளுடையான்' (483) 'இருங்கலை உரியர்' (298) 'பணி அணி' (225), 'செங்கட் பணியாய்' (507)

அவன் படைகள் பின்வருமாறு பேசப் பெறுகின்றன? பூதப் படையான்' (483); துங்க மழு உடையாய்' (507) 'சூலப் படை உடையாய்' (507)

சிவபிரான் நஞ்சுண்டது (12, 320, 352); மேருவை வில்லாக வளைத்தது (12); காலனைக் காலால் உதைத்தது (201, 502, 763) பிரமன் தலையைக் கிள்ளியது (167, 483, 521) காமனை நெற்றிக் கண்ணால் எரித்தது (502); உபமன்யுவுக்கு பாற்கடலை அனுப்பியது (502); தாயாய் பணிசெய்தது (559); அருச்சுனன் வில்லாம்அடிபட்டது (422) சாக்கிய நாயனாரால் கல்லடியுண்டது (422); பரவை நாச்சியார் இல்லத்திற்குத் தூதாகச் சென்றது (551)

படைத்தல், காத்தல், ஒடுக்கல், மறைந்தல், அருளல் ஆகிய இறைவனின் ஐந்து செயல்களையும் தனியாகவோ, இணைத்தோ அடிகளார் குறிப்பிட்டுச் செல்கிறார்.

"ஓங்கார மாம்ஐந் தெழுத்தாற்
புவனத்தை உண்டு பண்ணிப்
பாங்கா நடத்தும் பொருளே!
அகண்ட பரசிவமே" (409)

இன்னொரு பாடலில் தன்னைப் படைத்து நடத்தும் இறைவன் திருவருள் நெறியைப் பின்வருமாறு அடிகளார் படுகின்றார்.

"விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையில்
பதிய வைத்த பசுபதி! நின்அருட்
கதியை எப்படிக் கண்டு களிப்பதே" (256)

'இறைவன் நஞ்சுண்டது உலகைக் காத்தற்கே' என்ற கருத்து நீலமணி மிடற்றைப் பற்றி அடிகளார் குறிப்பிடுவதில் எல்லாம் அடங்கியுள்ளது எனலாம்.

மேலும், இறைவன் அருளிக் காத்தல் "வரதமோடு அபயகைகள் முறைமையின் ஓங்க" (169) என்ற தொடரால் குறிக்கப்பட்டிருக்கிறது. ஆக்கல், அளித்தல், அழித்தல் ஆகிய மூன்று செயல்களும் பின்வரும் பாடலில் அமைந் திருக்கக் காணலாம்,

"ஆக்குவை மாயையாவும்; நொடியினில் அவற்றை மாள
நீக்குவை; நீக்கமில்லா நினைப்பொடிமறப்பு மாற்றிப்
போக்கொடு வரவும்இன்றிப் புனிதநல் லருளா னந்தம்
தாக்கவும் செய்வா யன்றோ? சச்சிதானந்த வாழ்வே"
(570)

"இடம் ஒரு மடவாள்" (273); "மலைமகள் உரு இருக் கின்ற மேனி" (241); "பறை நிறைந்த பரப்பு" (245) "அருள் தையல் ஒருபுறம் வாழ் சகநாதன்" (252); "மங்கை ஒருபால் உடையாய்" (507) "பைங்கொடி சேர் செம்பயிர்" (1065) என்று இவ்வாறு பல இடங்களில் குறிப்பிடுகின்றார்.

இம்முத்தொழிலையும் நிமித்த காரணமாக நின்று இறைவன் செய்கின்றான் என்ற உண்மை பின்வரும் பாடல் மூலம் தெளிவாகின்றது.

"ஆக்கி அளித்துத் துடைக்கும் தொழில்
அத்தனை வைத்தும் எள்ளத்தினை யேனும்
தாக்கற நிற்கும் சமர்த்தன்—உள்ள
சாட்சியைச் சிந்திக்கத் தக்கது தோழி!
(சங்கர! சங்கர! சம்பு!) 1439

இச்செயல்களை நிமித்த காரணன் ஆகியசிவபெருமான் அருட் சக்தியின் மூலம் நிகழ்த்துவிக்கின்றான் என்ற சைவ சித்தாந்த தத்துவத்தை,

"இடம்ஒரு மடவாள் உலகனைத் தீந்திட்
டெவ்வுல கத்தையு மீன்றும்
தடம்உறும் அகிலம் அடங்குநாள் அம்மை
தன்னையும் ஒழித்துவிண் ணணவே
படருறு சோதிக் கருணையங் கடலே" (273)

என இப்பாடல் குறிக்கிறது எனலாம்.

மறைத்தலும், அருளலும், பின்வரும் பாடல் பகுதியில் விளங்குகின்றது.

"ஆதரவு வையாமல் அறுவினை மறைப்பதும்நின்
அருள்; பின்னும் அறிவின்மைதீர்த்
தறிவித்து நிற்பதும்நின் அருள்" (35)

பின்வரும் பாடலில் ஐந்தொழில்களும் மிக அழகாகக் குறிக்கப்பட்டுள்ளன.

"காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற (31)
கண்ணிலாக் குழவியைப்போற்
கட்டுண் டிருந்தஎமை வெளியில்விட் டல்லலாங்

...... ...... ...... ...... ......

இத்தொழில்களை அருட்சக்தி (அ) உமையின் ஊடாக இறைவன் நிகழ்த்துவிக்கிறான் என்ற உண்மையே உமை யொரு பாகன் என்னும் உருவத் திருமேனி எடுத்துரைக் கின்றது எனலாம். இவ்வுமையொருபாகன் கருத்து பல பாடல்களில் வருகின்றது.

சிவபிரான் மற்ற கடவுளர்க்கெல்லாம் மேலோன் என்ற தலைமைத்தன்மை பல பாடல்களில் இயம்பப்படுகின்றது. 'பிரம்மதேவனே! நீ படைத்தாய்! உன் தந்தையாகிய திருமால் காத்தான். அவற்றை அழித்தான் முக்கட் கடவுள். இதனால் ஆண்டவன் யாரென்று விளங்குகிற தல்லவா (166); 'படைப்பும் காப்பும் மாயையோடு ஒழிந்தது. இறுதியில் நின்றவன் யாவன்? அவனன்றோ தலைவன்?' (167), 'எனவே கோதிலா நடனம் செய்யும் கூத்தப்பெருமானே முதல்வன்' (169) 'பிரம்மனும், திருமாலும் பணி செய்யும் தலைவர் சிவபெருமான் (402). இவ்வாறு தம்சமயக் கடவுளராகிய சிவபிரானின் ஏற்றமும், தோற்றமும், தொழிலும் தெளிவாகப் பல பாடல்களில் பலவாறாக உரைத்த அடிகளார் தம் சமயத் தத்துவத்தைப் பின்வருமாறு பேசுகின்றார்.

பசு : 'தன் உண்மை' எனவரும் கண்ணிப் பகுதி 'ஆன்மாவின்' உண்மையை உணர்த்துவது ஆகும். 'உடம்பு ஆன்மா' அன்று; தேகாதி முதலான தத்துவங்களுக்குள் பொருந்தி இருக்கிறது. ஆன்மா, முக்கூற்றுத் தத்துவங் களாலாகிய நிலையில்லாச் சட உருவைத் தாங்கி நிற்கும் சித்து, ஆன்மா, ஐம்பொறி ஆன்மா அன்று, அந்தக் கரணங்கள் ஆன்மா அன்று, முக்கணங்கள் ஆன்மா அன்று, பிராணவாயு ஆன்மா அன்று. 1169—1176 என எட்டு கண்ணி களால் 'ஆன்மா'வின் உண்மையை அடிகளார் நிலை நாட்டுவர். இவ்வாறு தன்பவாதியை, தேகான்ம வாதியை, இந்திரிய ஆன்மவாதியை, குணான்ம வாதியை, நாணான்ம வாதியை மறுப்பர்.

உளதில தென்றலின் எனதுட லென்றலின்
ஐம்புல னொடுக்க மறிதலின் கண்படில்
உண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா

—எனும் போதத்தின் மூன்றாம் சூத்திரத்திற்கு சுவை விளக்கமாக ஏழு, அதிகரணங்களை எட்டுக் கண்ணிகளால்

விளக்குவதாக அமைந்துள்ளன எனலாம். 'மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா' என்ற இறுதி அடிக்கு விளக்கமாக,

''தத்துவமாம் பாழ்த்த சடஉருவைத் தான் சுமந்த
சித்துரு வாம் எம்மைத் தெரிவிப்ப தெந்தாளோ' (1171)

என்ற கண்ணி அமைந்துள்ளதைக் காட்டாகக் காணலாம்.

அடிகளார் 'உடல் பொய்யுறவில்' 'சதசத்தாகிய ஆன்ம இயல்பைப் பின்வருமாறு உணர்த்துவர்

அறியாமை பாரின் அதுவாய், அறிவாம்
நெறியான போததுவாய் நிற்கும்—குறியால்
சதசத் தருளுணர்த்தத் தான்உணரா நின்ற
விதமுற் றறிவெனும் பேர் மெய்'' (481)

சத்து ஆகிய பதி அசத்தினை அறியாது. அசத்தாகிய பாச தத்துவ உலகு பதியை அறியாது. சத்தையும் அசத்தையும் அறிய வல்லது சதசத்தாகிய ஆன்மாவாம்; பசுவாம். அது இறைவன் உணர்த்த உணர்ந்து கொள்ளும் திறம் பெற்றிருத்தலின் அதனை 'அறிவு' என்று அளப்பது உண்மையே' எனினும் அடிகளார் போதத்தையும் சித்தியாரையும் அடியொற்றிச் செல்வதைப் பின்வருமாறு காணலாம்.

யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்தில தறியாது
இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா

போதம் சூ. 7

சத்தசத் தறிவ தான்மாத்
தான்சத்தும் அசத்து மன்று
நித்தனாய்ச் சதசத் தாகி
நின்றிடும்.........

சித். சுபத். 250

சத்துடன் நின்று நீக்குந் தன்மையாற் சசசத்தாமே.

சிவப்பிரகாசம்— 27.

இன்னும் சித்தியார் 'ஆன்மா' குறித்துக் கூறும் உவமையையும் அடிகளார் காட்டுவதிலிருந்து, எவ்வாறு பருந்தும் நிழலும் போல் அடிகளார் பாடலும் சித்தாந்த சாத்திரக் கருத்துகளும் ஒன்றிச் செல்கின்றன என அறியலாம்.

'சார்ந்ததன் வண்ணமாகும்' இயல்புடையது ஆன்மா. எனவே, அதனைச் சித்தாந்திகள் 'பளிங்கனைய சித்து' என்பர். சிவஞான போதம் எட்டாம் சூத்திரம் மூன்றாம் அதிகரணத்திலுள்ள,

பன்னிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்னிறமே காட்டுந் தகைநினைந்து – பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா
மெய்கண்டான்
மெய்ப்பொருட்டுத் தைவமாம் வேறு—

என்ற வெண்பா இதனைக் குறிக்கும். இதற்கு விளக்கமாகச் சித்தியார்,

பன்னிறங்கள் அவைகாட்டும் படிகம்போல் உள்ளம்
பலபுலன்கள் நிறங்காட்டும் பரிசுபார்த் திட்டு
இந்நிறங்கள் என்னிறம்அன் றென்று தன்றன்
எழில்நிறங்கண் டருளினால்இந்நிறத்தின் வேறாய்ப்
பொய்ந்நிறஐம் புலன்நிறங்கள் பொய்யெனமெய்
கண்டான்
பொருந்திடுவன் சிவத்தினொடும்........

(சுபக்கம் 289)

என்று போதக் கருத்தை விளக்கி விரித்துரைப்பர்.

இச் சார்ந்ததன் வண்ணமாகில் ஆன்ம இயல்மை, போதம் குறித்து, சித்தியார் விளக்கிய ஆன்ம இயல்பைத் தான் கலந்து கவிதையாக்கி, உணர்வோடும் உயிர்ப்போடும் உரைப்பர் அடிகளார்.

"வந்தென்உடல் பொருள்ஆவி மூன்றும் தன்கை
வசமெனவே அத்துவா மார்க்கம் நோக்கி,
ஐந்துபுலன் ஐம்பூதம், கரண மாதி
அடுத்தகுணம் அத்தனையும் அல்லை; அல்லை;
இந்தஉடல் அறிவறியா மையும்நீ அல்லை;
யாதொன்று பற்றின்அதன் இயல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீ" (149)

சார்ந்ததன் வண்ணமாய் ஆனமையும் ஆதல் உயிர் இயல்பு ஆனமையின் ஆணவத்தோடு ஒன்றிக் கிடந்த கேவல அவத்தையினின்று விடுபட்டு உண்மை ஞானமயமான இறைவனோடு ஒன்றுவது எந்நாள்? என்று ஒரு பாடலில் ஏங்குகின்றார்

"ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ!"
(1298)

உயிர் உணரும் நிலைகள் ஐவகை படிமுறைகளாக (அவத்தைகளாக) சித்தாந்தக் கட்டளை குறிப்பிடுகின்றது. அவை விழிப்பு நிலை (waking Self-Consciousness) கனவு நிலை (Dream-trancendental tol Consciousness) உறக்க நிலை(Sub-Consciousness,) துரியநிலைPure-Consciousness துரியாதீதநிலை (Cosmic-Consciousness)என்பவையாகும்.

விழிப்பு நிலையில் முப்பத்தைந்து தத்துவங்களோடு நெற்றியில் உயிர் செயல்புரிகின்றது. கனவு நிலையில் இருபத்தைந்து தத்துவங்களோடுகண்டத்தில் (10 புறக்கருவிகள் நீங்கலாக) செயல்புரிகின்றது. உறக்க நிலையில் சித்தம், பிராணம், புருடன் ஆகிய மூன்று தத்துவங்களோடு மட்டும் இதயத்தில் உயிர் இயங்குகின்றது. துரிய நிலையில் உயிர் தங்கும்போது சித்தமும் நழுவி விடுகிறது. துரியாதீத நிலையில் மூலாதாரத்தில் புருடன் மட்டுமே நாபியில் நிலைபெறுகின்றது. இச்சித்தாந்த தத்துவம் அடிகளார் பாடல்களில் அழகாகவும் முறையாகவும் கூறப் பெற்றுள்ளது.

''சாக்கிரமாம் நுதலினில்இந் திரியம் பத்தும்
சத்தாதி, வசனாதி, வாயு யத்தும்,
நீக்கமில்அந் தக்கரணம் புருட னோடு
நின்றமுப் பானைந்தும்; நிலவும்; கண்டத்
தாக்கியசொப் பனமதனில் வாயுபத்தும்;
அடுத்தனசத் தாதிவச னாதியாக
நோக்குகர ணம்புருட னுடனே கூட
நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணி யோரே'' (346)

''சுழுத்திஇத யந்தனிற்பி ராணன் சித்தம்
சொல்லரிய புருடனுடன் மூன்றதாகும்;
வழுத்தியாநா பியில்துரியம்; பிராண னோடு
மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கும்;
அழுத்திடுமூ லந்தன்னில் துரியா தீதம்;
அதனிடையே புருடன்ஒன்றி அமரும் ஞானம்
பழுத்திடும்பக் குவரறிவர் அவத்தைஐந்திற்
பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசு தானே'' (347)

இத்தகு காரிய அவத்தைகள் ஐந்தொடு கேவல, சகல சுத்த எனும் காரண அவத்தைகள் மூன்றையும் சித்தாந்தம் குறிப்பிடுகின்றது. அவற்றை அடிகளார் பின்வரும் பாடல்களில் முறையாகக் கூறுகின்றார்.

''நித்திரையாய் வந்து நினைவழிக்கும் கேவலமாம்
சத்துருவை வெல்லும் சமர்த்தறிவ தெந்நாளோ!'' (1166)
''சன்னல்பின்ன லான சகலமெனுங் குப்பையிடை
முன்னவன்ஞா னக்கனலை மூட்டும்நாள் எந்நாளோ!''
(1167)
''மாயா விகார மலமொழிசுத் தாவத்தை
தோயா அருளைத் தொடரும்நாள் எந்நாளோ!''
(1168)

கேவல சகல அவத்தைகள் நீங்கித் தீட்சை பெற்ற இறையருள் நிலையில்தான் நிற்குமாறு தீட்சை அருளிய மௌன குருவை நினைந்து அடிகளார் பின்வருமாறு பாடுகிறார்.

"கேவல சகலம் இன்றிக் கீழொடு மேலாய் எங்கும்
மேவிய அருளின் கண்ணாய் மேவிட மேலாய் இன்பம்
தாவிட இன்பா தீதத் தனியிடை இருத்தி வைத்த
தேவெனும் மௌனி செம்பொற் சேவடி சிந்தை
செய்வாம்." [336]

கேவலத்திலும் சகலத்திலும் மாறி மாறி, பிறந்தும் இறந்தும் பிறந்தும் இறந்தும்இறைவன் திருவருள் கிடைக்கப் பெறாமல் வருந்தும் தன்னிலையைக் கூறும்போது தன்னிலையைக் குறிப்பிடுவதுபோல உலகில் ஆன்மாக்கள் ஆண்டவனை அடைதலாகிய சுத்த அபத்த நிலையைப் பெறாது வருந்துவதனைப் பின்வரும் பாடலில் குறிப்பிடு கின்றார்.

குறிக ளோடுகுணம் ஏதும் இன்றிஅனல்
ஒழுக நின்றிடும் இருப்பனல்
கூடல் இன்றிஅது வாய் இருந்தபடி
கொடிய ஆணவ அறைக்குளே
அறிவ தேதும்அற அறிவி லாமைமய
மாய் இருக்கும்எனை அருளினால்
அளவி லாததனு கரண மாதியை
அளித்த போதுனை அறிந்துநான்
பிறிவி லாதவணம் நின்றிடாதபடி
பலநிறங் கவரும் உபலமாய்ப்
பெரிய மாயையில் அழுந்தி நின்னதுப்ர
சாதநல்லருள் மறந்திடும்
சிறிய னேனும் உனை வந்த ணைந்துசுக
மாய்இருப்பதினி என்றுகாண்
தெரிவ தற்கரிய பிரம மேஅமல
சிற்சுகோதய விலாசமே (123)

**பாசம் :** ஒரு விலங்கைக் குறிப்பிட்ட எல்லைக்குமேல் இயங்க விடாமல் கட்டி வைத்திருக்கும் முப்புரிக்கயிறுபோல ஆன்மாவைத் தன்னளவினதாக அகப்படுத்திக் கொண்டிருக்கும் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்கள் மூன்றும் கூடியதே பாசமாம். இதில் ஆணவமலம் இயல்பாக ஆன்மாவோடு இயைந்துள்ளது. இந்த இயைபைச் சித்தியார் 'பசுத்துவம் உடையனாகிப் பசுவென நிற்கும் ஆன்மா, [சுபக்கம்—2101 என்று குறிப்பிடும். அடிகளார் 'கேடில்பசு பாசமெல்லாம் கீழ்ப்பட'[1196], 'கெடுத்தே பசுத்துவத்தை' [1248) என்று குறிப்பிடுவார். இன்னோர் இடத்தில் 'பாச நிகளங்களெல்லாம் பஞ்சாக' [1364] என்கிறார்.

**ஆணவமலம் :** இதனை அடிகளார், 'கவ்வுமலமாகிய நாக பாசத்தினால் கட்டுண்ட உயிர்கள்' என்கின்றார். இது அறிவை மறைப்பதால் இதன்கண் அகப்பட்டிருக்கும் உயிரின் நிலையை,

> "காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
> கண்ணிலாக் குழவியைப் போற்
> கட்டுண் டிருந்த எமை வெளியில்விட் டல்லலாங்
> காப்பிட் டிருந்த எமை" (31)

என்று சொல்கிறார். இந்த ஆணவமலத்தின் காரியமாகச் சகல அவத்தையில் உயிரிடத்தே தோன்றுகின்ற அசங்காரம் இந்த ஆணவத்தினும் கொடிது (45) என்றும், 'நானான் இங்கு எனும் அகந்தை' [179] என்றும் 'நான் என்னும் ஒரு மகர வாய்'(112)என்றும் 'இராவணாதிகாரம்' (45)என்றும் கூறுவர். ஆணவமலத்தைஇயல்பாகச் செம்பில் இயைந்திருக்கும் களிம்பிற்கு உவமையிட்டுக் கூறும் சைவசித்தாந்தம். 'செம்பினிற்களிம்பு ஏய் என்றும் அஞ்ஞானங் காட்டும் ஆணவம் இயைந்து நின்றே' [சித்தியார்—சுபக்கம் + 170] இதனை அடிகளார் 'கருவருவு குகையனைய காயத்தின் நடுவுள் களிம்புதோய் செம்பனைய யான் (32) என்று கூறுவர்.

**கன்மம் :** விதிக்கு ஏற்ப இன்பதுன்ப அநுபவங்களைத் தருவது இம்மலமே. உயிருக்கேற்ற உடலும் இதனால் அமைகின்றது. மனோவாக்கு செயல் மூலம் இது செயல்படுகிறது. கன்ம பந்தத்தினால் சென்ம பந்தம் பெறக் கற்பித்துன் அருளே' (107) என்கிறார். சித்தியார் கூறுவது (சுபக்கம் 99) போலவே, சென்ற பிறவியில் செய்த வினை இப்பிறப்பிற்கும், இப்பிறப்பில் செய்யும் வினை வரும் பிறப்பிற்கும் காரணமாக்கிக்கன்மத்தால் பிறப்பு முடிவின்றி இருப்பதனை அடிகளார் 'தீராக் கருவழக்கு' (1053) என்றும் 'ஆற்றுப்பெருக்கன்ன கன்மப்பெருக்கு' (418) என்றும் கூறுவர்.

சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் எனக் கன்மன் மூன்று வகையாகக் குறிக்கப் பெறுகின்றது. பண்டைப் பிறப்புக்களால் குவிந்திருக்கும் கன்மமே சஞ்சிதமாம். இன்றெடுத்த இப்பிற பிற்கென எடுத்தொதுக்கப்பட்டது பிராரத்தமாம். இப்பிறவியில் பிராரத்தை அநுபவித்துக் கொண்டே சேர்க்கும் புதிய கன்மம் ஆகாமியமாம். அடிகளார், 'சஞ்சிதமே ஆதி சரக்கான முச்சேறு' என்பார். இதனை [1162] அடிகளார் பிராரத்தத்தையும் ஆகாமியத்தைத் யும் முன்னே செய்வினை பின்னே வந்து மூளும் வினை (632) என்பர் சஞ்சிதத்தை முன்னைவினை (29 7), தொல்லை வினை (489), முன்னை வல்வினை (377), பண்டையுள கன்மம் (7) எனப் பலவாறு குறிப்பிடுகின்றார். பிறவிக்கு கர்மம் காரணமாவதைக் கவிதைப் போக்கில் அடிகளார் பின்வருமாறு கூறுவார். 'வேதாவை 'இவ்வணம் விதித்ததே' தென்னின் உன் வினைப்பகுதி என்பன்' (109)

இறைவனே வினைகட்கேற்ப உயிர்க்கு உடலை விதிக்கின்றான். இதனை, 'நல்வினை தீவினை எனவே நடுவே நாட்டி ஊனாரும் உடற்சுமை என் மீதேன் வைத்தாய்-' [179], என்றும்,

"சூட்டி எனதென் றிடுஞ் சுமையைச்
சுமத்தி, எனையுஞ்சுமையாளாக்
கூட்டிப் பிடித்து.
வினைவழியே கூத்தாட்டினையே" 291

என்றும் கூறுவார் 'கூத்தாட்டுவானை' என்ற மணிவாசகனார் கருத்தும் இங்கு எண்ணத் தக்கது.

உயிரின் பக்குவமறிந்து தொடர்ந்து வரும் பிறவிப் பெருங்கடலிலிருந்து தன் கருணையாய் இறைவன் கரையேற்றுவன்.

களிம்புதோய் செம்பனைய யான்
காண்டக விருக்கநீ ஞானஅனல் மூட்டியே
களிவுபெற உள்ளுருக்கிப்,
பருவம் தறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமற்றுத் தங்கம் ஆக்கியே, பணிகொண்ட
பட்சத்தை என்சொல்லுகேன்! [32]

அத்தகு பக்குவத்தை 'மலபரிபாகம்' என்று சித்தாந்தம் கூறும்.

'அளியுங் கனியொத்' தருவினை
யால்நொந் தயர்வுறுவேன்;
தெளியும் படிக்குப் பரிபாக
காலமுஞ் சித்திக்குமோ... (454)

"மலபரிபாகம் வரவும் மனதிற் பண்புமோ சற்றுக் இலை" 583 பரிபாகம் வந்துற்றபோது திருவருள் குருவாய்த் தோன்றித் துணைபுரிகின்றது. இதனை,

எனதாவி யுடல்பொருளும் மௌனியாய் வந்துகை
ஏற்றுநம தென்றஅன்றே
........................ . ............
மைக்கால் இருட்டனைய இருள்இல்லை இருவினைகள்
வந்தேற வழியும் இல்லை;

மனம்இல்லை; அம்மனத் தினம் இல்லை; வேறும்ஒரு
வரவில்லை; போக்கும் இல்லை;
'அக்காலம் இக்காலம்' என்பதிலை; எல்லாம்;
அதீதமய மான தன்றோ? [76]

அருளாலேயே வினை வேர் அற அகலும் என்பதை,

"குறித்தவிதம் ஆதியாற்
கூடும்வினை யெல்லாம்
வறுத்தவித்தாம் வண்ணம்அருள்
வந்திடும்நாள் எந்நாளோ!" [1161]

என்று இக்கண்ணி மூலம் உரைப்பர்.

**மாயை** 'மா' ஒடுக்கம், [imvolution]; 'யா'-தோற்றம் (Evolution) எனும் இரு இயல்புடையது மாயை. இதுவும் நித்தியப்பொருளே. உலகப் படைப்பின் முதற்காரணம் இதுவே.

'அண்ட பகிரண்டமும் மாயா விகாரமே' (7) என்பர் அடிகளார். இல்லாமாயை [99], விசுவமாயை [130], பாழ்வெய்ய மாயை [134], அகிலமாயை [165] இப்படி பலபாடல்களில் மாயையைக் குறிப்பிடுகின்றார் அடிகளார்.

நுட்பத்திலிருந்து பருமையை நோக்கி மாயையை மூன்று வகைகளாகச் சித்தாந்தம் வகுத்துக் கூறும். அதில் சுத்த மாயை தூய பொருளாகும். அடிகளார் சுத்த மாயையை மட்டுமின்றி, நாதம் முதலாக விரிந்து பரவி யிருக்கும் அதன் பிரிவுகளையும் குறிப்பிடுகின்றார்,

"சந்தம் முதலாத் தழைத்திங் கெமக்குணர்த்தும்
சுத்தமா மாயைத் தொடக்கறுவ தெந்நாளோ,"
தத்துவமுறைமை (எந்நாட். [23]

சுத்தமா மாயை நாத, பிந்து, சாதாக்கிய, மகேஸ்வரி, சுத்தவித்தை என்னும் ஐந்து வகையாக அமைந்துள்ளது என்பதையும், அடிகளார் "சுத்தவித்தையே முதலாய் தோன்றுமோர் ஐந்து வகை தத்துவம்" [1153] என்றும் குறிப்பிடுகின்றார். இவை ஐந்து [சுத்தவித்தியா

தத்துவங்கள் என்று கூறப்பெறுகின்றன. நேரிடையாக இறைவன் இவற்றின்மூலம் செயல் புரிவதால் இவை சிவதத்துவங்கள் என்றும் வழங்கப்பெறுகின்றன.

மாயையைச் சித்தாந்தம் அசுத்த மாயை என்றே குறிப்பிடுகின்றது. உலக தோற்றத்திற்கு அதுவே முதல் காரணமுமாகும். அதிலிருந்து வித்தியா தத்துவங்கள் கலை, நியதி, காலம், வித்தியா, ராக, புருஷ, மாய [மயக்கம்] என்னும் ஏழு உருவாகின்றன. இதனை அடிகளார் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

"வித்தியா தத்துவங்கள் ஏழும் வெருண்டோடச்
சுத்தபர போகத்தை துய்க்கும்நாள் எந்நாளோ!"
[எந்நாட். [1152]

**பிருக்ருதி மாயா** : மாயையின் மிகப் பருநிலை இது. இவற்றிலிருந்து, ஆன்மதத்துவங்களாகிய 24 தத்துவங்கள் உருவாகின்றன. இவை ஐந்து பூதங்கள், ஐந்து பொறிகள், ஐந்து புலன்கள், கால், கை முதலான செயல்புரியும் கருவிகள். ஐந்து; மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகிய அந்தக் கரணங்கள் நான்கு வந்து இவற்றையெல்லாம் அடிகளார் எந்நாட் கண்ணி பாடல்களில் [1142—45] முறையாகக் குறிப்பிட்டும் செல்கின்றார். அந்தக் கரணங்களைப் பற்றி அவர் குறிப்பிடுவன எண்ணத் தக்கன. 'மனமாகிய வானரம்' [1146]; 'புத்தியெனும் பொறி அரவு' [1149] 'ஆங்காரம் மதயானை' (1150); 'சித்தமெனும் திரைக் கடல்' [1151]. ஒரு பாடலில் அடிகளார் தத்துவங்கள் அனைத்தையும் குறிப்பிடுகின்றார்.

"மண்ணாதி ஐந்தொடு புறத்தில்உள கருவியும்
வாக்காதி, சோத்ராதியும்
வளர்கின்ற சத்தாதி, மனமாதி, கலையாதி,
மன்னுசுத் தாதியுடனே,
தொண்ணூற்றொ டாறும்......"
கருணாகரக்கடவுள் 2

முப்பத்தாறு தத்துவங்களல்லாத வேறு 60 தத்துவங்களை 'ஆன புறக்கருவி ஆறுபத்தும்'' என்று அடிகளார் குறிப்பிடுகின்றார். இந்த அறுபதும் அந்த முப்பத்தாறும் கூடி 96 தத்துவங்களாக தனு, கரண, புவன, போகங்கள் விளங்குவதையும், அவற்றையே உயிர் 'தான்' என்று மயங்குவதையும் கவிதைக் கலையோடு அடிகளார் பின்வருமாறு பாடுகின்றார்.

''தத்துவர்தொண் ணூற்றறுவர்
தாமாய்வாழ் இந்நாட்டைப்
பித்தன்நான் என்னும்
பிதற்றொழிவ தெந்நாளோ!'' (1120)

**தீட்சை :** ஆன்மா, சிவனருள் இன்றி விடுதலை பெற இயலாது. அவன் அருளாலே உயிர்கள் நெறிப்படுத்தப் பெறுகின்றன. ஆன்மாக்களின் அஞ்ஞானத்தை ஞானத்தால் நீக்கிவிடமுடியும். ஆனால் ஆணவமல நீக்கத்திற்கு தீட்சை இன்றியமையாகிறது. விஞ்ஞானகலர், பிரளய கலர், சகலர் என்னும் மூவகைப்பட்ட ஆன்மாக்களுக்கு இறைவன் மூன்று வகையாக அருள்புரிகின்றான். முதல் வகையினர்க்கு அகத்துள் இருந்து உணர்த்துகின்றார். இரண்டாம் வகையினர்க்கு நான்கு கைகளோடும் மூன்று கண்களோடும், நீலமணி மிடற்றோடும் கூடிய தெய்வத் தோற்றத்தில் காட்சியளிக்கின்றான். மூன்றாமவர்க்கு தானோ, தன் அருள் பெற்ற ஞானியர் ஒருவரோ குருவாகத் தோன்றி தீட்சைத் தருகின்றனர்.

தீட்சை குறித்து சித்தாந்தம் விரிவாகவும் நுட்பமாகவும் எடுத்து கூறுகின்றது. சமய தீட்சை விசேஷ தீட்சை, நிர்வாண தீட்சை எனும் மூன்றும் அடிகளாரால் குறிக்கப் பெற்றதென எண்ண இடம் உள்ளது. உடல், உள்ள, உயிர் தூய்மை செய்வான் வேண்டி சமயநெறி படுத்துவதற்காக ஓமம் வளர்த்து இறைவன்பால் ஈடுபடுத்தச் செய்யும் செயலே சமய தீட்சை ஆகும். இது

சரியை நெறியாகும். கிரியை நெறியில் செலுத்துவது விசேஷ தீட்சையாகும். இங்கு சீடனின் நெஞ்சைத் தெய்வீக நெறியில் செலுத்தி, சிவபூசை செய்விற்கும், சிவ ஆகமங்களை உணர்ந்து கொள்வதற்கும் உரியவனாக ஆக்குவர் இதனை அடிகளாரின் பின்வரும் பாடல் குறிப்பதாகக் கொள்ளலாம்.

> ''அறிவாக நின்ற நிலையில்
> சிந்தையறநில்'' என்று சும்மா இருத்திமேற்
> சின்மயா னந்தவெள்ளம்
> தேக்கித் திளைத்துநான் அதுவா யிருக்கநீ
> செய்சித்ர மிகநன்றுகாண்!''
>
> (மௌனகுரு வணக்கம் (238)

**நிர்வாண தீட்சை :** இறைவன் அருள் பெற்ற குரு, கருமத்தின் பிரிவுகள் ஒன்றனுள் ஒன்று ஒடுங்கி மறைய அருள் செய்வதாகும். திரோதாண சக்தியில் அனைத்தும் ஒடுங்க அதுவும் சிவனுள் ஒடுங்கும். இன்னும் நயன தீட்சை, ஸ்பரிச தீட்சை, மானசை தீட்சை முதலியனவும் உள. இவை மூன்றாலும் சீடனின் ஆணவ, மாய, கர்ம மலங்களை முறையே குரு மெலிவிப்பார். இவை மூன்றானும் முதன் முதலில் தாயுமானாரை மௌனகுரு ஆட்கொண்டார் என்று கருதலாம்.

**நான்கு வகை நெறி :** விடுதலை நோக்கி முயல்கின்ற உயிர் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு படி முறைகளில் உயர்தல் வேண்டும். இதனை அடிகளார், 'கூறறிய முத்தி நெறி' என்று பேசுவர். மனோ, வாக்கு, காயங்களால் இறைவனுக்கு கோயிலில் செய்யும் வழிபாட்டு முறையே சரியையாகும். கிரியை, மந்திரம், பாவனை இவை மூன்றும் இங்கு முறையே இடம் பெறுகின்றன. அடிகளார் பின்வருமாறு குறிப்பிடுவர்.

> ''அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
> அன்பினால் உருகிவிழி நீர்
> ஆறாக ஆராத முத்தியின தாவேச

ஆசைக் கடற்குள் மூழ்கிச்
சங்கர! சுயம்புவே! சம்புவே! என்ற மொழி
தழுதழுத் திட வணங்கும்
சன்மார்க்க நெறி........

(சின்மயானந்த—26)

இந்நெறியால் ஆணவத்தின் ஆற்றல் மெலிகிறது.

அடுத்தது **கிரியை** ஆகும். இதில் இறை வழிபாட்டின் நெறிமுறைகள் அடங்கியுள்ளன. ஆகம விதிப்படி சிவபெருமானை அகப்புறச் செயல்களால் வழிபாடு செய்வதாகும். இதனைச் சத்புத்திர மார்க்கம் என்றும் கூறுவர். 'யான் எனது' என்னும் செருக்கை இஃது அறுக்கும்.

"பஞ்சசுத்தி செய்து, நின்னைப் பாவித்து பூசைசெய்தால்
விஞ்சிய ஞானம் விளங்கும் பராபரமே"

(பராபரக்—154)

என்று அடிகளார் குறிப்பிடுவர். (பஞ்சசுத்தி, பூத சுத்தி, தேக சுத்தி, திரவிய சுத்தி, ஆத்ம சுத்தி, மந்த்ர சுத்தி) இந்நெறியின் முதிர்ச்சி மானச பூசையாக உருக் கொள்கின்றது. இதனை அடிகளாரின் பின்வரும் பாடல்கள் அழகாக எடுத்துரைக்கின்றன.

"துள்ளுமறி யாமனது பலிகொடுத்தேன்; கன்ம
துட்டதே வதைகள் இல்லை;
துரியநிறை சாந்ததே வதையாம் உனக்கே
தொழும்பன்அன் பபிடேகநீர்
உள்ளுறையில் என்ஆவி நைவேத்தியம்; ப்ராணன்
ஓங்குமதி தூப தீபம்
ஒருகாலம் அன்றிது சதாகால பூசையா
ஒப்புவித்தேன்; கருணைகூர்"

(கருணாகர—8)

"நெஞ்சகமே கோயில்; நினைவே சுகந்தம்; அன்பே
மஞ்சனநீர்; பூசைகொள்ள வாராய்! பராபரமே"

(பராபரக் —151)

"காயமே கோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி யிலிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீ ரமையவாட்டிப்
பூசனையீசனார்க்குப் போற்றலிக் காட்டினோமே"
(4—76—4)

**யோகநெறி** மூன்றாவது நிலையினதாகும். இஃது இயமம், நியமம் முதலிய எட்டு படிமுறைகளைக் கொண்டு நிகழ்கிறது. இந்த யோக நெறியினையும், அதன் படிமுறை களையும் பல பாடல்களில் அடிகளார் குறிப்பிடுகின்றார். பின்வரும் பாடலில் அடிகளார்தொகுத்து உரைக்கின்றார்.

"மருமலர்ச் சோலைநெறி நன்னீழல் மலையாதி
மன்னுமுனி வர்க்கேவலாய்
யந்த்ரமா லிகை சொல்லும் இயமநிய மாதியாம்
மார்க்கத்தில் நின்றுகொண்டு
கருமருவு காயத்தை நிருமலம தாகவே
தமலாச னாதிசேர்த்துக்
காலைப்பிடித் தனலை அம்மைகுண் டலிஅடிக்
கலைமதியி னூடுதாக்கி,
உருகிவரும் அமிர்தத்தை உண்டுண் டுறங்காமல்
உணர்வான விழியைநாடி
ஒன்றோ டிரண்டெனாச் சமரச சொரூபசுகம்
உற்றிடஎன் மனநின் வண்ணம்
திருவருள் முடிக்கஇத் தேகமொடு காண்பனோ!"
(தேசோ—1)

இப் படிமுறைகளின் உச்ச நிலையில் உள்ள ஞான நெறியை முக்கிய நெறியென்றும் [41], 'பதமூன்றும் கடந்தவர்க்கு மேலான ஞானபதப் பரிசுகாட்டி' [392] என்றும்,

"விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன் றோ பராபரமே"
[792]

என்றும் அடிகளார் உயர்த்திக் கூறுவர். மற்றவை மூன்றும் பரமுத்தி தர, இது, பரமுத்தி [அ] மேலான விடுதலையைத்

தரவல்லது. இந்த மார்க்கம் சத் மார்க்கம் [அ] சன் **மார்க்கம்** என்று குறிக்கப்படுகிறது. "ஞானம் அலது கதி கூடுமோ?" [36].

நன்மை தரும் ஞானநெறி (1299); 'ஞானசஞ்சீவி' (28) ஞான அனல் (32), ஞானாக்கினி (1309) என்றெல்லாம் அடிகளார் ஞானத்தின் இன்றியமையாமையைப் பன்னிப் பன்னி பாடுவார். இந்நெறி சிவத்தோடு ஒன்றச் செய்கின்றது. ஆனால் இந்த ஞானம், **பதி ஞானம்** என்று கூறப்பெறும். இவ்வாறு படிப்படியாக அறியாமையிலிருந்து ஞானநிலைக்கு ஆன்மா உயர்ந்து செல்கிறது. இவற்றால் இருவினை ஒப்பு, மலபரிபாகம் (சித்த சுத்தி) சத்குரு தரிசனம், சத்தினிபாதம் என்னும் நான்கு நிலைகளில் படிப்படியே உயர்த்திச் சென்று விடுதல் தருவிக்கின்றது.

**இறை அருள்** (Divine Grace) அருள் அல்லது சக்தி சித்தாந்த தத்துவத்தில் இன்றியமையாத ஒரு கருத்தாகும், அருள், சிவத்தினின்று வேறுபட்டது அன்று. அஃது இறைவன் ஆற்றல் ஆகும். இறை நிமித்த காரணம்; சக்தி முதற் காரணம்.

இறைவன் உயிர்க் கருணையால் ஐந்தொழில் புரிகின்றான். இதனை 'இச்சை வைத்து உயிர்க்குயிராய்த் தழைத்தது" என்பர் அடிகளார். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில் குறித்து அறிந்தோம். இங்கு இறை அருள் என எண்ணும் போது மறைத்தல் அருளல் ஆகிய இறுதி இரண்டும் குறித்துச் சிறிது விளக்கமாகக் கருத வேண்டியுளது.

தனு, கரணங்கள் பெற்ற ஆன்மா புவனத்தின் கவர்ச்சியில், போகத்தில் அமிழ்ந்து, கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என மயங்கிக் கிடக்கிறது. இந்த மயக்கம் ஆணவ மலத்தின் நச்சுத் தன்மை மெலிவதற்குத் தேவைப்படுவதால் இறைவன் இவ்வாறு உண்மையை ஆன்மா உணராத

வாறு மறைத்து வைக்கிறான். இதுவும் இறைவன் உயிர்க்குச் செய்யும் நலமே. அடிகளார்,

எவ்வுடல் எடுத்தார் அவ்வுடல் வாழ்க்கை
இன்பம் எனவே துன்பம் இலையெனப்
பிரியா வண்ணம் உரிமையின் வளர்க்க
ஆதர வாகக் காதலும் அமைத்திட்
டுக மின்றியே தேகம் நானென
அறிவுபோல் அறியாமை இயக்கி... (1451)

என்றிவ்வாறு இதனைக் குறிப்பிடுவார். இத்திரோதான நிலையையும் கடந்த பின் திருவருள் வாய்க்கிறது.

சரியை முதலிய நான்கு நெறிகள் மூலம் நன்னெறியில் ஒழுகும் உயிர் '**அன்பே சிவம்**' என உணர்ந்து 'என் கடன் பணி செய்து கிடப்பதே' எனத் தொண்டு புரிகின்றது, இதனால் **சிவ புண்ணியம்** (VP 20) வாய்க்கிறது. இதனால் பாபம் செய்ய இயலாதவாறு ஆணவ மலம் ஒடுங்குகிறது. இந்நிலையை அடைந்த உயிர் இருவினை ஒப்பு, மலபரி பாகம் எனும் இரு படிகளைக் கடக்கின்றது. அப்போது இறை அருள் உயிர்க்கெனத் தன்னிலையில் இருந்து இறங்கி வந்து உயிரைச் சார்கிறது. இதுவே சத்திநிபாதம் ஆகும். சத்திநிபாதம் உயிரின் தகுதிக்கேற்ப மந்தம், மந்ததரம், தீவிரம், தீவிரதரம் என நான்கு நிலைகளில் இறங்கு கின்றது.

அருள், கருணை, தயை, கிருபை ஆகிய சொற்களில் இறை சக்தியைத் தாயுமானவர் குறிப்பிடுகின்றார். 'என்னைப் புரப்பது அருளின் கடனாம்' (1004). முன்னின்று காப்பதே நின்னருட் பாரம்'' 'தன்னை அறியத் தன் அருளால் தான் உணர்த்தும் மன்' (569) 'எப்போது கருணைக்கு உரித்தாவனோ' (50) ''தாயினும் நல்ல தயாளு'' (1329) ''தாங்கரிய மையலெல்லாம் தந்துவிட்டு இன்னரு ளாம் பாங்கியைச் சேர்த்தார்'' (1051) என்று பலவாறு குறிப்பிடுவார்.

'இன்னருளாம் பாங்கி' என்று இங்குக் குறிக்கப் பெற்றது சக்தியையே ஆகும். 'கண்கட்கு இருளின் ஒளியால் ஒட்டும் இரவியைப் போல ஈசன் மருளினை அருளால் வாட்டி மன்னுயிர்க்கு அளிப்பன்' (சித்தி சுபக். 239.) இந்த உவமையும் உண்மையும், "மாறாப் பரை என்னுடங் கிரணம் சூழ்ந்த பானு" (335) என்ற தொடரின் மூலம் அடிகளார் உணர்த்துவர்.

இச்சக்தி இச்சாசக்தி, கிரியா சக்தி, ஞானசக்தி என மூன்றாகவும் கூறப்பெறும். இச்சாசக்தி உயிர்க்கு இறைவன் திருவடி நீழல் கிட்ட இறைவன்பால் அமைவது. கிரியா சக்தி படைப்பிற்கும், ஞான சக்தி உயிரின் நலந் தீங்கு நோக்கி அதற்கேற்ப அஃததனுக்கு உரிய தனுகரண புவன போகம் பெறக் காரணமாவது.

இறைவன் இச்சாசக்தியின் இயல்பை அடிகளார் "கள்ளன் அறிவூடுமே மெள்ளமெள வெளியாய்க் கலக்காரு நல்ல உறவே"(54), என்றும், 'இமையளவும் உபகாரம் அல்லால் வேறொன் றியக்கா நிர்க் குணக்கடல்" (137) என்றும் கூறுவர். இறைவன் இவ்வருளால் மௌன குருவாகி வந்து தமக்கு அருளியதை இரு நூறுக்கும் மேற்பட்ட பாடல்களில் அடிகளார் குறிப்பிடுகின்றார்.

"காணரிய அல்லலெல்லாந் தானே கட்டுக்
கட்டாக விளையும்; அதைக்கட்டோ டேதான்
வீணிற்கர்ப் பூரமலை படுதீப் பட்ட
விந்தைஎனக் காணதரு துவேதம் காட்ட
ஊணுறக்கம் இன்பதுன்பம் பேர்ஊர் ஆதி
ஒவ்விடவும் எனைப்போல உருவங் காட்டி
கோணறவோர் மான்காட்டி மானை ஈர்க்குங்
கொள்கையென அருள்மௌன குருவாய் வந்து"
(148

என்ற பாடலில் இறைவன் குருவாய் வந்து அருளிய இச்சா சக்தியின் இயல்பை விரித்துரைக்கின்றார்.

உள்ளத்தின் உள் நின்று உணர்த்தியதோடு அமையாது புறத்திலும் மௌன குருவாய்த் தோன்றி அடிகளார்க்கு இறைவன் அருளிய நிலையை,

அறிவில் நின்றுகுரு வாய்உ ணர்த்தியதும்
அன்றி, மோனகுருவாகியே
அகில மீதுவர வந்த சீரருளை
ஐயஐயஇனி என் சொல்கேன்''

என்று பாடி வியப்பர்.

இவ்வாறு இறைவன் குருவாய்த் தோன்றி 'தாளால் தன் தலைமீது தாக்கி' (1437) போக்கு வரவற்றிருக்கும்—சுத்த—பூரணமாக்கினான் (1438) என்று அடிகளார் தன் மேல் வைத்து இறையருளால் உயிர் பெறும் பேரானந்தப் பெரு விடுதலையைக் குறிப்பிடுவார்.

இவ்வாறு பேரானந்தப் பெருநிலையை பெற்ற பின்னரும் போதம் கூறுவது போல:

'குருலிங்க சங்கமமாக் கொண்டதிரு மேனி'யை வணங்கி, வழிபட்டு,

'அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்து எய்தும்'

என்று அடியார் பணி செய்து வருதலை எடுத்துரைப்பர் அடிகளார் எண்ணற்ற பாடல்களில்.

**சமயம் கடந்த மோனம்** : மோனம் என்னும் கருத்து இந்த மண்ணுக்குப் புதியது அன்று[1]. பண்டுதொட்டுப் பயின்றுவரும் இச்சொற்பொருள் பயில்வார்க்கு ஏற்பப் புதிய புதிய விளக்கங்களைத் தந்து புத்தம் புதுத் தெளிவு களை வழங்கி வருகிறது. 'சும்மா இரு''[2] என்றும், 'பேசா

---

1 பிருகதாரணிய உநிடதம், 3.5;1.
2 கந்தர் அநுபூதி, 12

அநுபூதி''[3] என்றும் சிந்தை, செயல் பேச்சு அற்றமோன நிலையினை அருணகிரியார் குறிப்பாகக் கூறிப் போந்துள்ளார். 'ஆரா இயற்கைக்கு'[4] மறுதலையான ஒரு நிலைதான் இந்த மோனமோ என்று வள்ளுவர் சொல்லைக் கொண்டு உந்திப் பார்க்கத்தோன்றுகிறது. இந்த வரிசையில், வகையில் மோனத்திற்குத் தாயுமான அடிகளார் தரும் விளக்கமும், அந்நிலையில் அவர் கண்ட தெளிவும் கருதத் தக்கன; கைக் கொள்ளத் தக்கன.

அடிகளார்க்கு இந்த மோனம் அவர்தம் குருவான மவுனகுரு வாயிலாக வாய்த்தது. அந்த வாய்ப்பை 'ஆகார புவனத்தில்' அடிகளார் குறித்துச் சொல்லும்போது மோனப் பண்பு இன்னதெனப் பின் வருமாறு விளக்கிப் பேசப் பெறுகின்றது.

''..................... மோனப்
பண்பொன்றை அருளிஅந்தப் பண்புக் கேதான்
சிந்தை இல்லை நானென்னும் பான்மை இல்லை
தேகம் இல்லை காலம் இல்லை திக்கும் இல்லை
தொந்தம் இல்லை நீக்கம் இல்லை பிறிதும் இல்லை
சொல்லும் இல்லை இராப்பகலாம் தோற்றம் இல்லை
அந்தம் இல்லை ஆதி இல்லை நடுவும் இல்லை
அகமும் இல்லை புறமும் இல்லை அனைத்தும் இல்லை
இல்லை இல்லை என்னின் ஒன்றும் இல்லா தல்ல
இயல்பாகி என்றுமுள்ள இயற்கை யாகிச்
சொல்லரிய தன்மையதாய் யான்தான் என்னத்
தோன்றாதெல் லாம்விழுங்கும் சொரூப மாகி
அல்லையுண்ட பகல்போல அவித்தை எல்லாம்
அடையவுண்டு தடையறஉன் அறிவைத் தானே
வெல்ல உண்டிங்(கு) உன்னையும்தா னாகிக் கொண்டு
வேதகமாய்ப் பேசாமை விளக்குத் தானே''[5]

---

3 கந்தர் அநுபூதி
4 குறள், 370
5 தா. பா. ஆகார புவனம், 20, 21

இந்த மோனப் பண்பைப் பயிலுங்காலை அடிகளார் பெற்ற அனுபவம் சில 'உண்மை எது' என்று ஆயும் வாதத்தில் தன் வாழ்நாளின் முற்பகுதியைக் கழித்த அடிகளார் இந்த மோனநிலை பயிலப் பயிலக் 'கூர்த்த அறிவு அத்தனையும்'[6] கொள்ளை கொடுக்கலானார்; ஆறுகளின் நீள அகல அளவுகளும், பழுப்பு சிவப்பு முதலிய நிறங்களும், உப்பு துவர்ப்பு முதலிய சுவைகளும் கடலுள் கலந்தவுடன் மறைந்து விடுவதைப் போல 'மோன வாரிதியில்''[7] சமய, தத்துவ கொள்கை வேறுபாடுகள் அனைத்தும் கலந்து கரைந்து மறைந்து விடுகின்றன எனக் கண்டார்.

'மோனம்' பேசாமையோடு நின்று விடுவதில்லை என்று தெளிந்தார். சொல் ஒன்றை வாய் முணுமுணுக்காமல் இருக்கலாம். ஆனால் அதன் பொருளில், அது சார்பான நினைவில் நெஞ்சம் ஈடுபடாமல் இருத்தல் அன்றோ உண்மையில் பேசா மோனம். இந்தத் தெளிவு பெற்ற அடிகளார் 'சொல்லும் பொருளுமற்றுச் சும்மா இருப்பதற்கு''[8] ஆசைப்படுகிறார். 'வாக்கும் மனமும் மவுனமுற'[9] முயல்கிறார்.

வாக்கு, மனம் மவுனம் உற்றால் மட்டும் போதா. சொல்லும் அந்த மவுனத்தைக் கடைபிடித்தல் வேண்டும் என்று அடிகளார் காண்கிறார். அதுவே 'சுத்த மோனக்' காட்சி.

> "சித்தமவுனம் செயல்வாக் கெலாமவுனம்
> சுத்தமவுனம் என்பால் தோன்றின் பராபரமே!''[10]

---

| | | | |
|---|---|---|---|
| 6 | ” | பராபரம் | 31 |
| 7 | ” | கல்லாலின், | 25 |
| 8 | | பராபரம் | 50 |
| 9 | ” | பலவகைக்கண்ணி | 13 |
| 10 | ” | பராபரம் | 276 |

இந்தச் 'சுத்த மோனம்' கல்லுக்கும் மண்ணுக்கும் கூட வாய்த்திருக்கிறதே! செயலற்று, சிந்தையற்று தானே அவையும் உள்ளன! அப்படியெனில் உயர் மானுடப் பிறவி எதற்கு? என்று ஐயுறத் தோன்றும். இந்த ஐயத்திற்கு இடம் இன்றி அடிகளார் அனுபவம் மேலும் தெளிவு தருகிறது. மோனத்தின் வேரைத் தொட்டுக்காட்டுகிறது. 'நான் இல்லை' 'நாம் இல்லை'' என்பதே மோனத்தின் வேர். கல்லுக்கும் மண்ணுக்கும் நான் என்ற உணர்வு இல்லை. அந்த உணர்வு மீதூர்ந்துள்ள மானிடன் எப்போது அதனைக் கடந்து நிற்கின்றானோ அப்போதே மோனம் அவனுக்கும் வாய்க்கிறது.

''நானென் றொருமுதல் உண்டென்ற
நான்தலை நாண என்னுள்
தானென் றொருமுதல் பூரண
மாகத் தலைப்பட் டொப்பில்
ஆனந்த தந்தென் அறிவையெல்
லாம்உண் டவசம் நல்கி
மோனந் தனைவிளைத் தால்இனி
யாது மொழிகுவதே?''[12]

என்பது அடிகளார் வாக்கு.

நான் அற்ற நிலையில் தோன்றும் மோனம்.மோனத்தின் எதிர்மறைநிலை.அதன் உடன்பாட்டு நிலை ஒன்றும் உண்டு. அந்த அநுபவமும் அடிகளார்க்கு வாய்த்துள்ளது. அந்த உடன் பாட்டு நிலை இறைவனை அன்றி வேறொன்றை நினையாத நினைவு, அவனையன்றி பேசாத பேச்சு, அவனுக்கன்றி வேறெவர்க்கும் வேறெதனுக்கும் செயல் படாத செயல் ஆகும்.

---

11 ,, உடல்பொய்யுறவு, 25
12 ,, பாயப்புலி, 14

"ஆனந்தமான நின்னை யன்றிஒன்றை உன்னாத
மோனம் தமியேற்கு முக்தி..."[13]

"மனதே கல்லால் எனக்கன்றோ-தெய்வ
மவுன குரு வாகி வந்துகை காட்டி
எனதாம் பணிஅற மாற்றி"[14]

"பேசாத மோனநிலை பெற்றன்றோ நின்னருளாம்
வாசா மகோசரந்தான் வாய்க்கும்...!"[15]

எனும் அடிகளார் தொடர்கள் அனைத்தும் மோனத்தின் உடன் பாட்டுக் காட்சிகளாகும்.

எனவே பேச்சற்று, செயலற்று, சிந்தையற்று இருத்தல் சுத்த மோனமாகும். அது "நான்" அற்றபோதே வாய்க்கும். அது கைவந்தபின் சிந்திக்கலாம். செயல் செய்யலாம், பேசலாம். ஆனால் அந்தச் சிந்தை, செயல், பேச்செல்லாம் இறைவனைப் பற்றியே இயங்கும்; இயங்கல் வேண்டும். அந்த இன்மையும், இந்த இயக்கமும் மோன நிறைவாகும். இதுவே தாயுமானவர் கண்ட மோனம் ஆகும்.

---

13 பராபரம் 207
14 ஆனந்தக்களிப்பு, 12
15 பராபரம் 284

# 8. அன்பர் பணியும் இன்ப நிலையும்

'தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே' என்றார் ஔவையார். 'வெறும் வீணருக்கே உரைத்துடலம் மாய மாட்டோம்; பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழுவோம்' என்று தொண்டர்தம் பெருமிதத்தை எடுத்துரைத்தார் பாரதியார். 'நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்... சோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்க் கொய்மலர் சேவடியிணையே குறுகினோமே...' என்று அடியார்தம் இயல்பைத் தம் மேலிட்டு உலகுக்கு உரைத்தார் அப்பர் பெருமான்.

திருவள்ளுவர்தம் பாயிரமும் நுட்பமாக அடியார் திறத்தையும் அவர்தம் வழிபாட்டையும் உணர்த்தக் காணலாம்,

'கடவுள் வாழ்த்து' இறைவன்தன் முதன்மை, தனிமை உயிரெலாம் உயர்க்குயிராய் இயைந்தமை, தூய்மை, மன மலர்மிசை ஏகினமை, விருப்பு வெறுப்பற்ற தன்மை, நன்னு டூரின்மை, காணாமற் கண்டு கேளாது கேட்டும் பொறி வாயில் ஐந்தும் கடந்து நின்கும் நிலைமை, ஒப்பின்மை, உயர்வின்மை, அறவழியாம் அருமை ஆகிய குணங்களைக்; குறிப்பிட்டு அந்நெறி நின்றாரே குறியாகிய விடுதலையை உறுவர் என்று அடிசேர்தலாகிய வழிப்பாட்டைக் குறிப் பிடுகிறார் திருவள்ளுவர்.

அடிசேர்தலும் அவன் நெறி அறிதலும் அவன் படைத்த இயற்கை வழி, சிறப்பாகப் பஞ்ச பூதங்கள் வழி புலனாகும் என்று அடுத்து, 'வான் சிறப்பு' வைத்து நீர் இருவகையிலும் துப்பாகும் பாங்கை உணர்த்துவர். 'அவன் அமைப்பின் வழி அவன் நெறி அறிக; உணர்க; ஒழுகுக' என்பது 'வான் சிறப்பு' வழி வள்ளுவர் வையகத்துக்குத் தரும் செய்தி இதுவே ஆகும்.

அவன் குணம் நினைந்து, அவன் அமைப்பறித்து அவன் அடிசார்ந்தவர்களே அடியார்கள். அவர்களும் விருப்பு வெறுப்பில்லார்; இருமை வகை தெரிந்து ஈண்டு அறவாழ்வு வாழும் சீவன் முத்தர்கள். செயற்கு அரிய செய்யவல்லார். பஞ்சபூத நுட்பம் அறிந்து வையத்தைத் தம் வயப் படுத்தியோர் உண்மையை உள்ளவாறே உணர்ந்து உணர்த்தவல்ல நிறைமொழி அவர்மறைமொழி. எவ்வுயிர்க் கும் செந்தண்மை பூண்டு பணி செய்து கிடப்போர். அவரே அடியார். அவர்தம் வழிபாடே அடியார் வழிபாடு. அவன் திருவடி சேர்ந்து அவன் அமைப்புணர்ந்து ஒழுகும் அடியார் வழி சேர்தலால், அடியார் கூட்டத்தால், அடியார் வழிபாட்டால் பெறும் வாழ்வுப் பயன் 'அறம்' 'அறத்தால் மன மாசு அகலும். சத்திநி பாதம் வாய்க்கும். உண்மைக் காட்சி எழும். போக்கு வரவற்ற பூரணனோடு ஒன்றும் நிலை வாய்க்கும். இப்படி அடியார் நலத்தை, திறத்தை, வழிபாட்டை, பயனைத் திருவள்ளுவப் பெருந்தகையும் புலப்படுத்தியுள்ளார்.

அடியார் வழிபாடு இந்து சமயப் பிரிவுகளுள் சைவமும் வைணவமும் கண்ணெனக் கொண்டு போற்றிச் சிறப்புற்று வருகின்ற இரு சமயப் பிரிவுகள் ஆகும். சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகை அருளி அடியாரை வணங்கினார். நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திருவந்தாதி பாடி அடியார் வரலாற்றுச் சிறப்பைக் குறிப்பித்தார். பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட

அடியார் வாழ்வை திருத்தொண்டர் மாக்கதையாக உலகுக்குப் பாடித் தந்தார் சேக்கிழார் பெருமான்;

சேரன் குலசேகரர்தம் பாசுரங்கள் அடியார்தம் செம்மை, சிறப்பு, இயல்பு இறைவன் இருப்பு முதலியவற்றை எடுத்துரைக்கும். முதலாழ்வார் மூவர் திருகோவலூர் இடைகழியில் கூடியபோது இடையே திருவொடும், பொன்மேனியொடும், ஆழி சங்கொடும் திருமால் தோன்றியதன் நுட்பம் அடியார் சங்கமத்தில் ஆண்டவன் தோன்றுவன் என்பதாகக் கொள்ளலாம்.

இத்தகு அடியார் வழிபாடு தாயுமானவர் பாடலில் சீரும் சிறப்பும் பெற்று விளங்குகிறது. 'வையத்துள் வாழ்வாங்கு வாழின்' தெய்வ நிலை தேடி வரும் என்று திருவள்ளுவர் கூறுவர்; தாயுமானவரோ, 'அன்பர் பணி செய்தாலே இன்ப நிலை தானே வந்து வாய்க்கும்' என்று உறுதி கூறுகிறார். அன்பர் பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால், இன்ப நிலை தானே வந்து எய்தும் பராபரமே'.

சமயத்தின் பணி ஒவ்வொரு மானுடனையும். ஆளாக்குவதே... 'அன்பர் பணி செய்ய ஆளாக்குவதே' ஆளாக்கிய பிறகு அந்த ஆன்மா தானாக என்று பணி செய்து இன்ப நிலை அடைதல் வேண்டும் என்பது தாயுமான சுவாமிகளின் அடியார் வழிபாடு பற்றிய நிறை வாக்கு, மறைவாக்கு எனலாம். ஆயினும், அவர்தம் 1452 பாடல்களை நுணுகிக் கற்கும் போது அடியார், அடியார் வழிபாடு பற்றிய உண்மைகள் அனைத்தும் அவற்றின் வழிப்புலப்படுகின்றன.

அடியார்தம் இலக்கணம், இயல்பு, பெருமை, அவரொடு, அவர்பால் இறை உறையும் பெற்றி, அவர் வழி பாட்டின் பயன் எனப் பலவாறு 'அடியார்' பற்றிய

செய்திகள் அவர்தம் பாடலில் கனிந்து நிறைந்திருக்கக் காணலாம்.

தாயுமானவர் 'அடியார்' என்றும் 'அன்பர்' என்றும் குறிப்பிடுவதன்வழி இறைவனுக்கு உரியவர்கள், இறைவனுக்கே அன்பு செய்பவர்கள் அடியார் என்ற கருத்தைப்புலப்படுத்துகின்றார். அடியார், அன்பர் என்று அப்படிக் குறிப்பிடும் போதெல்லாம் பல இடங்களில் "நல்லருள் படைத்த அன்பர்" (125), நல்லவர் (827) நல்லோர் (828), நல்லோர் (125) நல்லார்கள் (345) நல்லோர் (826), நல்லார் (1038) எனப் பல இடங்களில் 'நல்' என்ற அடைமொழியுடன் அடியவர்களைக் குறிப்பிடுகின்றார். அந்த 'நல்' என்ற சொல்லுக்கு விளக்கம் தருவது போல 'கொல்லா விரதம் கொண்டவர்,' இச்சித்துச் சிந்தை வழிச் செல்லாதவர்,' 'உணர்ந்தோர் பாமாலைக்கு உரியன் நீ என்று கண்டோர்', 'சொல்லாலும் பொருளாலும் அளவையாலும் தொடர வொண்ணா அருள்நெறியைத் தொடர்ந்து நாடுவோர்', 'மன அடக்கமுள்ளோர்' 'கனிந்த அன்பே பூசை என்போர்', என்று நல்லாரின் இலக்கணங்களாகக் கொல்லாமை, உண்மை நெறி நிற்றல்' அன்புடைமை, அருள் உடைமை, பொறை, தெய்வச் சான்றோர்பால் ஈடுபாடு ஆகிய பண்புகளைத் தாயுமானவர் குறிப்பிடுகினறார்

அத்தகு அடியவர் தம் இயல்பாகச் சில பண்புகளை அடிகளார் தம்பாடல்களில் தெளிவு செய்கின்றார். 'உன்மத்தர்'. 'பேயர்', 'பாலர்'. இவர்தம் இயல்பு உடையவர்கள், துரிய வடிவினர்,கால தேச கட்டுக்களை மறந்தவர்கள் (130), பாடுவார், ஆடுவார், நின்று நின்று அழுவார், இறைவன் திருவடியை முடிமேல் சூடுவார் (379) ஆடிப்பாடி மகிழ்ந்த நிலையினராய் இறைவனைத்தேடுவதே அவர்கள் இயல்பு.அவர்கள், 'ஆணவக் காட்டைக் களைந்து, அகங்காரக் கல்லைப் பிளந்து, மனத்தைத் திருத்தி,

மோனவிதையை ஊன்றி, அன்பு நீர் பாய்ச்சி, மாயப் பறவையினின்று காத்துப் பேரின்பத்தைத் துய்ப்பவர்கள். (72), 'உன்னையே நினைந்து உருகி, நாடிக் கருத்தழிந்து சொல் தடுமாறி, தம்மை மறந்து உணர்தற்கு அரிய உண்மை இன்பத் துய்ப்பிலே இருப்பவர்கள்.' (77) 'இயமம், நியமம் முதலியவற்றைக் கடைப்பிடித்து யோகநெறியில் நிற்பவர்கள்' (97) 'குற்றம் குறைந்து குணம் மேலிடுவோர். (457) இத்தகு இயல்பினர் அடியவர்கள்.

'அடியவர்தம் பெருமை அளப்பரியது.' விவேகத்தில், தெளிவில், மெய்யுணர்வில் திளைப்பவர்கள் அவர்கள் (453). அவர் பெயர் உச்சரித்தலே முத்திக்கு வழியாகும் (582). அவர்கள் சித்தம் தெளிந்து சிவமானோர்' (783). இறைவன் அவரோடு அவர்பால் இடங் கொண்டுள்ளான்,

'மாசற்ற அன்பர் நெஞ்சை மாறாதப் பெட்டகமாகக் கொண்டவன் இறைவன்' (1318). 'தொண்டரொடு கூட்டு கண்டவன்' (83). 'கருவி கரணங்கள் ஒய்ந்த தொண்டர் களிடத்தில் வீற்றிருப்பவன்' (86).

தொண்டர்களால் எளிதில் அடையப் பெறுபவன் இறைவன் என்று எடுத்தெடுத்து இயம்புகின்றார். 'அன்பர் அன்புக்கு எளியை' (55). 'அன்பினால் மூர்ச்சித்த அன்பருக்கு அமிர்த சஞ்சீவி போல் வந்து ஆனந்த மழை பொழிபவன்' (80), 'தொழுகின்ற அன்பர் உளம் களிகூர' மன்றுந்துலங்கும் ஆனந்தக் கூத்தன்' (433). 'தமை உணர்ந்தோர் பாமாலைக்குப் பட்சமானோன்' (175) 'காதலன்பர்க்கு கதிநிலை ஈதெனக்காட்டும் போதன்' (265). 'தொண்டருக்கு எளியான்'(263).

அடியாருக்குப் பணி செய்து, அடியாரைக் கண்டு, அவரோடிணங்கி, அவர் சொற் கேட்டு, அன்னவர்க்கே பணி செய்து, அவர்களுடன் வாழ்வதே மனிதப் பிறவியில் பெறற் கரிய பேறு ஆகும். அன்பர்க்குப் பணி செய்யும் வாழ்வு

வாய்க்கு மேல். 'ஈண்டுக் கன்மம் எடுப்பன் அனந்தமே'' (250) என்பர் அடிகளார். இறைவன் அன்பர்க்குப் பணி செய்யும் பேறு வாய்ப்பின் இவ்உலக வாழ்வை நான் வேண்டுவன் (308) என மீண்டும் உறுதி செய்வர். அந்த அன்பர்களோடு இயைந்து இணங்கி வாழப் பெரிதும் அவா உறுவர். 'இறைவா அடியார் பணி எனக்குக் கை கூடுமாறு எனக்குக் கருணை செய்வது எப்போது' (317), 'தாயாய்த் தந்தையாய் தனிப்பெறும் உறவாய் எனக்கு உள்ளவர் நின் அடியேரே அன்றோ' (341), நின் அடியர் கூட்டத்திலே மனது செல்ல அருள் புரிய மாட்டாயா? (579) 'சிற்சு கோதய விலாசமே யான் குறை பல கொண்டவன்; மருளன் உன் அருள் படைத்த அன்பரோடு சேர்ந்தால் உய்வன். சேர்ப்பையோ' (125) 'அன்புருவாகி அன்பரோடு இன்ப வீட்டினில் இருப்பனோ' (129), 'இனம் பிரிந்த மான்போல தட்டுத் தடுமாறித் தவிக்கும் என்னை இன்பமுற்ற அன்பர் பக்கல் இருத்தி வைத்துக் காத்த தலைவர் (133) 'நீ நல்லார்கள் அலையகத்தே என்னை இருக்க வைத்தாய்' (133). 'கூடிய நின் சீரடியார் கூட்டம் என்று எனக்கும் வாய்க்கும் இறைவா' (365)

அடியார் காட்சி, அடியார் கேள்வி, அடியார் இணக்கம், அடியார் உறவு, அடியாரிடையே இயைந்து வாழும் கூட்டு இவை எல்லாம் அவர்க்குப் பணி செய்தற்காக. அப்பணி ஆண்டவனைக் கண்டு வாழ்வு நிறைவுறுதற்காகத் தமக்கு அடியார் பணி அருளல் வேண்டும் என்று அடிகளார் வேண்டுகின்றார். 'இறைவா! அடியவர்களுக்கு நானும் ஓர் அடியவன் அன்றோ தொண்டரடித் தொண்டன் அன்றோ' (627). 'சீரடியார்க்கு ஏவல் செய்யும் பக்தி நெறிக்கு முகம் பாரப்பா. அடியவர்போல் அருட்கண்ணினால் உன்னைக் காண அருளப்பா' (234), உன் தொண்டர் பணி செய்வதென்றோ' (581).

சீவன் முத்தர்கள் வாசனாமலம் முற்றும் அகல பிராரத்தக் கருமம் கழிகின்ற வரை அடியாரது தோற்றத்

தையும் ஆலயத்தையும் அவன் அருள் திருமேனியைக் கொண்டு வழிபடுதலை,

மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரனெனத் தொழுமே (சூ 12)

என்பர் மெய்கண்டார். 'பொய்கண்டார் காணா புனித மெனும் அத்துவித நெறிகண்ட' மெய்கண்டார்தம் நெறி நிற்கும் தாயுமானவ அடிகளார் 'அன்பர் அடி கண்டதே அருளின் வடிவமாய்' (129) கொண்டு நெறி நின்றார். 'குருலிங்க சங்கமாம் கொண்ட திருமேனி' (482) என்று அவன் அருள் மேனியைப் போற்றிப் புகழ்ந்தார். 'எந்நாட் கண்ணியில்' 'அடியார் வணக்கம்' என்று பாடல் பல பாடினார். 'வெம்பந்தம் தீர்த்து உலகாள் திருஞான சம்பந்தன்' அருள் எனக்கு என்று கிட்டும்' (1107), 'ஏரின் சிவபோகம் இங்கிவர்க்கேஎன்ன உழவாரம்'கொண்ட அப்பர்திருவடிக்கு அன்பு வைப்பது எப்போது?(1108)' பித்தர் இறை என்று பேதைபால் தூது அனுப்பிய தமிழ் வித்தகர் சுந்தரர் கொண்ட மெய்வாழ்வைப் புகழ்வது எப்போது? (1109), 'வாதவூர் ஐயனுக்கு அன்பு வைப்பது எந்நாள்' (1110), 'பட்டினத்தார், பத்திரகிரி பண்புணர்வது எந்நாள்' (1111), 'மிக்க திருமூலர் அருளி மேவும் நாள் எந்நாள் (1113), போன்றவை.

இறுதியாக, இறையடியார் உலகத்து உயிரெல் லாம்உய்வதற்காக உடல்தாங்கி வாழ்வோர் என்ற உண்மை யையும் அழகாகத் தெளிவாகச் சுருக்கமாக உணர்த்து கின்றார்.

"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன் றறியேன்; பராபரமே" (856)

அடிகளாரும் அடியார் வழிபட்டு, ஆண்டவன் அருள் பெற்று தான் உற்ற பேரின்பப் பெருவெள்ளத்தை உலகத்து உயிர்கள் பெற்று உய்ய வேண்டும் என்னும் பேரார்வத்தால் 'சேரவாரும் செகத்தீரே' என்று அழைக்கின்றார்.

காகம் உறவு கலந்துண்ணக்
கண்டீர்! அகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்ப வெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏக வுருவாய்க் கிடக்கு தையோ!
இன்புற் றிடநாம் இனிஎடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாரும்! செகத்தீரே!

இவ்வாறு அடியார் பணி, அடியராம் அன்பர் பணி, அன்பராம் உயிர்ப்பணி, ஆற்றல் வழி இன்பம், பேரின்பம் அடையலாம் என்பது தாயுமானவர் கொண்டது மட்டு மன்றிக் கண்ட நெறியும் ஆகும்.

அன்பர்பணி செய்ய என்னை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்து எய்தும், பராபரமே! (790)

# 9. அடிகளாரின் பாடல்களில் சொல்லாட்சி

'ஏ சித்தர்களே! இறைவனே அடியெடுத்து அருளிய அருட்பாடல்கள் அல்ல என் பாடல்கள். அழுது அழுது என் கருத்தில் தோன்றியவற்றையெல்லாம் பாடியுள்ளேன். இத்தகைய என் தமிழ் பாடலுக்குக் குறை ஒன்றும் கூறாமல் தமிழ் உலகம் ஏற்றுக் கொண்டதோடு அன்றி ஆர்வமும் மேலிட்டிருக்கிறது என்பதை அறிகிறேன். எனவே உங்களை நோக்கி 'இத்தமிழ்ப் பாடல்களைப் பாடியவன் யாவன்?' என்று எவரேனும் கேட்டால், இதைப் பாடியவன் சித்தர்களாகிய நீங்கள் கூறியவற்றில் சிறிது தோய்ந்த குணசாந்தன்' எனப்பளிச்செனச் சொல்ல, அந்தச் சொல்லைக் கேட்டு நான் விகசிப்பது எந்த நாளோ''[1] என்ற தாயுமானவர் உள்ளக் கிடக்கையை நோக்கும்போது அவரிடத்தே இறை அருளுக்கு ஏங்கும் பக்தன் உணர்வும், கவிதை புகழை விரும்பும் கவிஞன் ஆர்வமும் துவக்க காலக் கட்டத்தில் அமைந்திருத்தலைக் காணலாம். அக்காலக் கட்டம் ஒன்று அக்கால அவர் பாடல்களில் எல்லாம் வேதாந்த வீறும், வடமொழி ஆர்வமும் பெரிதும் இடம் பெற்றிருக்கின்றன. இரண்டாவது கட்டத்தில் சித்தாந்தத் துணிபும், தமிழ் மொழியில் ஆர்வம் பெரிதும் கொண்டிருந்த காலம். மூன்றாவது காலக் கட்டத்தில் தன்னோடு அன்றாடம் வந்து பேசிப் பழகி வாழ்கின்ற பாமர மக்க

1. H. 64

ளுக்கு ஏற்றவாறு மக்கள் மொழியிலும் நடையிலும் பாடித் தாம் பெற்ற இன்ப மெய்யுணர்வை எல்லோர்க்கும் வழங்கிய காலம். இந்த மூன்று காலக் கட்டங்களுக்கு ஏற்ப அவர் ஆளும் சொல்லாட்சியின் போக்கிலும் மூன்றுவகை அமைப்பைக் காணலாம். முதல் கட்டத்தில் தத்துவப் பொதுமை பொதுளிய வட சொல் ஆட்சியையும், இரண்டாவது கட்டத்தில் இலக்கிய நயமுடைய சிலேடை, ஒரு பொருட் பன்மொழி, அடுக்கு முதலானவற்றையும் மூன்றாவது கட்டத்தில் இலக்கியநயத்தோடு இனிமையும் எளிமையும்பொருந்திய நாடோடி மரபுத்தொடர்கள் (Folk idioms) பாமரர் பேச்சில் வழங்கிய வழக்குச் சொற்கள் தாம் வாழ்ந்த காலச் சூழலில் கலந்த பிறமொழிச் சொற்கள் ஆகியவற்றையும் காணலாம்.

ஏற்றச்சொற்களை (Choice words) எடுத்து இயைத்து வழங்குதல் ஒருவகைச் சொல்லாட்சியாகும். நிறைவு காணாத நெஞ்சுடைய மானிட வாழ்வையும், எப்போதும் எதனிடத்தேனும் உயிரை இயக்கிக் கொண்டிருக்கும் கர்ம வினையையும், ஆண்டவன் அடியெடுத்து அளித்த சிறப்புடைய தமிழையும், பிரபஞ்ச தத்துவச் சாற்றைப் பிழிந்து எடுத்துத் தூசு தும்பு எல்லாம் நீக்கித் தூய ஞானத்தை மட்டுமே வழங்கும் வேதத்தையும் 'படியிட்ட வாழ்க்கை',- 'துடியிட்ட வெவ்வினை' 'அடியிட்ட செந்தமிழ்'.... 'வடியிட்ட மறை' எனத் தேர்ந்த சொற்களால் இவர் கூறுவது நோக்கத் தக்கது. இவ்வாறு உழல்சிந்தை, (63) வளைகடல்,(73) புலைநாய், (161) தூளேறு தூசு, வாளேறு கண்ணி, (584) கண்டுமொழி, (1129) முதலான சொற்களில் அத்தகு சொல்லாட்சியைக் காணலாம்.

இவர் பாடலில் பயின்றுவரும் ஒரு சொல் பலபொருள் (Pun) சொற்களைப் பின் வருமாறு பகுத்து நோக்கின் இவரது கலைத் திறன் நன்கு புலப்படும். ஒரு சொல் வினைப் பொருள் பெயர்ப் பொருள் தருவது ஒருவகை. ஒரே சொல்

பகுதி விகுதி முதலாகப் பகுப்பதால் அமையும் பொருள் வேறுபாடு இன்னொரு வகை. ஒரு சொல் இரண்டுக்கு மேலான பலபொருள் தருமாறு பயன் படுத்தல் பிறிதொரு வகை. இப்படிப் பற்பலவாறு ஒரு சொல் பல்பொருள் தரும் இவரது சொல்லாட்சித் திறன் போற்றத்தக்கதாய் உள்ளது. குரு மௌனி தானே பக்குவம் பெற்றவர். அவர் தாயுமானவர் பக்குவமடையத் துணை செய்தார். இதனை "தானே கனிந்த கனி கனிவிக்க வந்தகனி (182) என்ற தொட ரால் குறிப்பிடுகின்றார். இங்கே 'கனி' என்ற சொல் முதிர்ந்த என்ற வினைப் பொருளிலும் 'பழம்' என்ற பெயர்ப்பொருளிலும் அமைந்துளது. தனக்கும் விளங்குமாறு எளிய இனிய வகையால் இறைவன் தனக்கு அருளிய தன்மையை உலகுக்கு உணர்த்த விழைந்த தாயுமானவர் 'ஆடல்' என்ற சொல்லை இறைவனுடைய Cosmic dance ஐயும், தான் பிறந்து பிறந்துஇறக்கும்தொழிலையும்குறிக்கு மாறு அமைத்துள்ள திறம் உணரத் தக்கது. இவ்வாறே 'ஒளி' (99) என்ற சொல்லும் பதுங்குதல், வெளிச்சம் என வினைப் பொருளிலும் பெயர்ப் பொருளிலும் பயன்படுத்தப் பெற்றுள்ளது. இத்தகு சொல்லாட்சிகளை இவர் பாடல் பலவற்றில்[2] காணலாம்.

ஒரு சொல்லே இரு பெயர்ப் பொருளைத் தருமாறு இவர் அமைத்துச் செல்லும் சொல்லாட்சியில் இல்க்கிய நயம் பொலிகின்றது, 'களை', 'காயம்' முதலான சொற் களை அவர் அவ்வாறு கையாள்கின்றார். 'களை' (1435) களைப் பூண்டு என்ற பொருளிலும், அழகு என்ற பொருளிலும் வருகின்றது. "ஆணவமாகிய களையைக் களைந்து பின் பார்த்தேன் அப்போது எங்கும் ஆண்டவன் அழகையே (களை) கண்டேன்" என்

2. H. 471, 483, 490, 535, 608, 1129, 1452-5.

கின்ற தொடரில் அந்தச் சொல் அவ்வாறு நயத்துடன் கையாளப் பெற்றுள்ளது., காயம்' (614) என்ற சொல்லும் அவ்வாறே புண், உடல் என்றிரு பொருள் தருமாறு வழங் கப்பெற்றுள்ளது.

ஒரே சொல் வரி, ஒலி ஒன்றாக இருந்தாலும் அவற் றைப் பகுப்பதன் மூலம் பொருள்வேறு காட்டி மகிழ்வர் புலவர் பெருமக்கள். அத்தகு சொல்லாட்சியையும் இங்கு ஒருவர் காணக் கூடும். 'திரையுந் திரையும் நதி' (471) என்ற தொடரில் உள்ள முதல் இரு சொற்களும் அவ்வாறு அமைந் தனவே. ஆயினும் 'திரை உந்து இரையும் நதி' என்று பாகு படுத்தி 'அலைவீசி ஓலமிடும் நதி' என்ற பொருள் அமைந்திருப்பதை விளக்கலாம். அவ்வாறே, 'ஆரணி சடைக் கடவுள் ஆரணி எனப் புகழ்' (582) என்ற தொடரில் அமைந்த ஆரணி என்ற சொல்லும் ஆகும். முதற் சொல் லாகிய 'ஆரணி! 'ஆர்+அணி' எனப் பிரித்து'ஆத்திமாலை சூடும் சிவபிரானையும்' இரண்டாவது சொல் ஆரணத்தின் முதல்வியாகிய பார்வதியையும் சுட்டுவனவாம். இந்த இரு சொற்களில் முதல் சொல் தமிழ், இரண்டாவது சொல் வடசொல். ஒரே ஓசை உடைய இரு மொழிச் சொற்களை யும் ஒரே நேரத்தில் இரு பொருள் தருமாறு தத்துவத்தால் வேறுபட்டாலும் இறைவனும் இறைவியும் ஒருவரே என்று சுட்டுவார் போலத் தாயுமானவர் கையாளும் புலமைத் திறன் கற்றார்க்கு வியப்புத் தருவதாக உள்ளது.

ஒரு சொல் இரண்டுக்கு மேலான பல பொருள் தருமாறும் இவர் பாடலில் அமைந்து, கவிதைக்கு ஓசை நலமும் பொருள் நயமும் தந்து சிறப்பிக்கின்றது. எடுத்துக் காட்டாக 581-ஆம் பாடலில் 'அடி' என்ற ஒரு சொல் பாடல் அடி, பாதம், சான்றோர், முதல் (ஆதி) முதலிய பொருள்களில் பயன்படுத்தப் பெறும் பெற்றியைக் குறிப்பிடலாம். இவ்வாறே மதி (578) ஏறு (584), முதலிய சொற்களும் கையாளப் பெற்றுள்ளன.

ஒரு கருத்தைக் கற்பார் உள்ளத்தில் ஆற்றலோடு பதிய வைக்க ஒரே சொல்லை ஒரே பொருளில் ஒரு பாடலில் மீண்டும் மீண்டும் வருமாறு பாடுதல் இவர் சொல்லாட்சித் திறன்களில் ஒருவகையாகும். 'மலைவவர் காதலியின் கருணை பெற்றவர்க்கு உலகத்தில் எல்லாம் இயல்பாகவே வந்தமையும்' என்ற உண்மையை உணர்த்த 578-ஆம் பாடலில் 'உண்டு' என்ற சொல்லை, ஒன்பதுமுறை பயன் படுத்தியுள்ளார். இவ்வாறே இட்ட (581), ஆட (406); மோனம்முதலிய சொற்களும் இவர் பாடலில் அமைந்து அழகு செய்கின்றன.

சீரிய **வினைச் சொல்** ஒன்றைச் சொல்லுக்கு முன்னோ பின்னோ அமைத்து அவற்றின் தொடர்பால் (association) ஆற்றலோடு கூடிய மனக்காட்சிகளைத் தோற்றுவிப்பதிலும் இந்தக் கவிஞர் வல்லவராக உள்ளார். 'மலம்' (Impurity) என்ற சொல்லுக்கு முன்னர் 'கவ்வு' என்றொரு வினைச் சொல் இட்டு 'மலம்', எவ்வாறு தவளையைப் பாம்பு பற்றுகிறதோ அதுபோல் மெல்லமெல்ல ஆன்மாக்களைப் பற்றிக் கொஞ்சம் கொஞ்சமாகத் துன்புறுத்திக் கொல்கிறது என்ற உண்மையைக் கற்பார் உணருமாறு உரைக்கின்றது. இவ்வாரே பொழிகின்ற (382), பூத்த (408), முகிழ்ப்ப (558), அவிழ (27) முதலான வினையெச்சச் சொற்களும் மழை, மலர்ச்சி, கட்டு முதலான காட்சிகளைக் கண்முன் கொணர்ந்து காட்டுகின்றன.

சாதாரணமாக மக்கள் வழங்கும் சொல்லையே தனிப்பட்ட பொருளில் கையாண்டு அதற்கொரு சீரிய பொருள் அமையுமாறு செய்வது திறமான புலவர்களின் செயலாகும். அவ்வாறே divine என்ற பொருளில் 'பெரிய' என்ற சொல்லை இவர் பல இடங்களில் பயன்படுத்தி honorofic expression உடையதாக அந்தச் சொல்லை ஆக்கிவிடுகிறார் உடலின் இழிவு புலப்படுத்த இவர் குறிப்பிடும் நடைமனை (101) சோற்றுத் துருத்தி (110),

தோற்பாவை (818) புழுக்கூடு (1024) நூலாட்சுமை (818) முதலிய சுவை பயப்பனவாம்,இவ்வாறே paradoxes pair of opposite words onamotopoiatic words reduplicative rapetitive expression ஆகியனவும் இவர் பாடலில் அமைந்து அழகு செய்கின்றன.

மூன்றாவது வகையான சொல்லாட்சி தம் காலத்தில் வாழ்ந்த பாமரமக்கள் மொழியையும் தம் காலத்தில் வழங்கிய பிறமொழி வழக்குச் சொல்லையும் இவர் தம் பாடலில் கையாண்டு பாடலுக்கு எளிமையும் இனிமையும் யதார்த்த நிலையும் ஊட்டிய செயலாகும். பாமர மக்கள் மொழி என்று கூறும்போது Folk idioms and Colloquial usage ஆகியவற்றைக் கருதலாம், பின்வரும் தொடர்களில் Folk idioms காணலாம்.

| Folk idioms | Meaning |
|---|---|
| 'தூசு நம்பால் செல்லாதடா' (119) | — உன் சக்தி என்னை ஒன்றும் செய்யாது. |
| 'ஒரு தூசா மதியேன்' (531) | — சிறிதும் மதிக்கமாட்டேன் |
| 'மோசம் போனேன்' (676) | — ஏமாற்றப் பட்டுவிட்டேன் |
| 'உண்டேப்ப மிட' (701) | — அழித்து ஒழித்து நீக்க |
| மாலை வியாபார மயக்கம் (1127) | — உண்மைபோல் பொய்ப் பொருளைக் காட்ட அதனைக் கண்டு ஏமாறும் நிலை. |
| மடக்கிக் கொண்டான் (1425) | — தன்வசமாக்குதல் |
| யமன் ஓலை (1442) | — சாவு |
| மண்ணாங்கட்டி நெஞ்சு (315) | —பயனில்லாதது |

(பேசாத காரியம் inter—course (here the experience of more)

ஆச்சாச்சு (712) ஆயிற்று; வைச்சிருக்கு-(வைத்துள்ளது) பசப்பியர் (1124)(ஏய்ப்பவர்),பச்சென்று(1134)(செழிப்பாக) நீச்சுநில, (1214)—(ஆழங்காணமுடியாத), வெளியாச்சு (94)

(வெளிப்பட்டது), சன்னல் பின்னல் (சிக்கலானது), பகட்டு (119) சொன்னாண்டி, (142) கொண்டாண்டி (1423) ஆர்க்கு (998) (யார்க்கு) வாடா (188,) அடாதடா (119) நாரிமார் (614) முதலிய பேச்சு வழக்குச் சொற்களும் இவர்பாடலில் அமைந்து பாடலுக்குப் பாமரத்துவம் தந்துவிடுகின்றன.

இன்னும் உருதுச் சொற்களாகியச் 'சீனி'(54,192) 'சாட்டை' (324, 1326), 'நிசாம்' (867) முதலிய சொற்களையும் கெடி (62)—கீர்த்தி, 'கிள்ளாக்கு' (62) அதிகாரம் பாளயம் (867) முதலிய தெலுங்குச் சொற்களையும் 'சிக்க' (1128) என்னும் கன்னடச் சொல்லையும், 'வில்லாங்கம்' (1444) impediment என்னும் மராத்திச் சொல்லையும் காலத்திற்கு ஏற்பக் கையாண்டுள்ளார்.

'வருவான், வந்தான்' எனல் போல் என்னும் வழுவமைதியை என்றிவ்வாறு இலக்கணப் புலமையும் தம்கால பேச்சு வழக்குத் தெளிவும் உடைய தாயுமானவர் பாடல்களில் 'நீர்கள் ஊமார்கள்'(1255) என்ற சொற்கள் எவ்வாறு அமைந்தன என்று விளங்கவில்லை.

# 10. அடிகளாரின் பாடல்களில் உருவக நலன்

அறிவுக் கூறும் உணர்ச்சிக் கூறும் ஒரே அளவினதாக அமையும்போது உவமை உருவாகின்றது. அறிவினும் உணர்ச்சிக் கூறு மிகுமாயின் ஆங்கு உருவகம் தோற்றங் கொள்கிறது. உணர்வு பிழம்பாகும்போதும் படிமக் காட்சி வடிவெடுக்கின்றது. இந்த மூவகை மன நிலையிலும் தாயுமானவர் பாடுகிறார். எனவே அவர் பாடலில் உவமை (Simile), உருவகம் (Metephor), படிமம் (image) என்னும் மூவகை அணி நலன்களும் அமைந்துள்ளன. அவற்றுள் இடையில் இடம்பெறும் உருவகம் உவமையை விட ஆழமான புலக் காட்சியை உண்டாக்கவல்லது. தமிழ்ப் புலமைச் சான்றோரால் பண்டுதொட்டு இன்றுவரை பயன்படுத்தப் பெற்று வரும் பெற்றியும் அதற்கு உண்டு. அதனைத் தாயுமானஅடிகளாரும், தாம் பெற்ற இன்ப துன்ப அநுபவத்தை உணர்த்துவதற்கு, அழகுற பயன் படுத்தியுள்ளார்.

அவர் பயன் படுத்தியுள்ள உருவக் காட்சிகளைப் பண்டு தொட்டுப் பயின்று வரும் உருவக் காட்சிகள், புதிய உருவக் காட்சிகள். புதுக்கிய உருவக் காட்சிகள், ஓர் உருவக் காட்சியில் பல கருத்துகளை உணர்த்தல், பல உருவக் காட்சியில் ஒரு கருத்தை விளக்கல் எனப் பலவாறு பிரித்து அறியலாம்.

**பயின்ற உருவக்காட்சிகள்:** பிறவியைப் பெருங்கடலாகக் காணும் காட்சி தமிழ் இலக்கியத்தில் மிகப் பழமை யானதே. பட்டினத்தார் இந்தக் காட்சியின் கூறுகளை எல்லாம் ஒன்றுபடுத்தித் தம் மும்மணிக் கோவையில் அழகுற தொகுத்துரைக்கின்றார். அவர் அகவற்பாவில் பாடியவற்றையே தாயுமானவர்பன்னிருசீர் விருத்தப்பாவில் தொகுத்துப் பாடுகிறார்.

பாடல்:

எண்ணிரிய பிறவிதனின் மானிடப் பிறவிதான்
யாகினும் அரிதரிதுகாண்;
இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ
ஏதுவரு மோஅறிகிலேன்;
கண்ணகல் நிலத்துகாண் உள்ளபொரு தேஅருட்
ககனவட் டத்துள்நின் று
காலூன்றி நின்றுபொழி ஆனந்த முகிலொடு
கலத்துமதி அவசமுறவே
பண்ணுவது தன்மை;இந் நிலைபதிவு மட்டுமே
பதியாய் இருந்ததேகப்
பரிவுகுலை யாமலே கௌரிகுண் டலிஆயி
பண்ணவிதன் அருளினாலே
விண்ணிலவு மதிஅமுதம் ஒழியாது பொழியவே
வேண்டுவேன உமதடிமை நான்;
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே

—சித்தர்கணம்-4

இவ்வாறு முற்றுருவகமாக இவர் பாடிய பாடல்கள் பல.

**புதிய உருவக் காட்சிகள் :** உடம்பை ''காலிரண்டு நவ வாசல் பெற்று வளர் காமவேள் நடனசாலை'' யாக உருவகிப்பது, தவசியைச் சிங்கத்தோடு[5] ஒப்பிடுவது,

தன்னை ஞானமத்தகசமாக உருவகித்துக் கொள்வது முதலியன இவர் கண்ட புதிய உருவகங்கள் எனலாம்.

**புதுக்கிய உருவக் காட்சிகள் :** புலன்களைக் கள்ளர்களுக்கும், வேடர்களுக்கும் உருவகிப்பது பண்டைய மரபே. நாவுக்கரசர் "வளைத்து நின்ற ஐவர் கள்வர்" என்று புலன்களைக் கள்வர்க்கு உருவகிக்கின்றார். 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை என மெய்கண்டார் புலன்களை வேடர்க்கு ஒப்பிட்டு உரைக்கின்றார். இப்பண்டைய உருவகத்தைப் போற்றி எடுத்துக் கொண்டு மேலும் புதுக்கி ஆற்றலும் அழகும் பெறுமாறு விரித்து விளக்குகின்றார் தாயுமான அடிகளார். காட்டுப் புறங்களில் எலியைப் பிடிப்பதற்கு வேடர்கள் பின்வரும் வகையில் முயல்வர். ஒரு கலயத்தில் புகையை உண்டாக்கி எலி வாழும் ஒரு பொந்தில் செலுத்துவர். உள்ளே மூச்சுத் திணறி எலி வெவ்வேறு பொந்துகள் வழியே வெளிவர முயலும். அப்போது அப்பொந்துகளின் வாயிலில் நிற்கும் வேடர்கள் அது தப்ப இயலாதவாறு பிடித்து இழுத்துக் கொழுந்து விட்டெரியும் தீயிலே வாட்டி அது துடிக்கத் துடிக்க அரை வேக்காட்டில் கடித்துச் சுவைத்துத் தின்பர். இந்தக் காட்சியை என்றோ கண்டு நெஞ்சில் கொண்டு வருந்திய தாயுமானவர், புலன்களுக்கு அதனைப் பின்வருமாறு உருவகித்துப் பாடியுள்ளார். ஐந்து பொந்துகளும் ஐந்து பொறிகள்; வேடர்கள் புலன்கள்; தீயே காமம்; எலியே அடிகளார் உயிர். பண்டைய உருவகத்தின் விரிவை இதில் காணலாம். இந்தப் புத்துருக் காட்சியைக் காட்டும் பாடல் பின்வருமாறு :

> 'வாயில் ஓர் ஐந்திற் புலன் என்னும் வேடர்
> வந்தெனை ஈர்த்து வெங்காமத்
> தீயிலே வெதுப்பி உயிரொடும் தின்ன'

**ஒரு படிமத்தில் பல கருத்துகளை உணர்த்தல்:** பாசம், ஞானம், இன்பம், துன்பம், மனம் முதலியவற்றின் இயல்பைப் பற்பல படிமங்களால் தாயுமானவர் படம்

பிடித்துக் காட்டுவர். அவ்வாறே கடல் என்னும் ஒரு படிமத்தைக் கொண்டு பலவகைக் கருத்துகளையும் பல்வேறு உணர்வுகளையும் கற்பார் கண்முன்னர்க்கொண்டு வருவார்.

இறைவனுடைய அருள் பேரின்ப மயமானது. அது இடத்தால் எல்லை இல்லாதது; காலத்தால் முடிவு இல்லாதது; அதனை 'ஆனந்தக்கடல்' என்கின்றார்.

கடவுள்பற்றி எத்தனை எத்தனையோ கருத்துகள், எண்ணற்ற கோடி மனித மனநிலைகளுக்கு ஏற்ப ஏராளமான கடவுள் தத்துவங்கள் தோன்றியுள்ளன; இனியும் பல தோன்றக் கூடும். கடலில் தோன்றிய அலைகளைக் கணக்கிட முடியுமா? அல்லது இனித் தோன்றப் போவனவற்றையாவது எண்ணிச் சொல்ல முடியுமா? அவற்றின் நீட்சியை, எழுச்சியை, வீழ்ச்சியை எப்படி எடுத்துரைப்பது? இத்தனைக் கருத்துகளும் உணர்வுகளும் தோன்றுமாறு கடலை 'நவங்கொள் தத்துவத் திரையெறிகடல்'' என்று உருவகிக்கின்றார்.

அமைதியான கடலில் விழுந்தால் மெல்ல மெல்ல நீந்திக் கரை சேரலாம்; அல்லது கரையில் உள்ள எவருடைய கண்ணிலேனும் பட்டு அவரால் காப்பாற்றப் பெற்றுக் கரை சேரலாம்; ஓசையோடு பொங்கி எழும் கடலில் விழுந்தவன் மீள இயலாது. அப்படித்தான் பெண்ணாசையும். அமைதியும் அடக்கமும் உடைய நல்ல பெண்ணிடத்தே கொண்ட காதலில் இருந்து மீள்வதே அரிது. என்றாலும் வீடுபேற்று முயற்சிக்கும், ஞான குரு காட்சிக்கும் அந்த நல்ல இல்லற வாழ்வில் வழி உள்ளது. அஃது அவற்றுக்குத் தடையாக இல்லை. ஆனால் ஆரவாரத்தோடு ஆடும் பரத்தையர்பால் கொண்ட காமத் தொடர்பிலிருந்து ஒருவன் எழுவது எப்படி? பிறர் அவனைக் காப்பதுதான் எவ்வாறு? அவனைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். இந்தக் கருத்துகளெல்லாம் 'கோதையர் மோகக் குரை கடலில் அழுந்தாத வண்ணம்" என்ற உருவத்தில் குமிழியிடக் காணலாம்.

கடலில் ஆறுகள் பல வந்து கலந்து கடல் வண்ணம் ஆகின்றன. அந்த ஆறுகள் தோன்றக் காரணமாக இருந்ததும் அந்தப் பெருங்கடலே. அந்த ஆறுகளைத் தன்னுள் அடக்கித் தன் மயம் ஆக்கிக் கொண்டதும் அந்த மாபெருங் கடலே. உலக ஆறுகளுக்கு உரிய நீரை மேகங்கள் பல தன்பால் வந்து முகந்துகொண்டு சென்றபோதும் தான் தன்னளவில் குறைந்து விடவில்லை. பின்பு மழையாய்ப் பொழிந்து ஆறாகப் பெருகி ஓடி வந்து கலந்த போதும் தான் பொங்கிக் கரை கடந்து விடுவதில்லை. அது கடலின் இயல்பு. மோனத்தின் பண்பும் அதுவே; மோனமே அனைத்துக்கும் அடிப்படை; அதனை அனைத்தும் அடைகின்றன. எல்லாம் தோன்றுவதும் ஒடுங்குவதும் அதனுள்ளேயே. இத்தகைய தோற்ற ஒடுக்கங்களால் மோனத்திற்கு எத்தகைய நிறைகுறை ஏற்படுவதில்லை. அது பூரணம். இதனை 'மோனவாரி' என்று குறிப்பர்.

கடல் கடத்தற்கு அரிதாக உள்ளது; எங்கும் எப்போதும் சூழ்ந்து உள்ளது; அதனுள் விழுந்தவன் எத்திசை நோக்கி நீந்திச் சென்றாலும், கண்ணுக்கு எட்டிய சேய்மைவரை கடத்தற்கரிய நீர் சூழ்ந்து கொண்டிருப்பதை காண்கிறான். இப்படியேதான் பிறவியும் சீவனை அது என்றும் சூழ்ந்திட கொண்டிருக்கின்றது. அதனை மீறிக் கடந்து அப்பால் செல்ல இயலாது. பிறந்து பிறந்து உயிர் உழன்று கொண்டே இருக்கின்றது. இந்தக் கருத்தினைப் 'பிறவி வளைகடல்' என்ற படிமத்தால் உணர்த்துகிறார் தாயுமானவர்.

கடல் எல்லை இல்லாமல் பெருகுவது; வற்றாதது, ஆழங்காண முடியாதது: கங்குகரையற்றது; திமிங்கலம்; சுறா முதலிய கொடிய நீர் வாழ்வனவற்றைக் கொண்டது, எழுச்சி உடையது; உயர்ந்தோங்கும் மலைகளோடு உலகைச் சூழ்ந்து அச்சுறுத்துவது; கண்ணில் காணும் அந்தக் கடலின் காட்சியைக் கண்ணுக்குப் புலப்படாத பாசத்தின் உருவாக்கி

உணர்த்துகின்றார் தாயுமானவர். 'பாசக் கடல்', ஆசைக் கடல்? என்ற தொடர்களில்.

**பல உருவக் காட்சியில் ஒரு கருத்தை உணர்த்தல் :** இவ்வாறு கடல் என்னும் காட்சி ஒன்றைக் கொண்டு கருத்து பலவற்றை உணர்த்தியவாறே கருத்து ஒன்றைப் பல படிமங்களின் மூலம் தாயுமானவர் விளக்குவதும் இங்குக் குறிக்கத்தக்கது. பதி, பசு, பாசம் என்னும் முப்பொருளில் பாசம் என்பதனைப் பின்வரும் உருக்களைக் கொண்டு தாயுமானவர் உணர்த்துகின்றார்.

இறைவன் அருள் பழுத்து ஒழுகும் தேவதரு. அது கேட்டதையெல்லாம் கொடுக்கும், அதனைக் கண்டறி யாமல் வழிதவறி இருண்ட கானகத்துள் நுழைந்து வெளியே வர இயலாது. அங்கு வாழும் கொடிய வன விலங்குகளைக் கண்டு அஞ்சி நடுங்குகிறான் மனிதன். அத்தகைய காடே பாசமாகிய அடவியாகும். அதனைப் 'பாசாடவி' என் கிறார் அடிகளார். அதனுள் நுழையாதவனே இறைவனை அடைய முடியும்.

எத்தனையோ பொருள்கள் உலகில் உள்ளன. நமக்கு வேண்டிய நல்லனவும் உள்ளன; வேண்டாத் தீயனவும் உள்ளன. எது நன்று, எது தீது, எது வேண்டும், எது வேண்டா என்று நம்மால் கண்டு கொள்ள முடிவதில்லை. இப்படியேதான் பாசமும் நம் கண்ணை மறைக்கின்றது ; கருத்தை மயக்குகிறது. எனவே பாசத்தை இருளாக்கி 'பாச இருள்!' என்பர் அடிகளார்.

காட்டாற்றில் எப்போது வெள்ளம் வரும், எப்படி வெள்ளம் வரும், எவ்வளவு வெள்ளம் வரும் என்று முன் கூட்டிச் சொல்ல இயலாது. மேலும் காட்டாற்றுக்கு நெறி யான கரை ஒன்றும் கிடையாது. அவ்வப்போது புதுப்புது வழிகளில் அறுத்துக் கொண்டு ஓடிப் பயிர்களுக்கும், உயிர் களுக்கும் பற்பல கேடுகளை விளைவிக்கும். ஆசையும்

அப்படித்தான். அதனை 'ஆசையாம் கானாறு' என்ற படிமம் மூலம் அடிகளார் தெளிவு செய்கிறார்.

அங்கும் இங்கும் செல்லாமல், நின்ற இடத்திலேயே நிற்கும் மரங்களைவிட நீண்டு நெளிந்து செல்லும் மண்புழுப் பிறவி எவ்வளவோ உயர்ந்தது. மரம்போல் —அது ஒரே இடத்தில் கட்டுண்டு கிடப்பதில்லை. நினைத்த நினைத்த இடத்திற்கெல்லாம் நெளிந்து நெளிந்து செல்ல அதனால் இயலும். என்றாலும் அதனருகே வந்தமர்ந்து பிடித்துத் தின்னும் பறவைகளைக் காணும் சக்தி அதற்கில்லை. காட்சி அளவில் அது கட்டுண்டு கிடக்கின்றது. இப்படி ஒவ்வொரு வகையில் கட்டுண்ட உயிர்ப்பிறவி பலவற்றுள் மானுடம் எவ்வளவோ உயர்ந்தது. ஆனால் அதுவும் ஆசை வயப்பட்டு உண்மையை எண்ணவும், நன்மையில் செல்லவும் இயலாமல் கட்டுண்டு கலங்குகின்றது. அதனை அடிகளார் 'பாசக்கட்டு' என்ற உருவகத்தால் உணர்த்துகின்றார்.

உண்ணும் பொருள் உலகில் எத்தனை எத்தனையோ உள்ளன. அவை எல்லாம் உயர் வாழ்வுக்காக உயிர் வாழ்வுக்காகப் படைக்கப் பட்டனவே. ஆனால் அவற்றுள் நஞ்சு கலந்து விடின் அவற்றின் நல்லியல்பு அழித்துவிடும். வாழ்விக்க தோன்றிய அவை உயிர்களைக் கொல்லத் துவங்கி விடும். பிரபஞ்சத்தின் இயல்பும் இதுதான். அது மானிட வாழ்வுக்காக, வளர்ச்சிக்காகப் படைக்கப் பட்டதே. ஆனால் ஏனோ ஆசை என்னும் நஞ்சுக் கையோடு நஞ்சு நாவோடு நஞ்சுக் கண்ணோடு, நஞ்சுச் செவியோடு, நஞ்சு மனத்தோடு அதனை மனிதன் தீண்டும்போது, இந்த உலகம் நஞ்சு மயமாகிறது. ஆசை அப்படி உலகை நஞ்சாக்க வல்லது. எனவே தான் 'வேட்கை நஞ்சு' என்று பாசத்தை உருவகமாக்கிக் காட்டுகின்றார் அடிகளார்.

நஞ்சு உடனே கொல்லும்; முதலில் உடல் உறுப்பு களைக் கொல்லும். மதுவோ மெல்ல மெல்லக் கொல்லும்

முதலில் உயிர்ப் பண்பாகிய இரக்கம், அறிவு, அறம் முதலிய நல்லியல்புகளை நாசம் செய்யும்; பின் குடிகாரனையும் கொல்லும். அந்த மயக்கத்தில் கயிறு பாம்பாகவும், பாம்பு கயிறாகவும் தோன்றும். இவற்றையெல்லாம் 'வேட்கை மது' என்னும் உருவகத்தால் உணர்த்துகிறார்.

பிசாசு பிடித்தவனுக்கு தன்னுணர்வு இருப்பதில்லை. தாய், தந்தை, மனைவி, மக்கள் என்ற அறிவையும் அவன் இழந்து விடுகிறான். நண்பர், தலைவர், கடவுள் என்ற அறத் தெளிவும் அவனை விட்டு நீங்கி விடுகின்றது; அது ஆட்டுகின்ற ஆட்டுக்கு ஏற்ப அதன் கைப்பாவையாக ஆடுகின்றான். ஆசையும் அப்படியே. அதுவும் தான் பற்றிய ஒருவனின் அன்புணர்வு, அறிவுத் தெளிவு, அறநெறி ஆகியவற்றைக் கெடுத்துத் தன் போக்கில் அவனை ஆட்டுவிக்கின்றது. இதனை 'ஆசைப் பிசாசு' என உருவகித்துக் காட்டுகிறார் அடிகளார்.

இவ்வாறு உருவகநலம் பல தோன்றத் தாம் உணர்ந்த சமய தத்துவ உண்மைகளையெல்லாம் பிறரும் உணருமாறு உணர்த்தும் மகாகவி தாயுமானவர் ஆவர். அதனால்தான் அமர கவி பாரதியாரும்,

> "என்றும் இருக்க உளங் கொண்டாய்
> இன்பத் தமிழுக் கிலக்கியமாய்
> இன்றும் இருத்தல் செய்கின்றாய்
> இறவாய் தமிழோ டிருப்பாய் நீ;
> ஒன்று பொருளஃ தின்பமென
> உணர்ந்தாய் தாயு மானவனே
> நின்ற பரத்து மாத்திரமோ
> நில்லா இகத்தும் நிற்பாய் நீ"

என்று பாடிப் பரவுகிறார்.

தாயு மானவனே!
என்றும் இருக்க உளங்கொண்டாய்!
இன்பத் தமிழுக் கிலக்கியமாய்
இன்றும் இருத்தல் செய்கின்றாய்
இறவாய் தமிழோ டிருப்பாய் நீ!

என்று வாழ்த்தும் அமரகவியார் அடிகளார் பாடல்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் பெற்றுள்ள அழியாமையை உணர்த்துவார்.

அடிகளாரின் மாணாக்கர் அருளய்ய சுவாமிகள் தாம் இயற்றிய அகவலில்,

'கண்டமு தென்னக், கனிரச மென்னத்
தண்டமிழ் மாரி தன்னைப் பொழிந்து.'

என அடிகளாரின் தமிழ்க் கவிதையின் இனிமையை எடுத்துரைப்பர்,

''அநுபவத்தில் தமிழைப் பரவவும்'...

எனத் தனிப்பாடல் ஒன்றும் பாராட்டும்.

இவ்வாறு தாயுமானவர் தமிழைச் சான்றோர் பலர் பாராட்ட அடிகளாரும், தம் ஆர்வத்தை ஆங்காங்கே இலைமறைகாய்போல் குறித்துச் செல்வர். சுந்தரரை 'வித்தர் தமிழ்ச் சத்தர்' என்பர்.

**பெரிய விளையாட்டு** 'எல்லாம் இங்கே ஒரு சூதாட்டம்' என்றார் உமர்கய்யாம். வாழ்வியலை உயிரின முன்னேற்றப் போராட்டமாகக் காண்கின்றான் தார்வின். வாய்த்த சிலருக்கு வாழ்வு கொண்டாட்டமாக இருக்கிறது. பலரோ திண்டாட்டம் என்கிறார்கள். யார், என்ன கூறினாலும் அவர்கள் கூற்றுகளிலெல்லாம் தவறாமல் ஒரு சொல் இடம் பெற்றிருத்தலைக் காணலாம். அதுதான் ஆட்டம்.

ஏதோ ஒருவகையில் சராசரங்களெல்லாம் ஆடிக் கொண்டிருக்கின்றன. நாமும் ஆடிக் கொண்டும் ஓடிக் கொண்டும் இருக்கின்றோம்.

பொதுவாக ஆட்டங்கள் அனைத்தையும் இருவகையாகப் பிரிக்கலாம். ஒன்று, விளையாட்டு; மற்றொன்று வினையாட்டு. விளையாட்டு ஆடுவோனைப் பொறுத்த வரை அவன் இச்சைக்கு உட்பட்டது, ஆடுங் காலத்து நிகழும் இன்பமன்றி முன்பின் வேறு எப்பயனும் கருதாதது.

வினையாட்டு அத்தகையது அன்று. அதற்கு முன்பின் தொடர்பு உண்டு. மேலும் ஆடுவோனின் இச்சாசுதந்தரம் இதில் ஓர் எல்லைக்கு உட்பட்டது. பெரும்பாலும் அஃது இல்லை என்றே சொல்லலாம்.

உயிர்களின் சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் ஆகிய வினைகளுக்கு ஏற்ப ஆணவம் முதலிய மலங்களால் இப்பிரபஞ்சத்தில் அமைதி நாடி ஆடிக் கொண்டிருக்கின்றன. உயிர்கள் இத்தகு வினையாட்டத்திலிருந்து விடுதலை பெற்றுப் பேரின்பமாகிய அருளமைதியை அடைய இறையருள் துணை செய்கிறது. உயிர் தன் ஆட்டத்திலிருந்து விடுதலை பெறத் தான் ஆடுகிறது. இந்த ஆடல் கட்டற்றது. தற்பயன் எதனையும் கருதாது. இது விளையாட்டு.

உயிர்களும் சிற்சிலபோது விளையாடுகின்றன. பூனை தன் குட்டியோடு விளையாடுகின்றது. குரங்குகள் குட்டியைப் பற்றிக் கொண்டு விளையாடுகின்றன. கண்ணாமூச்சி, சடுகுடு முதலிய ஆட்டங்களை மனிதனும் ஆடுகின்றான். இவை காலத்தால் குறுகிய விளையாட்டு; இடத்தால் எல்லைக்குட்பட்ட விளையாட்டு; சின்ன விளையாட்டு.

இந்த விளையாடல்கள் தனக்காகவே ஆடப்பெறுகின்றன. தன் இன்பத்திற்காகவே ஆடப்பெறுகின்றன. தன் வெற்றி தோல்விகளுக்கு இடம் தருவன.

இப்படிக் கால, தேச வர்த்தமானங்களுக்குக் கட்டுப் படாத விளையாட்டே இறையருள் விளையாட்டு. முன்பு குறித்ததுபோலத் தற்சார்பு இன்றி,உயிரின் விடுதலைக்காக நிகழ்வது இது. இது என்றும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது; எங்கும் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. எப்படி யெப்படியோ நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இந்த விளையாட்டைத் திருவிளையாட்டு,பெருவிளையாட்டு என்று மெய்ப்பொருள் கண்ட சான்றோர்கள் குறிக்கின்றனர். அத்தகு சான்றோர் களுள் ஒருவரான தாயுமானவர், இந்த அருட்கூத்தைப் பெரிய விளையாட்டு, அவதானம், கருணை விளையாட்டு திருக்கூத்து என்றவாறாகக் குறிப்பிடுகின்றார்.

செம்பில் களிம்புபோல் உயிரின் மூலமலமாகிய ஆணவ மலம் செறிந்து அவ்வுயிர் தன்னையும், தன்னை அஞ்ஞானத் தினுள் அழுத்தியிருக்கும் ஆணவமாகிய மலத்தையும் அறிய இயலாது, அது உயிரை மறைத்து வைத்துள்ளது. அம்மலம் கழிந்து உயிர் தன்னை உணர்ந்து, தலைவனை உணர்ந்து, அவன் திருவடியில் கலந்து விடுதலை பெற இறைவன் அருள் கூர்கிறான். இந்த அருளால் உயிர்க்குத் தனு, கரண, புவன போகத்தை அளிக்கிறான்,

முட்டையில் குஞ்சாக உருவாகும் கருவுக்கு முட்டைஓடு பாதுகாவலாக இருக்கிறது. ஆனால் அது குஞ்சாக முழுநிறை உறும்போது பாதுகாப்பாக இருந்த அதே முட்டைஓடு குஞ்சு வெளியே புறப்படுவதற்குப் பகையாக, தடையாக உள்ளது. அப்போது குஞ்சு தன் மூக்கினால் ஓட்டைக் குத்தி, உடைத்துக் கொண்டு புறத்தே வருகிறது. புறத்தே வந்து திறந்த வெளியைக் கண்டு மகிழ்கிறது. இப்படியே ஆணவ மலக் கருவுக்கு, இறைவன் அளித்த தனு, கரண. புவனமாகிய மாயை, உயிர் தெளிவு பெறும் வரை அதற்குப் பாதுகாப்பாக இருக்கிறது. தெளிவு பெற்ற போது இந்த மாயா பிரபஞ்சத்தோடு தனக்குள்ள தொடர்பை அறுத்துக் கொண்டு விடுதலை பெற முயலு கிறது. ஆனால், அந்த முயற்சிக்கு எத்தனையோ இக்கட்டு

கள் ஏற்படுகின்றன. தெளிவு வந்தாலும் மாயா சக்தியிலிருந்து உயிர் மீள முடியாமல் தவிக்கிறது.

இப்படித் தவிப்பதற்கு என்ன காரணம்? அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய், ஆனந்த பூர்த்தியாகி உயிர்க்குயிராய்த் தழைக்கும் இறைவனின் பெருமையை உணராது 'நான், எனது' என்னும் சிறுவீடு கட்டி அதற்கேற்ப வாழுகின்ற சிறுமையே காரணம். உண்மையை உணர்வதற்கு உவந்தளித்த உணர்வை உடம்பு என்னும் எல்லைக்குள் அமைத்துக் கொண்டு, 'நான்' என்னும் அகந்தையை வளர்த்துக் கொண்டு ஆண்டவனின் அருள் நோக்கை மறக்கும் போது துணையாய் வாய்த்த மாயை சுமையாக அமைந்து விடுகிறது இந்த 'நான், எனது' என்னும் அகங்கார, மமகார உணர்வுகளினாலே மனிதன் அல்லல் ஆட்டம் ஆடுகின்றான்.

இந்த மனமாயை மிக ஆற்றல் வாய்ந்தது. சொற்பேச்சுக் கேளாத பிள்ளையைத் 'தொட்டியில் வைத்து ஆட்டி ஆட்டித் துடையினைக் கிள்ளல் போல்' ஒரு நினைவின் வழி உயிரைச் செலுத்தி அழிக்கும் துன்பமாகிய அஞ்ஞான பூமியில் அழுத்தி ஆட்டங் காட்டும். உயிரை அடக்கி ஆண்டு கணவனுக் கடங்காத காரிகை போல் திரியும்; இது இரும்பினும் வலியது; காணாததைக் கண்டதாகவும், கேளாததைக் கேட்டதாகவும் கருதி உயிரின் இயல்பினை அணுவினும் குறுகியதாக ஆக்கிவிடும்.

இப்படிப்பட்ட அணுவளவாக்கும் மனமாயையிலிருந்து விடுபட்டு அகண்டத்தோடு ஒன்றுவதற்கு இறைவன் நெறிபல வகுத்தளிக்கிறான். அந்நெறிகளால் சமயம் பல உருவாகின்றன. சமயம் கடந்து நிற்குமவன், உயிர்களின் ஏற்றத்திற்காகத் தன்னை எச்சமயங்களுள்ளும் ஆளாக்கிக் கொள்கின்ற கருணை விளையாட்டின் திறம் சொல்லுதற்கரியது. இத்தகு அண்டம் பலவற்றை வெட்டவெளியிலே இயக்குகின்ற வித்தை மிக அற்புதமானது. இந்த அற்புத

மான வித்தைக்கு அவன் எந்தக் கருவியையும் சார்ந்திருக்க வில்லை. சாட்டையில்லாப் பம்பர ஜாலத்தைப் போல எல்லாவற்றையும் அவன் ஆட்டுகின்றான். நாடகம் ஒன்று காணும்போது நாடக மாந்தர் பெறும் வெற்றி கண்டு நாம் மகிழ்ந்து கூத்தாடுவதும், இல்லை தோல்வி, கண்டு நாம் துடித்து வருந்துவதும் இல்லை. அவற்றைக் காணுகின்றோமே தவிர, அந்தக் காட்சி அவ்வளவாக நம்மைத் தாக்குவதுமில்லை. நாம் சாட்சியாக மட்டுமே இருக்கிறோம். எனவே அதில் நிகழும் இன்ப துன்பங்களை நாம் சார்ந்து விடுவதுமில்லை. ஆக்கி, அளித்து. அழிக்கும் தொழில் மூன்றினையும் நிகழ்த்தும் இறைவன் எள்ளத்தனை கூடத் தாக்கற நிற்கும் சமர்த்தனாக உள்ளான். இதனைச் சிந்தித்தால், நாடகத்தைக் காண்பதுபோல் நம் இன்ப துன்பங்களையும் கண்டால் தாக்கற நிற்கும் சாமர்த்தியம் நமக்கும் வாய்க்கும்.

'அறவழி நின்று நிறைமனம் கொண்டோரே, தாக்கற நின்று தாரணியை இயக்கும் தருக்கிலா உன் திருக்கூடத்தை நோக்கவல்லவர் ஆவர்'. அவர்கள் ஆதார, ஆதேயம் முழுதும் நீ என்றறிந்த ஞானியர்கள். அகிலமீது உயிர்களை ஆட்டி ஆடல் கண்டு ஆடுகின்றவனும் நீ என்றறிந்த ஞானியர் ஆவர். உயிரின் ஆட்டமெல்லாம், 'யான், எனது' என்னும் செருக்கெல்லாம், ஆசை மலம் எல்லாம் தீபட்ட கர்ப்பூரம் போல் கரைந்து மறைந்துபோக வேண்டுமானால் தாக்கற நிற்கும் சமர்த்தனின் ஆடலைக் காணல் வேண்டும்!

மானுட முயற்சி இன்றியமையாதது என்றாலும் அஃது ஓர் எல்லைக்குட் பட்டதே. அவன் அருளின்றி அவன் தாளினை அடைதல் இயலாது. அவன் அருள் கூர்ந்து ஆடலைக் காட்டி, ஆணவ உயிரின், ஆடல் ஒழித்து மலங்கழித்து ஆண்டு கொளல் வேண்டும். ஒருநாள் உயிர் பக்குவம் பெறும் போது அவன் ஆண்டு கொள்கின்றான். அப்படி ஆண்டு அருளும்போது அவன் திருவடியில் 'நான்' என்னும் சிற்றுணர்வு

கலந்து, கரைந்து தாடலை போல் (தாள்+தலை ள்+த்=ட) பேருணர்வோடு ஒன்றி விடுகின்றது.

"இவ்வாறு இருளாகிய ஆணவ மலத்தால் உருவாகின்ற கருவாகிய சிறிய வீட்டில் உணர்ச்சியின்றிக் கண்ணற்ற குழந்தையைப் போலக் கட்டுண்டிருந்த உயிர்களைப் பிரபஞ்சத்தில் உலவவிட்டுத் துன்பமாகிய காவல் அமைத்து கால, தேச, வர்த்தமானங்களுக்குப் பொருந்திய பெயர் ஒன்றும் அதற்கு இட்டு மெய்யென்று கூறும் பொய்யான, நிலையற்ற உடலானது வளர்ந்து, வலுப்பெறுமாறு உணவு களை உண்பித்து அகண்ட, பெரிய உலகத்தே இறப்பு பிறப்புகளாகிய பெரிய விளையாட்டு அமைத்துத் தான் காட்டிய நெறியில் தவறும்போது நமனால் தண்டித்து இறுதியில் எல்லாத் துன்பங்களையும் நீக்கி இராப்பகலற்ற பேரின்ப வீட்டினில் பொருந்தி உறங்குங்கள்" என்று எல்லாச் சீர்மைகளையும், சிறப்புகளையும் இறைவன் அமைத்து வைத்துள்ளான்.

கருவறையில் மெல்ல வளர்ந்து குழந்தை பிறக்கிறது. அதற்கு வேப்பிலைக் காம்பினை வளைத்து வளையல்போல் செய்து காவலாகக் காப்பிடுகின்றனர். பின்னர் மரபுக்கேற்ப ஒரு பெயரும் தருகின்றனர். உடல் வளர உணவும், ஊட்டு கின்றனர். இப்படி உயிர் மீண்டும் மீண்டும் பிறந்து, வளர்ந்து, இறந்து முடிவில்லாமல் ஆடுதற்கு ஏற்றாற்போல எல்லையிலாத பிரபஞ்சமாகிய விளையாட்டுத் திடலையும் தனு, கரணமாகிய விளையாட்டுக் கருவிகளையும் இறைவன் தருகிறான். இத்தகு விளையாட்டை அமைத்து, அளித்த கூத்தனின் அந்நெறித் திருக்குறிப்பைஉணர்ந்துகொள்ளாது ஆடுவோரை, வரம்புமீறி விளையாடுவோரை ஆட்டக் களத்தை விட்டு அப்பால் அகற்றுகின்ற நடுவராகிய நமனைவிட்டு நீக்கி அறிவுறுத்திப் பின்னர் வீடளிக் கின்றான். இந்தக் கருணை விளையாட்டை, பெரிய விளையாட்டை, நிகழ்த்தும் சித்தாந்த முத்தி முதலைத் தாயுமான அடிகள் பின்வருமாறு பாடி உருகுகின்றார்.

"காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப் போற்
கட்டுண் டிருந்தஎமை வெளியில்விட் டல்லலொங்
காப்பிட் டதற்கிசைந்த
பேரிட்டு, மெய்யென்று பேசுமாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை அமுதமூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்
டேரிட்ட தன்சுருதி மொழிதப்பின் நமனைவிட்
டிடருற உறுக்கி, இடர்தீர்த்

திரவுபக லில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்துதுயில் கொண்மின்!" என்று
சீரிட்ட வுலகன்னை வடிவான எந்தையே!
சிந்தாந்த முத்தி முதலே!

# 11. நாட்டுப்புறப் பாடல் வடிவில் நவின்ற சித்தாந்தம்.

தாம் பெற்ற இன்பம் உலகமும் பெற்றுய்ய உழைத்த பெருமக்கள் எல்லோரும் தாம்தாம் பெற்ற அருளநுபவங்களை அகிலத்திற்கும் உணர்த்திச் சென்றுள்ளனர். அவ்வாறு சித்தாந்தத்தை உணர்த்தத் துவங்கிய சைவச் சான்றோருள் மணிவாசகப் பெருமானும், தாயுமான அடிகளாரும் குறிப்பிடத் தக்கவர் ஆவர். வெண்பா, அகவற்பா முதலிய பாவகைகளிலும், விருத்தம் முதலிய பாவினங்களிலும் அமைந்துள்ள சைவசித்தாந்த உண்மைகளை இவ்விரு சான்றோர் பெருமக்களும் நாட்டுப்புறப் பாவடிவில் நானிலத்தார்க்கு உணர்த்தியுள்ளனர். இவ்விரு பெருமக்களிலும் தாயுமானவர் பாடல்களே இங்கு இடம் பெறுகின்றன.

பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள் உண்மைகளைச் சித்தாந்த நெறியில் உணர்த்துதற்கு நாட்டுப்புறக் கண்ணிப் பாவகைகளை இவர் கையாண்டுள்ளார். கற்றறிந்தார் சிலர் மட்டுமன்றி, பக்தி செய்ய மட்டுமே அறிந்த பாமரரும் பிறசமயச் சூழல்களுக்கு இடையே விவேகத்தோடு சிவநெறியில் நிற்கத் தாயுமானவர், இக்கண்ணி வடிவுகளில் தத்துவ உண்மைகளைத் தந்துள்ளார் எனக் கருதலாம்.

"ஆக்கி அளித்துத் துடைக்கும்—தொழில்
அத்தனை வைத்தும் எள்ளத்தனை யேனும்
தாக்கற நிற்கும் சமர்த்தன்—உள்ள
சாட்சியைச் சிந்திக்கத் தக்கது தோழி (1439)
(சங்கர! சங்கர! சம்பு!)

என்னும் ஆனந்தக் களிப்பு மூலமும்,

"ஆணவத்தோ டத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோ டத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ"
(1298)

"சஞ்சிதமே ஆதி சரக்கான முச்சேறும்
வெந்தபொரி யாகஅருள் மேவும்நாள் எந்நாளோ"
(1162)

"ஆன புறக்கருவி ஆறுபத்தும் மற்றுளவும்
போனவழி யுங்கூடப் புல்முளைப்ப தெந்நாளோ"
(1156)

என்னும் எந்நாட்கண்ணி.பராபரக் கண்ணி முதலியவற்றின் மூலமும் பதி,பசு, பாச இயல்புகளைப் பண்டைய உவமைகளோடு புதிய கற்பனை நலமுந் தோன்றப் பாடியருளியுள்ளார். அப்பாமரப் பாட்டுள் முத்திக்குத் துணையாகும் சைவ சமய சாதனமாகிய நன்னெறி நான்கினைக் குறித்து அடிகளார் அருளியுள்ள கண்ணிகள் சிலவற்றைக் காணலாம்.

சாதனங்கள் நான்கினைச் சன்மார்க்கம், சக மார்க்கம், சற்புத்திரமார்க்கம், தாத மார்க்கம் என்று சித்தியார் கூறி, அவை ஞானநெறி, யோகநெறி, கிரியா நெறி, சரியை நெறி என்னும் நால்வகை நெறிகளாவதையும், அவற்றின் பயனையும் பின்வரும் எண்சீர் விருத்தத்தில் எடுத்துரைப்பார்.

"சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்
தாதமார்க் கம்என்றும் சங்கரனை அடையும்
நன்மார்க்கம் நால்அவைதாம்; ஞானம் யோகம்
நல்கிரியா சரியைஎன நவிற்றுவதும் செய்வர்;

சன்மார்க்க முத்திகள்சா லோக்கியசா மீப்பிய
சாரூப்பிய சாயுச்சியம் என்றுசதுர் விதமாம்;
முன்மார்க்க ஞானத்தால் எய்தும் முத்தி
முடிவுஎன்பர்; மூன்றினுக்கும் முத்திபதம் என்பர்''
(சித்தியார். 270)

சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய இந்நெறிகள் ஒன்றுக்கொன்று இயைந்து, அதே நேரத்தில் ஒன்றிலிருந்து ஒன்று உயர்ந்து, முக்தி நெறிக்கு உதவுவதைத் தாயுமானவர் பின்வரும் பாடலில் மிக அழகாகக் கற்றறியாதவனும் காணும் உவமையை வைத்து உணர்த்தியுள்ள சிறப்பு ஆன்மிக அநுபவத்திற்கு உரியது.

''விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ? பராபரமே. (792)

சரியை நெறியில் புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டு சங்கரன்தன் கோயில் செய்யும் பணிகளும் அவற்றினும் மேலாகத் திருவேடம் கண்டால்,

''அடியேன் செய்வது யாது பணியீர் (சித்தியார். 271)

என்று பணிந்து தொண்டு செய்யும் அடியார் வழிபாடு மிகச் சிறந்ததாகும். இதனை,

''அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே. (790)

என்ற கண்ணியின்மூலம் தாயுமானவர் உணர்த்துவதைக் காணலாம்.

புத்திர மார்க்கமாகிய கிரியை நெறி குறித்து,

''புத்திரமார்க் கம்புகலின் புதியவிரைப் போது
புகைஒளிமஞ் சனம்அமுது முதல்கொண்டு ஐந்து
சுத்திசெய்துஆ சனம்மூர்த்தி மூர்த்தி மானாம்
சோதியையும் பாவித்துஆ வாகித்து சுத்த

பத்தியினால் அருச்சித்து பரவிப் போற்றிப்
பரிவினொடும் எரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலும்இக் கிரியையினை இயற்று வோர்கள்
நின்மலன்தன் அருகிருப்பர் நினையுங்காலே.''
(சித்தியார். 272)

என்றுரைக்கும் சித்தியார். அடிகளாரும்,

''நாவழுத்துஞ்சொன்மலரோ?
நாளுதிக்கும் பொன்மலரோ?
தேவையுனக் கின்னதென்று
செப்பாய்! பராபரமே!'' (882)

''பஞ்சசுத்தி செய்துநின்னைப்
பாவித்துப் பூசைசெய்தால்
ஞ்சிய ஞானம்
விளங்கும்; பராபரமே!'' (789)

என்னும் பராபரக் கண்ணிகளில் இதனை வைத்து உணர்வோடு பாடித் தெளிவு செய்துள்ளார்.

யோக நெறியின் எண்வகைப் படிகளையும் முறையாகப் பின்வரும் பாடலில் சித்தியார் தொகுத்து உரைக்கின்றது.

''சகமார்க்கம் புலன்ஒடுக்கித் தடுத்துவளி இரண்டும்
சலிப்புஅற்று முச்சதுர முதல்ஆதா ரங்கள்
அகமார்க்கம் அறிந்துஅவற்றின் அரும்பொருள்கள் உணர்ந்தங்கு
அணிந்துபோய் மேல்ஏறி அலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க அமுதுஉடலம் முட்டத் தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தல் முதலாக வினைகள்
உகமார்க்க அட்டாங்க யோக முற்றும்
உழத்தல்உழத் தவர்சிவன்தன் உருவத்தைப் பெறுவா
(சித்தியார் 273)

பின்வரும் பராபரக் கண்ணியில் அப்படிகளின் முதலையும் முடிவையும் அடிகளார் சுட்டி உரைக்கக் காணலாம்.

''கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பில் தேகம் விழுமோ? பராபரமே,'! (788)

ஞானநெறியைக்,

''கேட்டல்முதல் நான்காலே கேடிலா நாள்பதமும்
வாட்டம் அறஎனக்கு வாய்க்கும்நாள் எந்நாளோ.'' (1303)

' என்னதியா னென்பதற எவ்விடமும் என் ஆசான்
சன்னிதியாக் கண்டுநிட்டை சாதிப்ப தெந்நாளோ'' (1304)

''எவ்வடிவும் பூரணமாம் எந்தைஉரு என்றிசைந்த
அவ்வடிவுக் குள்ளே அடங்கும்நாள் எந்நாளோ'' (1307)

''சிந்தித்த தெல்லாஞ் சிவபூ ரணமாக
வந்தித்து வாழ்த்தி வணங்கும்நாள் எந்நாளோ'' (1308)

''தாங்கியபார் விண்ணாதி தானேஞா னக்கினியாய்
ஓங்கு மியோகவுணர் வுற்றிடும்நாள் எந்நாளோ'' (1309)

''அவ்வுயிர்போல் எவ்வுயிரும் ஆனபிரான் றன்னடிமை
எவ்வுயிரும் என்றுபணி யாம்செய்வ தெந்நாளோ'' (1314)

என்பன போன்ற பாடல்கள் உணர்த்துகின்றன.

உண்மைகள் என்றும் மாறாதன என்றாலும், கால இடச்சூழல் மாறுதலுக்கு ஏற்ப அவற்றை உணர்த்துகின்ற நெறிகளும் கருவிகளும் வேறுபட வேண்டியுள. அவ்வாறு தொடர்ந்து வாழையடி வாழையாகச் சித்தாந்த உண்மைகளை உணர்த்துகின்ற சான்றோர் பெருமக்களுள் அடிகளாரும் ஒருவர், அவர் கொண்ட கருவி நாட்டுப்புறப் பாடல்வடிவு என்பது இக்கட்டுரையில் விளக்கும்.

# 12. அடிகளாரின் கல்விச் சிந்தனைகள்

தமிழ் கற்ற அறிஞர் பலர் இருந்தனர்[1]. வடமொழி வல்லார்களும் வாழ்ந்து வந்தனர்.[2] இருமொழியில் புலமை கைவரப்பெற்றவர்சிலர், அந்தக்காலத்தில்இருந்தவர்களாகத் தெரிகிறது. அவர் வாழ்ந்த காலம் நாயக்கர் ஆட்சி நிலவிய காலமாயினும், தெலுங்குமொழிக் கல்விபற்றிய குறிப் பேதும் காணப்பெறவில்லை. வடமொழியினும் தமிழ் மொழிக் கல்வி பரவலாக இருந்திருத்தல் வேண்டும். தமிழ் மொழிக் கல்வி மக்கள் கல்வியாகவும்,[3] பக்திப் படிப்பாகவும் இன்பம் துய்க்கத் துணை செய்யும் கலைக் கல்வியாகவும் நிலவி வந்துள்ளது என்பது குறிப்பிடத் தக்கது.

---

1. வல்லதமிழ் அறிஞர் (66-3)
2. வடமொழியிலே வல்லான் (66-2)
3. ஈட்டுதமிழ் என்தமிழ் (64-2)
4. வண்டமிழ்க்கிசை வாக மதிக்கவே (268-3)
   அடியெடுத்துக் கடவுளர்கள் தந்ததில்... (64-1)
5. முத்தமிழ் முழக்கம் (105-2)

இலக்கணம்[6] சாத்திரம்[7] தருக்கம்[8] முதலியன கற்கப் பெற்றன; தொழிலும்[9] கற்கப்பெற்றதாகத் தெரிகிறது. கலை ஆய்வு[10] பற்றி குறிப்பும் வந்துளது. கவிதைப் பயிற்சிக்கு வெறும் இலக்கண, இலக்கிய அறிவு போதா; உணர்வு, பக்தி உணர்வு வேண்டும் என்ற தெளிவும் இருந்தது.[11] பாடல்களை இசையுடனேயே பயில வேண்டும் என்ற மரபும் இருந்திருக்கிறது.[12]

சொற்களைக் கற்றல், சொற்பொருள் அறிதல் ஆகியவற்றோடு கல்வி முடிந்துவிடுவதில்லை.[13] கல்வியின் பயன் கற்றவழி நிற்றல். கற்ற அறிவாவது நிற்றலே ஆகும். அவ்வாறு கற்றவழி நில்லாத கல்வி கற்றவர்களைவிட கல்லாதவர்களே நல்லவர்கள் (ஏனெனில்) அவ்வாறு வீணில் கற்ற காலத்தை வேறு பணியில் ஈடுபடுத்தியிருக்கலாம்.[15] கல்வியின் பயன் துன்பம் நினையாது உயிர்க்கெலாம்இன்பம்

6. கருவி நன்னூல் (821)
7. கலை ஞானம் (822)
8. வாசக ஞானம் (823);கூர்த்த அறிவு (666)
9. ......கறங்கெனவே
சுற்றுந் தொழில்கற்று (454)
10. ஆயும் கலை (443)
11. பாகத்தி னாற்கவிதை பாடிப் படிக்கவே
பக்திநெறி இல்லை; (102)
12. மூவர்செய் பனுவலது
பகரவோ இசையும் இல்லை; (102)
13. சொல்லாலே பயனில்லை; (187 3); சொல்லை உன்னித் துடித்தல்லால் (200.1); சொற்ற சொற்கள் சுகாரம்ப மோ-229:2 சொல்லிற் பதர் களைந்து சொல்முடிவு காண் (931)
14. நிற்றல் வேண்டும்.... (229-2,3)
15. கல்லாத பேர்களே நல்லவர்கள்! நல்லவர்கள் (66-1)

செய்தவாகும்[16]. உண்மையை உணர்த்தாமல் வெறும் சொற்களால் மருட்டுவது கல்வியாகது; அஃது ஓர் செப்படி வித்தையே ஆகும்.[17] அருள்நெறியில் நிறுத்தவல்ல நூல் களையேகற்றல் வேண்டும்[18]. எப்பக்கமும் சாராது சார்பற்ற நிலைமையும், நடுநிலையாத் தன்மையும் தருதலே கல்வி ஆகும்.[19] கல்வியால் அடக்கம், ஒழுக்கம், செருக்கற்றிருத்தல் இரக்க மனம், ஈகைத் திறம், மெய் பேசல், சிலம், தவம், விரதம் முதலியன ஒருவர் பால் அமைய வேண்டும் என எதிர் பார்க்கப் பெற்றது.[20]

யான்எனும் அகந்தைதான் எள்ளளவும் மாறஇலை
யாதினும் அபிமானம்என்
சித்தமிசை குடிகொண்ட: தீகையொ டிரக்கம்என்
சென்மத்தும் நான்அறிகிலேன்;
சீலமொடு தவவிரதம் ஒருகனயி லாயினுந்
தெரிசனஞ் செய்துமறியேன்;
பொய்த்தமொழி அல்லால் மருந்துக்கும் மெய்ம்மொழி
புகன்றிடேன்; பிறர்கேட்கவே
போதிப்ப தல்லாது சும்மா இருந்தருள்
பொருந்திடாப் பேதை நானே.

கல்வியால் முன் குறிப்பிட்டவாறு உலகியல் பயன்பல உள. ஆனால் அவற்றோடு மட்டும் அது நிறைவுற்றிட வில்லை. அவற்றுக்கும் அப்பால் கல்வியின் நிறைவாக,

16. கொடிய பாழ்ங் கல்லாமை எத்தனை... (67-2)
17. வெல்லாமல் எவரையும் மருட்டிவிட கைவந்த வித்தை... (66-4)
18. நேயஅருள் மெய்யன்றோ, நிலயதோ நிற்கக் கல்லாதே ஏன்படித்தாய் (187-1); கல்லாத அறிவில் கடைப்பட்ட நான்... (1192)
19. நட்டனைய தாக்கற்ற கல்வி (50-3)
20. எத்தனை விதங்கள்தான் கற்கினும் கேட்கினும் என் இதயமும் ஒடுங்கஇல்லை (75.1,2,3)

முடிந்த குறிக்கோளாகக் கொள்ளத்தக்க பயன் ஒன்றுண்டு. அதுவே 'வாலறிவன் நற்றாள் தொழல்.' இறையைஅறிதல், உணர்தல், அடைதலே கற்றலின் பயனாகும்.[21]

சமயக் கல்வி சிறப்பானதாகக் கருதப் பெற்றது. இறைவன், இறையருள் பற்றிய கல்வியும் கேள்வியும் இன்றியமையாதன.[22] திருவருளே எல்லாம் எனக் கல்லாதவர், அறிவில் வறிஞரே ஆவர். இராசராசச் சோழன் காலத்து வேத தேவாரப் பள்ளிகள் தோற்றம் குறித்து அறிவோம். அவை தொடர்ந்து தாயுமானவர் காலத்தும் நிலவி வந்திருத்தல் வேண்டும். வேதங்கள், தேவாரத் திருமுறைகள் மரபு பிறழா இசையுடன் பயிலப் பெற்றன.[23]

ஆசை, அகந்தை, சிற்றின்பம் ஆகியன கல்வி அறிவை அழிக்கவல்லன. 'ஆசையாகிய பெருங்காற்றில் இலவம் பஞ்சு போல் மனம் அலையும்போது கற்ற, கேட்ட அறிவு தூர்ந்து போய் விடுகிறது.[24] 'நான்' என்ற அகந்தையுள்ள அறிவு அறிவாகாது; அது அமைதி தாராமல் அலைவு செய்யும்[25]. கற்ற கல்வி அறிவும், கேட்ட ஒழுக்க உணர்வும் பயின்ற தொழில் நலமும் சிற்றின்பத்தால் ஒருசேர அழிந்தொழிகின்றன.[26]

---

21. தா.பா.239-4.கனியென அருந்தஅன்றோகற்ற கல்வியே (239-4);கற்றதும் கேள்வி கேட்டதும் நின்னைக் கண்டிடும் பொருட்டன்றோ (309-4); கூர்த்தஅறிவத்தனையுங் கொள்ளைகொடுத் துன்னருளைப் பார்த்தவன் நான் (666); சொல்லிற் பதர்களைந்து சொல்முடிவு காணாதார் நெல்லின் பதறாய் நிற்பார். (931)
22. கல்லாத அறிவும், மேற்கேளாத கேள்வியும்...(42)
23. பாராயணப்பனுவல் மூவர்செய் பனுவலது பகரவோ இசையும் இல்லை(102.1)
24. ஆசையெனும் (322)
25. நானெனை நிற்கும் (171)
26. கற்றுப் பலபல கேள்விகள் (457)

வீடுதோறும் கல்வி விளக்கம், வீதிதோறும் பள்ளிகள் அன்று இல்லை. இன்றுபோல் கல்வி வாய்ப்பு எங்கும், எல்லார்க்கும், எளிதாகக்கிடைக்கும் வாய்ப்பும் அன்றில்லை. கல்வி கற்கப் பல இடங்களைத் தேடி அலைய வேண்டியிருந்தது; பற்பலவாறு முயன்று கற்க வேண்டியிருந்தது.[27]

தாம் உற்ற இறை அநுபவங்களையெல்லாம் உலகுக்கு உணர்த்துவதற்கு முனைந்த தாயுமானவர், சில உத்திகளை மேற்கொண்டுள்ளார். அவை கற்பிக்கும் நெறிகளாகக் கருதத் தக்கன. அவற்றையெல்லாம் பின்வரும் நான்கு தலைப்பில் வகைப்படுத்தலாம். ஒன்று மீண்டும் மீண்டும் ஒரு கருத்தை ஒரே தொடரில், தொடர்ந்து பாடலில் ஒரு குறிப்பிட்ட பகுதியில், இறுதியில் வருமாறு பாடுதல்; வினவி வினவினவிக் கேட்போர் கவனத்தைக் கவர முயலுதல்; உவமை பலவற்றை அடுக்கிக் கூற வந்த உண்மையை உள்ளத்தில் அழுந்தப் பதிய வைத்தல்; பழகிய பழமொழிகளைப் பயன் படுத்திக் கூற வந்த மெய்யுணர்வுக் கருத்துகளைத் தெளிவு செய்தல் என்பனவே அவை.

'பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூர ணானந்தமே', 'சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே சின்மயா னந்தகுருவே' முதலான தொடர்கள் பதிகங்கள்தோறும் பாடல் இறுதியில் அமைந்து அந்தந்த உண்மைகளை மீண்டும் மீண்டும் நினைவூட்டக் காணலாம். இவ்வாறு பரிபூரணானந்தம் தொடங்கி முதல் 12 பதிகங்கள் அமைந்துள.

ஒன்றன் பின் ஒன்றாக வினா பல எழுப்பிக் கேட்போரைச் சிந்திக்கத் தூண்டி முடிந்த முடிபாகத் தான் கண்ட உண்மையை உணர்த்தல் அடுத்த உத்தியாகும்.

27. 182. 1,2........பன் னாள்உலகத் தோடி ஆடிக் கற்றதும்கேட் டதும் (182. 1,2); ஆடித் திரிந்து நான் கற்றதும் கேட்டதும் (104)

அங்கிங் கெனாதபடி எங்கும்ப்ர காசமாய்
ஆனந்த பூர்த்தி யாகி
அருளொடு நிறைந்ததெது? தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடி யெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது?

என்னும் முதல் பாடலே இதற்கு எடுத்துக் காட்டாகும். உவமையை அடுக்கிக்கூறி உண்மையைப் பதிய வைக்கும் நெறிவழி அமைந்த பாடல் பல. 'உள்ளங்கை நெல்லிக்கனி' 'காய்த்த கரத்திற்கே கல்லடி' முதலிய பழமொழிகள் இருபத்தெட்டு இடங்களில் மேற்கொள்ளப் பெற்றுள. அவை யாவும் மெய்ப்பொருள் உண்மைகளைத் தெளிவு செய்ய வல்லன.



## பின்னிணைப்பு—1

# துணை நூல் பட்டியல்

### அ. தமிழ் நூல்கள்


1. *அமிர்த சாகரர்*, **யாப்பருங்கலக் காரிகை, (பதிப்பு + உரை)** *குமாரசாமிப் புலவர், சுன்னாகம், 1938.*

2. *அருணாசலம், ப.,* **பக்தி இலக்கியம்,** *சென்னை, 1973.*

3. *அருணாசலம், மு., (பதிப்பு)* **மெய்கண்ட சாத்திரம்** *சாது அச்சகம், சென்னை, 1942.*

4. *அருணை வடிவேல், சி., (பதிப்பாசிரியர்)* **தாயுமான சுவாமிகள்பாடல்** *தருமையாதீனம், 1965.*

5. *இராமநாத பிள்ளை, ப., (பதிப்பு + உரை)* **தாயுமான அடிகள் திருப்பாடல்கள்** (தெ.இ.சை.சி.நூ கழகம்) சென்னை, 1966.

6. *இராமலிங்க சுவாமிகள்,* **திருவருட்பா** *ஆறாவது திருமுறை, ச. சு. ச. சங்கப் பதிப்பு, சென்னை, 1942. கல்யாண சுந்தர முதலியார், பூவை(பதிப்பு+ உரை)* **தாயுமான சுவாமிகள் திருப்பாடற்றிரட்டு,** *சென்னை, 1957.*

7. *இராமநாத பிள்ளை, ப., சிதம்பரனார், அ., (பதிப்பு + உரை)* **திருமந்திரம்,** *(தெ. இ. சை.சி. நூ. கழகம்) சென்னை, 1962.*

8. **கழகப் பழமொழி அகரவரிசை,** (தெ. இ. செ. சி. நூ. கழகம்) சென்னை, 1961.

9. கல்யாண சுந்தரனார், திரு. வி., **கடவுட் காட்சியும் தாயுமானவரும்,** சென்னை, 1972.

10. கந்தசாமிப்பிள்ளை, ஏ., (பதிப்பு) **தேவாரத் திருப்பதிகங்கள்,** தருமையாதீனம், 1955,

11. குழந்தை, **தொடையதிகாரம்,** சென்னை, 1967.

12. குழந்தை, **யாப்பதிகாரம்,** சென்னை, 1968.

13. செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 12, பரல் 2.

14, செய்குதம்பிப் பாவலர், (பதிப்பு) **குணங்குடி மஸ்தான் திருப்பாடற்றிரட்டு**

15. சுப்பிரமணிய பிள்ளை, க., **தாயுமான சுவாமிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்,** சென்னை, 1969.

16. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள், (பதிப்பு) **தேவாரத் திருப்பதிகங்கள்,** ஐந்தாம் திருமுறை தருமையாதீனம், 1961.

17. நச்சினார்க்கினியர், (உரை) **தொல்காப்பியப் பொருளதிகாரம்,** செய்யுளியல், சென்னை, 1965.

18. பட்டினத்தார், **பட்டினத்தார் பாடல்கள் (பதிப்பு),** இராமனாத முதலியார், ஏ., தாண்டவராய பிள்ளை தெரு, சென்னை, 1951.

19, பரந்தாமனார் அ. கி., **மதுரை நாயக்கர் வரலாறு,** சென்னை, 1960.

20. மாணிக்கவாசக முதலியார், முத்து, சு. (பதிப்பு) **தேவாரத் திருப்பதிகங்கள்,** இரண்டாம் நான்காம் திருமுறைகள், தருமையாதீனம், 1954, 1955.

21. வெள்ளை வாரணம், க., **பன்னிருதிருமுறை வரலாறு** பகுதி 1, முதல் ஏழு திருமுறைகள், அண்ணாமலைப் பல்கலைக்கழகம். 1962.

## ஆ. ஆங்கில நூல்கள்


22. Chidambaranatha Chettiar, A., *Advanced Studies in Tamil Prosody*, Annamalai nagar, 1943.

23. Bhandarka, R. G., *Vaisnavism, Saivism and Minor Religious systems*, 1928.

24. Bhattacharya Haridas, *The Cultural Horitage of India, Vol. IV.*, The Religion, (The Ramakrishna Mission Institute of Calcutta, 1956.

25. Subbu Reddiar, N., *Religion and Philosophy of Nalayira Divya Prabandam Sri Venkateswara University*, Tirupathi, 1976.

26. Tambyah, T. Issac, *Psalms of a Saiva Saint* Madras, (Diocesan Press), 1925.

27. Tamil Lexicon (Madras Uniuersity).

# பின்னிணைப்பு—2

## (எண்—பக்க எண்)

## பேராசிரியர் டாக்டர் பொன். சௌரிராசனாரின் நூல்கள்

(பாரி நிலையத்தில் கிடைப்பன)

**படைப்பிலக்கியம் :**

புதினம் : 1) கள்ளி மலர்
2) தாயகம்
(தமிழக அரசு முதற் பரிசு பெற்றது)

சிறுகதை : 3) கதை மலர்கள்
(தெலுங்கு, கன்னட மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்றுள)
4) பரிசு

கவிதை : 5) தங்கக் கோழிக் குஞ்சு
6) மழலை மலர்கள்
(தமிழக அரசு கரும்பலகைத் திட்டத்தில் தெரிவு செய்யப் பெற்றுள்ளது)

**இலக்கியக் கட்டுரை நூல்கள் :**

7) கட்டுரை மணிகள்
8) வாழ்வும் வழியும்

**ஆராய்ச்சி :**

9) A critical Study of Saint Tayumanavar
10) National Conciousness in Tamil Literature
11) சித்திரச் சிலம்பு
12) அன்னமய்ய-ஓர் அறிமுகம்
13) மு. வ. புதினங்களில் தமிழ்-தமிழினம்
14) மு. வ. வும் தமிழியமும்-காந்தியமும் ஆன்மியமும்

**வாழ்க்கை வரலாறு :**

15) நம்மாழ்வார்
16) அம்மையே அப்பா

**மொழிபெயர்ப்பு : தெலுங்கிலிருந்து**

17) பண்டித பரமேசுவர சாத்திரி உயில்
18) கண்ணன் கருத்துரை

**ஆங்கிலத்திலிருந்து**

19) தியாகராஜர்
20) மலையாள சுவாமிகள்

**செய்யுட் தொகுப்பு :**

21) தமிழ் இலக்கிய அறிமுகம்.

# பிழை-திருத்தம்

| பக். | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | அடிக் 12 | எந்தாட்கண்ணி | எந்நாட்கண்ணி |
| | ,, | ஆனதோ | ஆகாதோ |
| 12 | 11 | சித்தாத்தம் | சித்தாந்தம் |
| 15 | 10 | தன்னை | தம்மை |
| 16 | 10 | வான | மோன |
| | 11 | நடுத்திரள் | நதித்திரள் |
| 19 | 19 | சித்தாத்த | சித்தாந்த |
| 23 | 6 | உறக்கமில்லாள் | உறக்கமில்லான் |
| 24 | 11 | போசனமயை | பேசாமையை |
| 25 | 5 | கடந்து | கிடந்து |
| 29 | 28 | கருத்தையே | கருத்தையோ |
| 34 | அடிக் 3 | வெள்ளைவாசரு | வெள்ளைவாரணர் |
| 40 | 9 | ஆறும் ஏழும் | ஆறிலும் ஏழிலும் |
| ,, | 21 | துறவால் என்று | துறவால் வீடுபேறில்லை என்று |
| 48 | 11 | அருபுரிவனாக | அருள்புரிவானாக |
| 79 | 15 | திருத்து | திருந்து |
| 80 | 13 | சிவயோகம் | சிவபோகம் |
| 81 | 14 | அலைபுலைசேர் | அலைபுனல்சேர் |
| | 22 | வனங்கம் | வணங்கும் |
| 84 | 18 | தரும் | தகும் |
| | 20 | எப்படி | அப்படி |
| 85 | 3 | வினையனத் | வினையனந் |
| 86 | 27 | அழுத்த | அழுத்தந் திருத்தமாக |
| 87 | 9 | பிறவிகள் | பிறவிதான் |
| | 10 | யாரினும் | யாதினும் |
| 88 | 15 | தமிர்ப் பாடல் | தமிழ்ப்பாடல் |
| 89 | 13 | சிப்பிர | சுப்பிர |
| 92 | 24 | கண்டனவே | கண்டளவே |
| 93 | 7 | யாற்றியே அட்டதிக்கிடவும் | அகற்றியே அச்ச நீக்கிடவும் |
| 96 | 8 | கமர்ந்து | கமழ்ந்து |

| | | | |
|---|---|---|---|
| 97 | 17 | மணிபாடக | மணிவாசக |
| 99 | 2 | நின்றாள் | நின்றான் |
| | 12 | சுபோதயம் | சுகோதயம் |
| | 16 | தொழுவேனோப் | தொழுவேனோ |
| 100 | 6 | துன்பத்தில் | வெள்ளத்தில் |
| 105 | 9 | நன்று | ஒன்று |
| 112 | 18 | மாடறு | மிடறு |
| 115 | 25 | இறைவள் | இறைவன் |
| 116 | 21 | முக்கணங்கள் | முக்குணங்கள் |
| 117 | 22 | இருதிறள் | இருதிறன் |
| 122 | 19 | டிருந்தமை | டதற்கிசைந்த |
| 124 | 12 | களிவு | கனிவு |
| | 15 | மற்று | மாற்று |
| 126 | 11 | பிருக்குதி | பிரகிருதி |
| 128 | 3 | செய்விற்கும | செய்வதற்கும் |
| 130 | 10 | நெறி | செறி |
| | 15 | தமல | கமல |
| | 31 | இதுபரமுத்தி | இது பரமமுத்தி |
| 131 | 13 | விடுதல் | விடுதலை |
| 132 | 30 | சேர்த்தார் | சேர்ந்தார் |
| 133 | 15 | கலக்காரு | கலக்கவரு |
| | 24 | தரு துவேதம் | ஒரு விவேகம் |
| 139 | 3 | உரைத்து | உழைத்து |
| | 6 | சோமாற்கே | கோமாற்கே |
| 140 | 1 | அவள் | அவன் |
| 143 | 23 | மன்றுந் | மன்றுள் |
| 144 | 17 | அலையகத்தே | அவையகத்தே |
| 152 | 15 | தூசு | காசு |
| 156 | 15 | பொந்துகளிள் | பொந்துகளின் |
| 160 | 20 | அழித்துவிடும் | அழிந்துவிடும் |
| 167 | 1 | தாடவை | தாடலை |
| 176 | 5 | நிலையாத் | நிலையாந் |
| | 7 | சிலம் | சீலம் |